# கல்கி

KALKI 29.10.1972 45காசு

சிறுகதைச் சிறப்பு மலர்



# வாழ்வே மென்மையின் உருவகம்

## 'க்ளிக்' அடித்துவைப்பீர்..நிரந்தரம்

எப்போதுமே உங்கள் கையோடிருக்கட்டும் தப்பாத் துணையான க்ளிக் III. மறைந்தோடும் வாழ்வின் மணியான கணங்களை நிரந்தரமாக்கிக் காப்பீர்— நினைவுமுகம் கண்முன் நிற்பதற்கே.

'இலக்கு வைத்ததும் சடக்' என எடுக்கவே ஆக்பா க்ளிக். காரியத் தகுதி வாய்ந்தது. உண்மை தவறாதது. கையாள எளிது. சிக்கனமிக்கது.

- 120 பிலிம் ரோல் ஒவ்வொன்றுக்கும் பெரிது பெரிதாக (6 x 6 செமீ.) படங்களைப் பெறுவீர்கள்.
- சிறப்பானதோர் தயாரத் தோலுறை, போர்ட்ரெய்ட் லென்ஸ், ஃப்ளாஷ்கன் ஆகியவை மேற்கொண்டு தனிவிலைக்குக் கிடைக்கும்.

தெள்ளத் தெளிவான பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் கண்டிப்புடன் கோருவீர் ஆக்பா-கேவார்ட் போட்டோத் தாள்களை.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

ஆக்பா-கேவார்ட் AG லீவர்குஸன் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்போர்: நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.

விலை
ரூ. 56.25
(எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி).

SIMOES-AG-11-TAM





ஏகபோக விநியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
பம்பாய் • நியூ டெல்லி • கல்கத்தா • சென்னை.

புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆன்ட்வெர்ப்/ லீவர்குஸன் ஆகியோரின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.



ஆக்பா க்ளிக்—இந்தியாவின் உன்னதப் புகழ்பெற்ற காமிரா.

டாக்டர், நீங்கள் சொன்னது முற்றிலும் உண்மை.
இப்போதெல்லாம் எங்கள் குடும்பத்தில்
அனைவரும் மிகுந்த சுறுசுறுப்புடன் இருக்கின்றனர்...

## 'ஆம் ஜானகி, எனக்குத் தெரிந்த ஆரோக்கியமுள்ள குடும்பங்களில் அனைவரும் 'ஹார்லிக்ஸ்' பருகுகின்றனர். ஊட்டத்தின் முக்கிய. ஆதாரமே அதுதான்'

**என்கிறார் ஜானகியின் டாக்டர்.**

அவர் 'ஹார்லிக்ஸ்' தரும் சிறந்த ஊட்டத்தின் குணங்களைப்பற்றி நன்கு அறிந்தவர். ஜீவாதாரமான புரதம் மற்றும் பால், கோதுமை, மால்டெட் பார்லி, இவை தரும் ஊட்டச் சிறப்பும் இயற்கைச் சத்துக்களும் அடங்கியதால் 'ஹார்லிக்ஸ்' நிகரற்று விளங்குகிறது. உதாரணமாக, பாலிலிருக்கும் ஊட்டச் சத்தை இருமடங்காகப் பெருக்குகிறது 'ஹார்லிக்ஸ்'.
குடும்பத்தினரின் ஆரோக்கியத்தைப் பொறுத்த வரையில் மிகச் சிறந்ததென கருதப்படுவது 'ஹார்லிக்ஸ்' தான்.
'ஹார்லிக்ஸ்'—ஒரு பதிவு பெற்ற ட்ரேட் மார்க்.



'ஹார்லிக்ஸ்'—ஒரு பதிவு பெற்ற ட்ரேட் மார்க்

**முழுமையான ஊட்டம் பெற–'ஹார்லிக்ஸ்'**

# நீங்கள் இன்று எவ்வளவு சம்பாதிக்கிறீர்கள் என்பது முக்கியம் அல்ல, நாளைக்காக எவ்வளவு சேமிக்கிறீர்கள் என்பது தான் முக்கியம்

கரண்ட், சேவிங்ஸ், ஃபிக்ஸ்ட் மற்றும் ரெக்கரிங் டிப்பாஸிட் ஆகிய கணக்குகளை துவக்கவும், சேமிக்கவும் பல வசதிகளை நாங்கள் அளிக்கிறோம்.




தலைமை காரியாலயம் :
கல்கத்தா

UCO-3/72

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின் ஈரல், குலைக் கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் I

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| தாராபுரம் | 1 | காலை 8-30 -- 9-30 | முருகன் மெடிகல் ஸ்டோர்ஸ், சர்ச் ரோடு. |
| பழனி | 1 | காலை 10-30 -- 11-30 | ஜெயா பார்மஸி |
| உடுமலைப்பேட்டை | 1 | மாலை 3-00 -- 4-00 | ராஜேந்திரா அண்டு கோ., கடை வீதி |
| பொள்ளாச்சி | 1 | மாலை 5-00 -- 6-00 | தி எம்பயர் பார்மஸி. |
| பாலக்காடு | 2<br>2 | காலை 9-11<br>மாலை 3 - 5 | K. H. பரசுராம், கல்தூண்பேட்டை.<br>Rainbow Quarters, Opp. Govt. Hospital. |
| கோயமுத்தூர் | 3<br>3 | காலை 9-11<br>மாலை 2 - 4 | காசிநாத் அண்டு கோ.,<br>(முனிசிபல் ஆபீஸ் எதிர்புறம்) |
| மேட்டுப்பாளையம் | 3 | மாலை 5-00 -- 6-00 | தி மேட்டுப் பாளையம் மெடிகல் ஸ்டோர்ஸ். |
| சத்தியமங்கலம் | 4 | காலை 8-00 -- 9-00 | C. R. K. மெடிகல்ஸ், கடைவீதி |
| கோபி | 4 | காலை 10-00 -- 11-00 | வாசன் அண்டு கோ., கச்சேரி வீதி. |
| பவானி | 4 | மாலை 2-00 -- 3-00 | M. L. செட்டியார் அண்டு சன்ஸ், கடை வீதி. |
| மேட்டூர் அணை | 4 | மாலை 4-30 -- 5-30 | ஸ்ரீ ராமன் வாட்ச். |
| ஈரோடு | 5 | காலை 9-00 -- 11-00 | ஸ்ரீ கிருஷ்ணா டாக்கீஸ். |
| திருப்பூர் | 5 | மாலை 4-00 -- 5-30 | P. R. மணியம் ஸ்டோர்ஸ், பல்லடம் ரோடு. |
| திருச்சி | 6 | காலை 11-00 to<br>மாலை 6-00 | திருச்சி ஆயுர்வேதிக் யூனியன்,<br>சின்னக் கடைத் தெரு. |
| தஞ்சாவூர் | 7 | காலை 7-00 -- 9-00 | Dr. S. வெங்கடராஜன் வைத்தியசாலை,<br>கொநாயக்கன் தெரு. |
| கும்பகோணம் | 7, 17,27 | காலை 10-00 to<br>மாலை 5-00 | ஸ்ரீ சக்தி விலாஸ் வைத்தியசாலை கிராஞ்சு,<br>94, டவுன் ஹைஸ்கூல் ரோடு. |
| சீர்காழி | 8 | காலை 7-00 -- 8-00 | பிரம்ம வித்யா ஆயுர்வேத வைத்தியசாலை,<br>ரயில்வே ஸ்டேஷன் ரோடு. |
| மாயூரம் | 8 | காலை 9-00 -- 11-00 | ஸ்ரீ வெங்கடேசா மெடிகல் ஹால், பட்டமங்கலம் தெரு. |
| நாகப்பட்டணம் | 8 | மாலை 5-00 -- 6-00 | நாகை மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திருவாரூர் | 9 | காலை 7-30 -- 9-00 | தன்வந்தரி மெடிகல் ஹால், 21, மடப்புரம் பாட்டை. |
| விஜயபுரம் | 9 | காலை 10-00 -- 11-00 | சகுந்தலா பார்மஸி, நாகை ரோடு. |
| திருத்துறைப்பூண்டி | 9 | மாலை 2-00 -- 3-30 | ஸ்ரீ T. V. சந்திரசேகரம் பிள்ளை, கடை வீதி. |
| பட்டுக்கோட்டை | 9 | மாலை 4-30 -- 6-30 | கோபால் விலாஸ், பெரிய தெரு. |
| புதுக்கோட்டை | 10 | காலை 8-00 -- 10-00 | நியூ லக்ஷ்மி டிஸ்பென்ஸரி, கீழ ராஜவீதி. |
| தேவகோட்டை | 10 | மாலை 2-30 -- 3-30 | ஸ்ரீ சோமசுந்தரம் மெடிகல் ஸ்டோர்ஸ், ஆர்ச்சு ரோடு. |
| காரைக்குடி | 10 | மாலை 4-30 -- 6-00 | நியூ கௌரி வாட்ச், மகர் நோம்பு அக்ரஹாரம். |
| சிவகெங்கை | 11 | காலை 8-30 -- 10-00 | கௌரி அண்டு கோ., கடை வீதி. |
| மதுரை<br>,, | 11<br>11 | காலை 11-00-12-30<br>மாலை 3-00- 6-00 | T. N. சொக்கலிங்கம்பிள்ளை சன்ஸ்,<br>வடக்கு சித்திரை வீதி. |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 3 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை, B-II, 1வது கிராஸ், தில்லைநகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

**ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,** கரூர் (போன் : 87)
திருச்சி ஜில்லா

உங்கள் வாய்க்கு பூரண பாது
காப்பு அளிக்கும் டூத் பேஸ்ட் இதுவே—**நீம்**

நீம் டூத் பேஸ்ட் உங்கள் பற்களை சுத்தம் செய்வதுடன் வேறு பல நன்மைகளையும் தருகின்றன. அதிலுள்ள சுகாதாரத்திற்கேற்ற அரிய பொருள்கள் உங்கள் பற்களை பலப்படுத்தி, ஈறுகளில் விஷக் கிருமிகள் தொத்திக் கொள்ளாமல் தடுத்து, கெட்ட சுவாசத்தை அறவே அகற்றி வாயை தூய்மை படுத்துகிறது.




இது ஒரு கல்கத்தா
கெமிகல் தயாரிப்பு.

MTP/2-70 Tam

வாழ்க்கையின் சிறந்த கட்டங்களுக்கு
சாஸ்திரியாரின் கட்டங்கள் எடுப்பானவை

கல்கத்தா : 14-A, Park Side Road, Calcutta-26
Phone : 46 - 3976
ஜம்ஷெட்பூர் : Madrasi Sammelani, "L" Road

# சம்பூர்ண சாஸ்திரியார் & சன்ஸ்

வடக்கு மாடவீதி,
மயிலாப்பூர், சென்னை-4.
போன் : 71719.





உறுதியான கட்டடங்கள் : கிராமங்களில் - 2

# சிறுகதைச் சிறப்பு மலர்

பரிதாபி ஐப்பசி 13 — அக்டோபர் 29, 1972



## கல்கி

## பொருளடக்கம்




| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

மாதரின் அழகு மேலும் பரிமளிக்க...

லக்ஷ்மியின்

வாயில் புடவைகள்





தி லக்ஷ்மி மில்ஸ் கம்பெனி லிமிடெட் கோயம்புத்தூர்

உயர்ந்த துணிகளின் உன்னத சின்னம்

அன்றாடம் உடுப்பதற்கும், எல்லா
விசேஷ சந்தர்ப்பங்களுக்கும்
உகந்த துணி

கவர்ச்சியான அணி
இலேசானது கசங்காதது
பாலிஸ்டர்-வாயில்
மேம்பட்டது.

இறக்குமதி செய்த
90s & 100s உயர்ந்த
பருத்தியினால்
செய்யப்பட்டவை.

VSK-LM-476 Tm

**விற்பனை ஏஜெண்டுகள்:**

இராம்கோ சுதேசீஸ்
156, ஒப்பணக்கார வீதி
கோயமுத்தூர்-1

வெங்கடேஷ் வஸ்திராலயா
40, பாஷ்யகாரலு வீதி
ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்-2

**மொத்த ஷோ-ரூம்கள்:**

17-93, ஒப்பணக்கார வீதி
கோயமுத்தூர்-1

9-194, ரேஸ்கோர்ஸ் ரோடு
கோயமுத்தூர்-12

387, மெயின் ரோடு, கோவில்பட்டி

40, மவுண்ட் ரோடு, சென்னை-6

**பிரத்யேக விற்பனை நிலையங்கள்:**

எஸ். எஸ். எஸ். கிளாத் ஷாப்
1-12, தெற்கு சித்திரை வீதி, மதுரை-1

பி. கே. டெக்ஸ்டைல்ஸ், 48, டி.எம். பிக்கும், திருநெல்வேலி ஜங்ஷன்

லக்ஷ்மி கிளாத் ஸ்டோர்ஸ்
296, மெயின் ரோடு, இராஜபாளையம்

கல்கி மலர் 32 இதழ் 13



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# மாணவர் சமுதாயமும் அரசியலும்

பண வீக்கமும் விலைவாசி ஏற்றமும் நாட்டில் மக்களுக்கு எவ்வளவு கவலை தருகின்றனவோ அதே அளவுக்கு, ஏன், அதற்கு மேலேயும்கூட, கவலை தரும் அம்சம் கல்லூரி மாணவர்களிடையே காணப்படும் அமைதிக் குலைவு. இதைத் தொடர்ந்து நடைபெறும் ஆர்ப்பாட்டங்கள் சமீப காலத்தில் மிகத் தீவிரமடைந்து, வளர்ந்து விட்டிருக்கின்றன. பரவலாக எல்லா மாநிலங்களிலுமே விரும்பத் தகாத இந்நிலை காணப்படுகிறது என்பதும், இதைச் சமாளிக்க முடியாமல் மாநில அரசுகள் திண்டாடுகின்றன என்பதும் கவலை தரும் விஷயங்கள்.

ஆர்ப்பாட்டங்கள் எந்தக் காரணத்தைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டாலும் அவை வன்முறையில் சென்று, துப்பாக்கிச் சூட்டிலும், அமைதிக் குலைவிலும் தான் முடிகின்றன.

பஞ்சாப் மாநிலத்தில் மோகா என்னுமிடத்தில் சினிமாக் கொட்டகையில் கூடியிருந்த மாணவர்கள், படம் பார்க்கக் கட்டணச் சலுகை கேட்டு ஆர்ப்பாட்டம் நடத்தினர். அருகிலிருந்த பெட்ரோல் பங்குக்குத் தீ வைத்தனர். தொடர்ந்து கல் வீச்சு, பஸ் கொளுத்துதல், போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம், மாணவர்கள் மரணம், அரசியல் கட்சிகளின் ஆதரவு, கண்டனம் எல்லாம் நடந்தன.

புதுதில்லியில் கரோல்பாக், ஷாதரா பீகுதிகளில் ஏறக்குறைய இதே முறையில் சம்பவங்கள் நிகழ்ந்தன.

பீஹார் மாநிலத்திலும் அஸ்ஸாமிலும் இம்மாதிரி மாணவர் கிளர்ச்சிகள் பெரிதாக நடந்திருக்கின்றன.

பொதுவாக எல்லா மாநிலங்களிலும் நிலைமை ஏறக்குறைய இது போலவே.

தமிழ்நாட்டிலும் இப்போது மாணவர் கிளர்ச்சிகளையும், கண்ணீர்ப் புகை பிரயோகங்களையும், கல்லூரிகள் மூடப்படுவதையும் பார்க்கிறோம்.

இவற்றின் விளைவுகளைக் கவனித்தல் அவசியம். கல்லூரிக்குப் படிக்கச் செல்லும் மாணவர்கள், தங்கள் அறிவைப் பெருக்கிக் கொள்ள வேண்டியதையே முதற் கடமையாகக் கொள்ள வேண்டும். சொந்த முறையிலோ மாற்றார்களின் தூண்டுதல்களுக்குட்பட்டோ, அவசியமற்ற அலுவல்களில் மாணவர்கள் காலத்தை வீணடிப்பது மிக மிக வருந்தத்தக்க நிலைமை.

இதனால் அரசியல் அறிவு மாணவர்களுக்குத் தேவை இல்லை என்பதாக அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது. பல நாட்டு அரசியல் முறைகள், கட்சி அமைப்புகள், அவற்றின் நன்மை — தீமைகள் முதலியவை பற்றி விருப்பு வெறுப்பு கலக்காத முறையில் தெரிந்து கொள்வது அவசியம்தான். ஆனால் நேரடியாக அரசியலில் புகுவது சரியல்ல. படிப்பு முடிந்தபின் அரசியலில் புகுவதற்கு நிறைய இடமிருக்கிறது. அரசியல் கட்சிகளுக்கு ஆதரவு, எதிர்ப்பு என்று மாணவர்கள் தலையிடும்போது தான் அபாயம் ஏற்படுகிறது. கல் வீச்சு, ரயில் - பஸ் நிறுத்தம் முதலியவற்றால் அப்பாவிப் பொதுமக்களை அவதிக்குள்ளாக்குவது மாணவ சமூகத்துக்கு அழகல்ல.

உணர்ச்சி வசப்படக்கூடிய வர்க்கத்தினர் என்பதாலும், மாணவர் சமுதாயம் சக்தி வாய்ந்தது என்பதாலும் அரசியல் கட்சியினர், பேச்சளவில் உயர்ந்த கருத்துக்களை உதிர்த்தாலும், நடைமுறையில் இச்சமுதாயத்தினரைப் பயன்படுத்திக்கொள்ளத் தவறுவதில்லை. இச்சூழலில் மாணவ சமுதாயத்தினரின் நிலை மோசமடைகிறது. அவர்களின் அறிவு வளர்ச்சி தடைப்படுகிறது.

இந்த அவல நிலையை மாணவர்கள் உணர்ந்து கொண்டு, தாங்களாகவே அவசியமான கட்டுப்பாடுகளையும், நன்னடத்தை முறைகளையும் வகுத்துக் கொள்ள வேண்டும். கல்விக்கும் அறிவு வளர்ச்சிக்கும் அவர்கள் முக்கியத்துவம் கொடுத்து, வெளியார் தூண்டுதலைத் தள்ளி வைக்க உறுதி பூண்டால், இப்போது உள்ள நிலைமை மாறும். இதற்கான அமைப்புக்களை மாணவர்களே ஏற்படுத்திக்கொண்டு, எந்த வகையிலும் தங்கள் கல்வி முன்னேற்றம் பாதிக்கப்படாத முறையில் செயல்படுவது அவர்களுக்கும் நலம், நாட்டுக்கும் சிறப்பு.

தொழிலாளர், அரசு ஊழியர் ஆகியோருக்குத் தரப்பட்ட போனஸ், இடைக்கால நிவாரணங்களைக் கடந்த மூன்று வாரங்களில் விலைவாசி உயர்வு விழுங்கிவிட்டது. - பி. டி. ஐ.



“நான் சர்வாதிகாரி அல்ல, என் சகாக்களைக் கலந்தாலோசியாமல் நான் எந்த முடிவும் எடுத்ததில்லை.” - முதல்வர்.




விலைவாசி உயர்வைத் தடுக்கத் தாம் மேற்கொண்ட நடவடிக்கைகள் விபரீதமாகிவிட்டதாகக் கவலையும் தெரிவித்திருக்கிறார் திரு சாவன்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

இன்றைய உலக அரசியலில் உருவாகியிருக்கும் மிகப் பெரிய மாற்றம் கம்யூனிஸ்ட் சீன அரசிடம் பிற நாட்டவருக்கு ஏற்பட்டிருக்கும் நம்பிக்கையே ஆகும். எப்படியோ இந்த நன் மதிப்பை சீன கம்யூனிஸ்ட் அரசாங்கம் பெற்று விட்டிருக்கிறது. அதனுடைய வாக்குறுதிகள் நம்பப்படுகின்றன. ஆனால் நான் சீன அரசின் வாக்குறுதிகளையும் அறிக்கைகளையும் நம்பவில்லை. என்னைப் போலவே இந்தியப் பிரதமரும் இவ்விஷயத்தில் அவநம்பிக்கை கொள்வார் என்றும், உலகின் பிற நாடுகள் சீன அரசாங்கத்தின் வார்த்தைகளைப் புதிதாக நம்பக் கற்றுக் கொண்டிருப்பது போல் தாமும் நம்பத் தொடங்கிவிட மாட்டார் என்றும் எதிர்பார்க்கிறேன். இந்தியப் பிரதமர் என்னைப்போலவே அவநம்பிக்கை கொள்வதற்குப் பதில் சீன அரசாங்கத்தின் வாக்குறுதிகள் உலக அரங்கில் பெற்றுள்ள புதிய மதிப்புக்குத் தாமும் இரையாகி விட்டாரானால் தென் ஆசியா முழுவதும் கம்யூனிஸ்டுகளுக்குப் போய்ச் சேர்ந்து விடும். நான் கூறுவது மனச் சோர்வு அளிக்கக் கூடியதுதான்; ஆனால் என் மனத்துக்குத் தோன்றும் உண்மையை எழுதுவதென்றால் இவ்விஷயம் பற்றி நான் மகிழ்ச்சிகரமாக எழுத முடியாது.

★

மத்யஸ்தர்களின் யோசனைப்படி கூட்டாட்சி நடத்துவதற்குத் தென் வியட்நாம் உடன்படவில்லை என்று செய்திகள் கூறுகின்றன. தென் வியட்நாம் ஜனாதிபதி தியூ, கூட்டாட்சி பதவிக்கு வந்தால் கம்யூனிஸ்டுகளின் ஆதிக்கமே நடக்கும் என்று சஞ்சலத்துடன் எதிர்பார்ப்பதாகத் தெரிகிறது. இப்படி அவர் நினைப்பது முற்றிலும் சரியே.

# தொழில் துறையில் சிறந்த தர்மசீலர்

ஸ்ரீ எஸ். என். என். சங்கரலிங்க அய்யர் அவர்களின் மறைவில் தமிழகம் தலைசிறந்த ஒரு தொழில் துறைப் பிரமுகரை, தர்மிஷ்டரை இழந்திருக்கிறது.

தென்னகத்தின் மிகப் பெரிய சிமெட்டித் தொழிற்சாலையாகிய ''இந்தியா செமண்ட்''ஐ நிறுவியவர் ஸ்ரீ சங்கரலிங்க அய்யர். இன்டஸ்டிரியல் கெமிகல்ஸ், 'தான்கோ' தொழிலகங்கள் உட்படப் பலமுகவியத்துவம் வாய்ந்த தொழிற்சாலைகளின் காரண புருஷர் அவரே.

ஆரம்ப காலத்தில் பாங்குத் தொழிலில் பெயரெடுத்தார். மகா யுத்தம் முடிந்த பிறகு திருநெல்வேலி மாவட்டத்தில் தாழையூத்தில் சுண்ணாம்புக் கற்கள் நிறையக் கிடைப்பது கண்டு அங்கு சிமெட்டித் தொழிற்சாலையைத் தொடங்க முடிவு செய்தார். திட்டமிடும் திறன், தொழிலாற்றல், உற்சாகம், பிறரையும் உற்சாகப்படுத்தித் தம்முடன் ஒத்துழைக்கச் செய்யும் சாதுரியம் ஆகியவற்றைக் குறைவரப் பெற்ற ஸ்ரீ அய்யரவர்கள் இந்தியா செமண்ட்ஸை அற்புதமாக உருவாக்கி, தொழில் துறையில் ஒரு முக்கியமான புள்ளி ஆனார்.



தனம் படைத்தவராக மட்டுமின்றி மனம் படைத்தவராக இருந்ததே ஸ்ரீ சங்கரலிங்கய்யரின் சிறப்பு. தொழில் துறையினர் அவரது அன்பு மனத்தை, தயங்காமல் காரியம் செய்யும் பாங்கினை நன்கு அறிவர். தொழில் துறையினர் மட்டுமின்றிப் பொதுமக்களும் அவரது தருமப் பணிகளை நன்றியுடன் நினைவு கூருவர். 1964ல் அவர் நிறுவிய ''சங்கர் சாரிட்டீஸ்'' ஏழை எளியவர்களுக்குப் பல இனங்களில் பேருதவி புரிந்து வருகிறது. இலவச வைத்தியசாலைகள், மகப்பேறு மருத்துவமனைகள், அனாதை இல்லங்கள், அங்கவீனர் பராமரிப்பு முதலிய பல நற்பணிகளை இந்த நிறுவனம் சிறப்புறச் செய்து வருகிறது. கல்லிடைக்குறிச்சி ஸ்ரீ சாரதா பெண் வைத்திய சாலை அவரது தாராள நன்கொடைகளுக்கு என்றும் சான்றாக விளங்கும். 1971ம் ஆண்டு மே மாதத்தில் ஆயிரமாயிரம் கண் வியாதிக்காரர்களுக்காக அவர் இலவசமாக நடத்திய சிகிச்சை முகாம் அவரது மனிதாபிமானப் பணிகளில் குறிப்பிட வேண்டிய ஒன்றாகும்.

அவரது மூத்த புதல்வரும், இந்தியா செமண்ட்ஸின் மானேஜிங் டைரக்டருமான ஸ்ரீ கே. எஸ். நாராயணனுக்கும், மற்றும் அவர் விட்டுச் செல்லும் பெரிய குடும்பத்தினருக்கும் நமது ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# இந்த விழாக் காலத்தில் பிலிப்ஸ் வழங்கும் விசேஷ அன்பளிப்பு!

# இலவசம்





## ஒவ்வொரு பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டத்துடனும் ரூ. 130 மதிப்புள்ள 4 பாலிடோர் எல்பி ரெகார்டுகள்.

பிலிப்ஸ் மற்றும் பாலிடோர் வழங்கிடும் இந்த விசேஷ திட்டத்தின்படி, நீங்கள் எந்த பிலிப்ஸ் வியாபாரியிடமிருந்தும் பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டம் வாங்கி, பாலிடோரின் எந்த டீலரிடமிருந்தும் உங்களுக்குப் பிடித்தமான 4 ரெகார்டுகளை இலவசமாகப் பெறலாம். ரெகார்டுகளை இலவசமாகப் பெற, பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டம் வாங்கும்போது, வியாபாரியிடமிருந்து கூப்பன் வாங்க மறக்காதீர்கள். இசைப்பிரியரான உங்களுக்கு இன்னிசையை முழுக்க முழுக்க அனுபவிக்க இது ஒரு பொன்னான தருணம். எனவே, பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டத்தில் சங்கீதத்தின் முழு இனிமையையும் கேட்டானந்தியுங்கள். ஏனெனில் இது பரவசமூட்டும் விழாக் காலம்!

**உலகத் தரம் வாய்ந்த பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டம்**




உள்ளூர் வரிகள் தனி

OBM 9905 TM

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

**பிலிப்ஸ்**




புதிய 'ஈக்விட்டி' ஷேர்கள் வெளியீடுபற்றி 'பிலிப்ஸ்' விரைவில் அறிவிப்பார்கள்.

# தமிழ் நாட்டிலே... —தீரன்—

## அண்ணா தி. மு. க. உதயம்

'சொத்துக் கணக்குக் கேட்டு விட்டார்' என்பதற்காக அவசர அவசரமாகத் தி.மு.க. விலிருந்து நீக்கப்பட்ட எம். ஜி. ஆர். பல்லா யிரக்கணக்கான மக்களின் ஆதரவோடும், மதுவிலக்குக் கொள்கையில் தீவிரப் பிடிப்போடு ணும் 'அண்ணா தி. மு.க.' என்ற கட்சியைத் தொடங்கியிருக்கிறார். தி.மு.க. கொடிபோல் கறுப்பு சிவப்பு நிறத்துடன் நடுவே அண்ணா துரையின் உருவமும் பொறிக்கப்பட்ட ஒரு புதிய கொடி இந்தக் கட்சிக்காக அறிவிக்கப்பட்டுவிட்டது. 'சொத்துக் கணக்கு கேட்டது கட்டுப்பாட்டை மீறியதாகும்' என்று கூப்பாடு போடுகிற கழக மேலிடம், என்னை 'சஸ்பெண்ட்' செய்ததாக அறிவிப்பு என் கைக்கு வருவதற்குள்ளேயே என் மீது சாட்டப்பட்டுள்ள குற்றங்களையும், என்னைக் கழகத்திலிருந்து நீக்கி வைத்ததையும் பகிரங்க மாகப் பத்திரிகைகளுக்கு அறிவித்தது மட்டும் கட்டுப்பாட்டை மீறியது ஆகாதா?' என்று



எம். ஜி. ஆர். பதிலுக்குக் கேட்டிருக்கிறார். புதிய கட்சியைப் பற்றிப் பத்திரிகை-நிருபர் களிடம் விளக்கியிருப்பது தவிர இனிமேல் சட்டசபையில் எதிர்க்கட்சி வரிசையில் அமரப் போவது பற்றியும் யோசித்து வருவதாகச் சொல்லியிருக்கிறார் அவர். எம்.ஜி.ஆரின் புதிய கட்சியால் தி.மு.க. பலவீனமடையாது என்று திரு கருணாநிதி சொல்லிவிட்டார் என்றாலும் தி. மு. க.விலிருந்த பெருவாரி யான தொண்டர்களும், ஏழை எளியவர் களும், குடிசைவாசிகளும், திடீர்ப் பணக்கார ராக விரும்பாத அப்பாவிகளும் எம்.ஜி.ஆர். பக்கம் இருப்பது நடுநிலைமையாளர்களுக்குத் தெளிவாகவே தெரிகிறது.

## தவறான பிரசாரம்

எம்.ஜி.ஆர். நீக்கப்பட்ட உடன் கருணா நிதி தலைமைக்கு அடங்கிய சில மேலிடத்துப் பிரமுகர்கள் மலையாளி — தமிழன் என்றெல் லாம் பிரித்துப் பேசுவதாகத் தெரிகிறது. 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்று கட்சிப் பெயரை வைத்துக் கொண்டு (திராவிடம் — தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் அடங்கிய பகுதி) இப்படிப் பேசுவது பொருத் தமா என்பதை அவர்கள் அறியவில்லை. திரு எம். ஜி. ஆர். கழகத்திலிருந்தவரை 'மலை யாளி வேண்டும்' — அவர் விலக்கப்பட்டுவிட் டால் 'மலையாளி வேண்டாம்' என்று பேசினால் அது பச்சையான சந்தர்ப்பவாதமாகாதா? நல்ல வேளையாக இப்படிப்பட்ட வாதங்களை இப்போதெல்லாம் மக்கள் மதிப்பதுமில்லை, பொருட்படுத்துவதுமில்லை.

## உற்பத்தியும் பெருக வேண்டும்

சென்னை தலைமை நீதிபதி கே. வீராசாமி அவர்கள் அண்மையில் கோவை இந்திய வர்த் தகக் கழகத்தில் பேசும்போது தொழில் உற் பத்தி பற்றி ஒரு முக்கியமான கருத்தைத் தெரிவித்திருக்கிறார்:

'தொழிலாளர்களுக்கும் நிர்வாகிகளுக்கும் நடுவே சுமுக உறவு நிலவ வேண்டியது பற்றி மட்டும் எல்லாருமே வற்புறுத்துகிறார்கள். ஆனால் உற்பத்தியைப் பெருக்கி நாட்டை வளப்படுத்துவது பற்றி யாருமே வற் புறுத்துவதில்லை. உண்மையில் நாட்டு நலனில் அக்கறை கொண்டோர் வற்புறுத்த வேண்டி யது உற்பத்திப் பெருக்கம் பற்றியே. இன்று வரை உள்ள தொழிலாளர் சட்டங்களிலும் உற்பத்திப் பெருக்கம் என்ற இந்த அம்சம் அதிகம் கவனிக்கப்படவில்லை என்பது வருந்தத் தக்கது! வர்த்தகர்கள், தொழிலதி பர்கள், வக்கீல்கள் எல்லாரும் புதிய மசோதாக்கள் பற்றி ஆர்வம் காண்பித்து விவாதிக்க வேண்டும். அப்படி விவாதிப்பதன் மூலம்தான் நியாயமான கொள்கைகளும் சட் டங்களும் உருவாக அரசுக்கு நாம் உதவ முடியும்.'

நீதிபதியின் உற்பத்திப் பெருக்கம் பற்றிய கருத்து நாட்டுப் பற்றுள்ள அனைவரும் சிந் திக்கு அக்கறை காட்ட வேண்டிய ஒன்றாகும்.

## பட்டா வழங்கும் விழாக்கள்

கண் சிகிச்சை முகாம்களைப் போல் அங் கங்கே ஏழை எளியவர்களுக்குப் பட்டா வழங் கும் விழாக்களையும் கட்சி விழாக்களைப் போல் பிரமாதமான விளம்பரங்களுடன் நடத்து கிறார்கள். இந்த விழாக்களில் எல்லாம் அர சாங்கத்தின் சார்பில் பட்டாக்கள் வழங்கப் படுவதாகத் தெரிவதைவிட தி. மு. க. என்ற கட்சியே நிலப் பட்டாக்களை வாரி வழங்குவது போல் பிரசாரமும், பேச்சுக்களும் நிகழ்கின் றன. அரசாங்கத்தின் சாதனைகளையெல்லாம் கட்சியே நேரடியாகச் செய்வது போல் அர சாங்கச் செலவில் விளம்பரப்படுத்துவதும் ஒரு தந்திரமே. ஒரு கட்சிதான் அரசாங்க மாக இருக்கிறது என்றாலும் அரசாங்கமே ஒரு கட்சி போல் எல்லா விளம்பரங்களையும் கட்சி

நோக்கில் செய்து கொள்வது அதிகார துஷ்பிரயோகமாகவில்லையா?

## கைதிகளும் திருவருட்பாவும்

**த**மிழக சிறைச்சாலைகளின் கண்காணிப்பாளர்கள், மண்டல நன்னடத்தை அலுவலாளர்கள் ஆகியோரின் மகாநாட்டைத் தொடக்கி வைத்துப் பேசும் போது அமைச்சர் மாதவன், "சிறையில் உள்ள கைதிகள் திருவருட்பா, திருக்குறள் போன்ற அறநூல்களின் கருத்துக்களை அறியும்படி அவர்களுக்குப் போதிப்பதற்குத் தமிழாசிரியர்களையும், புலவர்களையும் நியமிக்க வேண்டும். அதனால் நிறைய நன்மைகள் ஏற்படும்" என்று கூறியிருக்கிறார். அருமையான யோசனை. ஆனால் இந்த யோசனையை இன்னும் கொஞ்சம் தாராள மனப்பான்மை




யோடு கைதிகள் அல்லாத மற்றவர்களுக்கும் விஸ்தரிக்க செய்ய வேண்டும் என்று தோன்றுகிறது நமக்கு.

படித்தபடி நடந்து காட்ட வேண்டும் என்பதுதான் படிப்பதைவிட முக்கியம். அமைச்சர் மாதவனுக்குத் திருக்குறளும், திருவருட்பாவும் மிக நல்ல சமயத்தில் ஞாபகம் வந்ததற்காக அவரைப் பாராட்டியே தீர வேண்டும். ஏனெனில், பொது வாழ்வில் இன்று ஈடுபட்டுள்ள தி.மு.க.வினர் பலர் இப்போது திருக்குறளையும், திருவருட்பாவையும் நினைவுகூர வேண்டிய நிலையில்தான் இருக்கிறார்கள்.

## பொதுக்குழு தீர்மானம்

"**த**மிழகத்தின் சில பகுதிகளில் ஜாதி அடிப்படையிலான கலவரங்களும், குழப்பங்களும் ஏற்பட்டு அதனால் தாழ்த்தப்பட்டவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். மாற்றுக் கட்சியினர் இதை மிகைப்படுத்தி ஆட்சி மீது தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வெறுப்பு உண்டாக்குவதில் தீவிரமாக ஈடுபட்டுவிடுகிறார்கள். இதை அகற்ற தி.மு.க. பாடுபடும்" என்று தி.மு.க. பொதுக் குழுவில் ஒரு தீர்மானம் இடம் பெற்றிருப்பதைப் பார்த்துச் சிரிப்பு வருகிறது. ஜாதி, இன அடிப்படையில் பிரச்னைகளைக் கிளப்பிவிடுவதற்காக யார் மேலாவது நடவடிக்கை எடுக்க வேண்டுமானால் அவர்கள் தி.மு.க.வினராகவே இருப்பார் என்பதைச் சொல்ல வேண்டியதே இல்லை. அவ்வளவு ஏன்? இந்தத் தீர்மானம் பொதுக் குழுவில் பேசப்படும் பொழுதே வெளியே சிலர் எம்.ஜி.ஆரை 'மலையாளி' என்று குறை சொல்லிக் கொண்டிருந்தார்களே; அந்த ஓர் உதாரணம் போதாதா? இப்படித் தீர்மானங்கள் போட்டுக் கொண்டிருப்பதைவிடத் தங்கள் குற்றங்களைத் தாங்களே திருத்திக் கொள்ள முயல்வது தி. மு. க.வினருக்கு நன்மை தரலாம்.

## லஞ்சஊழல்தான் காரணம்

**தி**.மு.க.வில் ஏற்பட்டுள்ள பிளவு பற்றி மற்ற கட்சித் தலைவர்கள் தெரிவித்துள்ள கருத்துக்கள் எல்லாவற்றிலும் ஓர் உண்மை திரும்பத் திரும்ப வற்புறுத்திக் கூறப்பட்டிருக்கிறது. சித்தாந்த ரீதியாகவோ, கொள்கை ரீதியாகவோ இந்தப் பிளவு ஏற்படவில்லை. 'தி. மு. க. ஆட்சியிலும், கட்சியிலும் உள்ள லஞ்ச ஊழலே இதற்கு முக்கிய காரணம்' என்பதை எல்லாருமே தெரிவித்திருப்பது தி.மு.க.வுக்கு ஓர் எச்சரிக்கையாக அமைய வேண்டும்.



## இதோ ஓர் அபூர்வ ராமன்!

"நான் என்னை மானுடனாகத்தான் நினைத்திருக்கிறேன்" என்று ஸ்ரீ ராமபிரான் கூறியது பிரசித்தம். இலட்சிய மனிதனாகவே வாழ்ந்த பிரபு தமது நாராயண மூல ரூபத்தை வெளிப்படுத்தி, சங்கு சக்கரம் தாங்கி நாலு கரங்களோடு சதுர்புஜ ராமனாகத் திகழும் தலம் ஒன்றும் உள்ளது. செங்கற்பட்டு - களத்தூர் - திருக்கழுக்குன்ற மார்க்கத்தில் உள்ள இந்த க்ஷேத்திரம் 'சதுர்புஜ ராமம்' என்றே வழங்குகிறது. பொன்பதர்க் கூட்டம் என்பது இதன் பழம் பெயர்.

அபூர்வமான சதுர்ப்புஜ கோதண்டராமராலயம் பழுதுற்றிருப்பதால் திருப்பணி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. ராஜகோபுரம் பணியும் நடக்கவிருக்கிறது. லட்ச ரூபாய்க்கு மேல் தேவைப்படுகிறது. அரிய மூர்த்திக்குச் செய்திற கைங்கரியம் அரிய நலன் தரும் எனலாம். பொருளுதவி அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீ ஏ. பி. பாஷ்யம், பொக்கிஷதாரர், சதுர்புஜ ராமன் கோயில் திருப்பணிக் குழு. 25, தோடி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

# உள்ளம் கவர்ந்த ஒடிசி நடனம்



சாஸ்திரீய பரத நாட்டியத்தைப் பார்த்துப் பழகிய சென்னை ரசிகர்களுக்கு ஒரிஸ்ஸா மாநிலத்தில் நாட்டியக் கலை எவ்வாறு அமைகிறது என்பதைக் கண்டு மகிழும் வாய்ப்பு அண்மையில் ஸ்ரீமதி சுதாரமேஷ் அளித்த ஒடிஸி நடன நிகழ்ச்சி மூலம் கிடைத்தது. கிருஷ்ண கான சபையிலும், ப்ரம்ம கான சபை ஆதரவில் வித்வத் சபை அரங்கிலும் ஸ்ரீமதி சுதாவின் ஒரிஸ்ஸா நடனங்கள் நடைபெற்றன.

கோனராக், புவனேசுவர் போன்ற சரித்திரப் புகழ் பெற்ற கோயில்களில் நாட்டிய பாவங்களையும் தோற்றங்களையும் சிற்பங்களாகச் செதுக்கி வைத்துள்ளார்கள். இவற்றைக் கலைப் புத்தகங்களில் கண்டு களிக்கிறோம். சுதாவின் நடன நிகழ்ச்சி, இந்தச் சிற்பங்களில் காணும் நடன கரணங்களும் வடிவங்களும் நிலைபெயர்ந்து வந்தனவோ என்று வியக்கும்படி இருந்தது.

ஒடிஸி நடனங்களில், 'அதிபங்காம்' என்ற உடல் நெளிவுகளும், அசைவுகளும் அதிகமாகக் காணப்படும். தோள் அசைவுகளும், பாதங்கள் ஒன்று சேராமல் சிறிது விலகியபடியே இருக்க நிருத்தங்கள் ஆடப்படுவதும் அந்த நடன முறையின் சிறப்பு அம்சங்கள். பரத நாட்டியத்தில் இவை காணப்படா. ஒடிஸி நடனம் அழகிலும், கலைச் சிறப்பிலும், நிருத்த – நிருத்திய கோவைகளிலும் பரதத்துக்கு எவ்வகையிலும் குறைந்ததல்ல என்பதை மிகுந்த பிரயாசையுடனும் அசாதாரணத் திறமையுடனும் தமது நடன நிகழ்ச்சிகள் மூலம் உணர்த்தினார் ஸ்ரீமதி சுதா ரமேஷ்.

ஜயதேவரின் அஷ்டபதி இல்லாமல் ஒடிஸி நடனம் இல்லை. ''பச்யதி திசிதிசி'' ''யாஹி மாதவ, யாஹி கேசவ'', ''ரதிசுக'' என்ற அஷ்டபதிகளுக்கு சுதா பிடித்த பாவ அபிநயங்கள் மிக விஸ்தாரமாகவும் பாவப் பெருக்குடனும் அழகுடன் அமைந்திருந்தன. அஷ்டபதிகளை எந்த ராகத்தில் எப்படி ஆதியில் ஜயதேவர் பாடினாரோ நமக்குத் தெரியாது. ஆனால், உத்கல சங்கீத நாடக அகாடெமியில் சங்கீத ஆசிரியராகப் பணியாற்றும் திரு கானஷ்யாம் பாண்டா அன்று பாடிய முறையும் தேசி, யமன், சிந்து பைரவி முதலிய ராகங்களும், சவுக்க கால நடையும், சுதாவின் அபிநய பாவங்களும் சேர்ந்து யமுனா தீரத்துக் காட்சிகளை அற்புதமாகச் சித்திரித்தன. காளிங்க நர்த்தன அபிநயங்களும் அவ்வாறே மிக அழகாகப் பளிச்சிட்டு மன நிறைவை அளித்தன.

கல்யாண் ராகத்தில் தாளமாலிகா கோவையில் பாடப்பட்ட பல்லவியை நம்முடைய வர்ணங்களுக்கு ஏறக்குறைய சமமாகக் கருதலாம். நிருத்தங்களும் நடனங்களும் நிறைந்த பகுதி இது. அவ்வாறே தில்லானாவுக்குச் சமமாக ஆடப்பட்ட கடைசிப் பகுதியும் அழகாக இருந்தது.

ஸ்ரீமதி சுதா ஆங்கில இலக்கியப் பட்டதாரி. அமெரிக்காவில் மூன்று ஆண்டு காலம் வாசம் செய்தவர். தற்போது புதுதில்லியில் மிராண்டா கல்லூரியில் இலக்கியப் பேராசிரியராகப் பணியாற்றுகிறார். சென்னை, பிரபல ஆர்கிடெக்ட் திரு ஆர். ஆர். சர்மாவின் புதல்வி. மாயாதர் ரவுத் என்ற நடன ஆசிரியரிடம் ஒடிஸிக் கலையை முறைப்படி பயின்றிருக்கிறார். பரதநாட்டியமும் குச்சுப்புடி நடனங்களும் தெரியும். நல்ல ரசிகத் தன்மை உள்ளவராதலால், விரச பாவங்கள் துளிக்கூட எட்டிப் பாராமல் நடனங்களை முழுக்க முழுக்க பக்தி ரசத்துடனும் சுவையுடனும் அவரால் ஆடிக் காட்ட முடிந்தது. இந்தச் சிறந்த கலைஞரை வாழ்த்துகிறோம்.

— எம். எஸ். சிவஸ்வாமி

# வஸ்தாது வேணு

## கல்கி

சென்னை நகரில் எந்தவிதத் தேர்தல் நடந்தாலும் சரி. வஸ்தாது வேணுவை அங்கே பார்க்கலாம். யாராவது ஒரு கட்சியார் அவன் உதவியை நாடுவது நிச்சயம். மீசையை முறுக்கி விட்டுக்கொண்டு கையில் தடியுடன் நின்றானானால் எதிர்க் கட்சியாருக்குக் கொஞ்சம் கதிகலங்கத்தான் செய்யும்!





"ஏய்! இப்படி உள்ளே வா! வேடிக்கை பார்த்தது போதும்" என்றான் வேணு நாயக்கன். அவனுக்கு எதிரில் பீங்கான் தட்டில் சோறு வட்டித்திருந்தது. மோர் கலந்து பிசைந்து கொண்டு ஊறுகாய்க்காகக் காத்திருந்தான். அவன் மனைவி வீட்டு வாசற்படியில் நின்று ஏதோ தெருவில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

"ஏதேது! காது கேட்கவில்லையா? போலீஸ்காரர் குடி வருவதைப் பார்க்கக் கூடாது. சட்டத்துக்கு விரோதம்; ஜெயிலில் போட்டு விடுவார்கள்" என்று சொல்லி வேணு நாயக்கன் பலமாகச் சிரித்தான்.

ஆனால் மங்கம்மாளுக்கு இந்தப் பரிகாசம் புரியவில்லை. அவள் திரும்பி வந்து, "ஜெயிலில் போட்டு விடுவார்களா? விளக்குமாற்றால் அடிப்பேன். இந்த உதவாக்கரைப் போலீஸ் வேலைக்கு எவ்வளவு ஜம்பம்? இரண்டு வண்டிச் சாமான்! கட்டில், மெத்தை, நாற்காலி, டிரங்குப்பெட்டி, வாத்தியப் பெட்டி ஒன்றிலும் குறைவில்லை. குட்டிகளுக்கெல்லாம் துரைசாணி மாதிரி ஜாக்கெட். ஐயோ! என்ன ஜம்பம்" என்று சொல்லிக் கையால் தன் கன்னத்தில் ஓர் இடி இடித்துக் கொண்டாள்.

"நீ சும்மாவிரு. அவர்கள் ரொம்ப காலம் இங்கேயிருந்து வாழப் போகிறார்களோ? பார்த்து விடுகிறேன்" என்றான் வேணு நாயக்கன்.

"வாழாமல் என்ன; அவர்களுக்கு என்ன கேடு? மாதம் முதல் தேதி சர்க்கார் சம்பளம் வருகிறது" என்றாள் மங்கம்மாள்.

"எல்லாச் சர்க்கார் சம்பளத்தையும் நான் பார்த்துவிடுகிறேன். வேணு நாயக்கன் கிட்டவா அந்த ஜம்பமெல்லாம் பலிக்கும்?"

"வந்தால் வரட்டுமே? நமக்கென்ன பயம்?" என்றாள் மங்கு.

"என்ன சொன்னாய்? வாயை அலம்பி விட்டுப் பேசு. நானா பயப்படுகிறவன்? இவனைப் போல் ஆயிரம் சிவப்புத் தலைப்பாகையைப் பார்த்திருக்கிறேன்" என்று அதட்டிப் பேசினான் வேணு.

வஸ்தாது வேணுநாயக்கனைத் தெரியாதவர்கள் நெல்லிப் பாக்கத்தில் ஒருவரும் கிடையாது. ஏன்? சென்னைப் பட்டணத்திலேயே ஒருவரும் கிடையாது என்றுகூடச் சொல்லலாம். முக்கியமாகச் சாயங்கால வேளைகளில் கள்ளு, சாராயக் கடைகளில் அவனுடைய ஆர்ப்பாட்டம் அதிகமாயிருக்கும். அவனைக் காணாத இடங்களில் ஜனங்கள், "போவன்னா நாயக்கன்" என்று அவனைப் பற்றிப் பேசுவார்கள். எதிரில் கண்டால், "என்ன, வஸ்தாது நாயக்கரே!" என்பார்கள்.

அவனுடைய ஜீவனோபாயம் எப்படி என்பது யாருக்கும் நிச்சயமாய்த் தெரி

யாது. ஆனால் சென்னை நகரில் எந்தவிதத் தேர்தல் நடந்தாலும் சரி, வேணு நாயக்கனை அங்கே பார்க்கலாம். யாராவது ஒரு கட்சியார் அவன் உதவியை நாடுவது நிச்சயம். மீசையை முறுக்கி விட்டுக் கொண்டு கையில் தடியுடன் நின்றானானால் எதிர்க் கட்சியாருக்குக் கொஞ்சம் கதிகலங்கத்தான் செய்யும்.

இவ்வளவு பிரபல மனிதன் மீது நெல்லிப்பாக்கம் போலீஸார் 'நிகா' வைத்திருந்ததில் வியப்பில்லை அல்லவா? சுற்றுப் பக்கத்தில், எங்கே கலகம், அடிதடி நடந்தாலும் அதில் வேணு நாயக்கன் சம்பந்தப்பட்டிருப்பான் என்பது அவர்களுக்கு நிச்சயமாய்த் தெரியும். ஆனால் அவனைப் பிடித்து மாட்டுவதற்கு மட்டும் இதுவரை அவர்களுக்குத் தக்க சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. எவ்வளவு பலமான வழக்கு அவன் மீது கொண்டு வந்தாலும், தேர்தலில் அவன் உதவி பெற்ற பிரபல வக்கீல்கள் ஆஜராகிக் 'கேஸை' உடைத்து வந்தார்கள். ஒரே ஒரு தடவை அவனிடம் ஒரு வருஷத்துக்கு நன்னடத்தை ஜாமீன் வாங்க முடிந்தது. மற்றொரு முறை முப்பது ரூபாய் அபராதம் போட்டார்கள். அதற்கு மேல் ஒன்றும் நடக்கவில்லை.



இந்த நிலைமையில் வேணு நாயக்கனுக்குப் போலீஸ்காரரென்றால் 'பூனைக் குட்டி விசுவாசம்' ஏற்படுவது இயல்பேயல்லவா? ஆகவே அடுத்த வீட்டுக்கு ஹெட் கான்ஸ்டபிள் ஒருவர் குடி வருகிறார் என்று அறிந்தது முதல் அவன் மனம் கொதித்துக் கொண்டிருந்தது. சாராயக் கடையில் யாரோ இதைப் பற்றிப் பிரஸ்தாபித்த போது, ''அடே! சும்மா பார்த்துக் கொண்டிரு. மூன்று நாட்களில் அந்த நெருப்புக் குச்சியைக் கிளப்பாவிட்டால் என் பெயர் வஸ்தாது வேணு நாயக்கன் அல்ல!'' என்று சொல்லிக் கொண்டு அவன் மீசையை முறுக்கினான்.

ஆனால் மாதம் மூன்று ஆகியும் அந்த நெருப்புக் குச்சி புறப்படுகிற வழியாயில்லை. இவ்வளவு நாளும் வேணு நாயக்கன் சும்மா இருந்தானென்று நினைக்க வேண்டாம். தன்னாலியன்ற முயற்சியெல்லாம் செய்துதான் வந்தான். அவன் உத்தரவுப்படி மங்கம்மா தினம் காலையில் வாசலைக் கூட்டிக் குப்பையை அடுத்த வீட்டு வாசலில் தள்ளிவிட்டு வருவாள். ஆனால் சற்று நேரத்துக்கெல்லாம் அவ்வளவு குப்பையும், வட்டியும் முதலுமாக, வேணு நாயக்கன் வாசலுக்கே திரும்பி வந்து சேர்ந்துவிடும்.

வேணு ஒரு நாள் சாராயக் கடையிலிருந்து ஏராளமான கண்ணாடிப் புட்டிகள் கொண்டு வந்தான். கதவைச் சாத்திவிட்டு அவைகளைத் துண்டு துண்டாய் உடைத்தான். நடு நிசிக்கு எழுந்துபோய் அந்தத் துண்டுகளைப் போலீஸ்காரர் வீட்டுக் கொல்லையில் வீசிக்கொட்டிவிட்டு வந்தான். இந்த நொறுக்கல் தொண்டு செய்தபோது அவன் கையில் இரண்டு மூன்று இடங்களில் காயம் உண்டாகி இரத்தம் வடிந்தது. அவன் அதைப் பொருட்படுத்தவில்லை.

ஆனால் மறு நாள் சாயங்காலம் அவன் குடி மயக்கத்துடன் வீடு திரும்பிக் கொல்லைப்புறம் போகையில் இரண்டு கால்களிலும் இரண்டு பெரிய கண்ணாடித் துண்டுகள் குத்திக் காலைக் கிழித்தபோது கட்டாயம் பொருட்படுத்த வேண்டியதாயிற்று. ''ஐயோடி அப்பாடி'' என்று முனக ஆரம்பித்தான். ''என்ன ஓய்! தேள் கொட்டி விட்டதா?'' என்று அடுத்த வீட்டுக் கொல்லையிலிருந்து ஒரு சத்தம் வந்தது.

''பீங்கான் தட்டு வேண்டாம்; ஆசாரக் குறைவு; இனி மேல் இலை போட்டுத்தான் சாப்பிட வேண்டும்'' என்றான் வேணு.

இந்த ஊதாரிச் செலவின் இரகசியம் முதலில் மங்கம்மாளுக்கு விளங்கவில்லை. வேணு சாப்பிட்டு எழுந்ததும், ''ஏய்! இலையை மேலண்டைப் பக்கமாய்ப் போடு, தெரிகிறதா?'' என்று சொன்ன போதுதான் அவளுக்கு விஷயம் விளங்கிற்று. மங்கம்மாள் அப்படியே செய்துவிட்டு வந்தாள்.

சில நாட்கள் வரையில் வேணு சந்தோஷமாயிருந்தான். ஆனால் ஒரு நாள் இராத்திரி கொல்லைப்புறம் போனபோது அவன் சந்தோஷம் மாறிவிட்டது. என்னமோ சந்தேகப்பட்டு அவன் கொல்லைச் சுவர் வழியாகப் பக்கத்துக் கொல்லையை எட்டிப் பார்த்தான். போலீஸ்காரர் புதிதாய் வாங்கியிருந்த பசுமாடு தான் மூன்று தம்பிடி கொடுத்து வாங்கிய வாழை இலையை ஆனந்தமாய் மென்று தின்று கொண்டிருப்பதை அவன் கண்டான். குப்பை, கண்ணாடித் துண்டு முதலிய சாமான்கள் உடனுக்குடன் திரும்பி வந்து கொண்டிருக்க, எச்சில் இலை மட்டும் வராத காரணம் இப்போதுதான் வேணுவுக்குப் புலனாயிற்று.

பிறகு ஒரு நாள் வேணுநாயக்கன் தன் வீட்டிலிருந்த ஓட்டைத் தகரங்களையெல்லாம் சேகரித்தான். கொல்லைப்புறம் கொண்டு போய் ஒரு பெரிய தகரத்தை வீசி எறிந்தான். அடுத்த கொல்லையிலிருந்த போலீஸ்காரர், ''இந்தா, இந்தத் தகரத்தை எடுத்து வை. மாட்டுக்குத் தீனி வைக்க உதவும்'' என்று தம் பெண்சாதியிடம் அருமையாய்ச் சொன்னார். வேணுவுக்குப் பலத்த கோபம் வந்துவிட்டது. ''ஓய்! அப்படி ஊர்ச் சொத்தைச் சுரண்டித்தான் நீர் காலட்சேபம் செய்கிறதோ?'' என்று கத்தினான். ''ஓஹோ! இது உம்முடைய தகரமா?'' என்று அடுத்த கொல்லையிலிருந்து போலீஸ்காரர் சொன்னார். மறு நிமிடத்தில் அந்த ஓட்டைத் தகரம் வந்து வேணு நாயக்கன் தலை மேல் நேராய் இறங்கிற்று. பிறகு அவன் முதுகைத் தடவிக் கொடுத்துக்கொண்டு தரையில் விழுந்து ஒரு குதி குதித்தது. ''என்ன ஓய்! தலை மேல் விழுந்துவிட்டதா என்ன?'' என்றார் போலீஸ்காரர்.

''நாசமாய்ப் போக! ஒரு நாளைக்கு உன் மண்டையை உடைக்காமல் விடப் போகிறேனா?'' என்று வஸ்தாது நாயக்கன் முணுமுணுத்துக் கொண்டான்.

* * *

வேணுநாயக்கனுக்கு ஒரு மாத காலம் நல்ல தூக்கம் கிடையாது. இரவு பகல் இதே யோசனைதான். கள்ளு சாராயக் கடைகளில் அவன் பல மந்திராலோசனைகள் நடத்தினான். 'அந்தப் போலீஸ்காரரைக் கசக்கிச் சாறு பிழிந்துவிட வேண்டும்' என்று அவன் நண்பர்கள் எல்லாரும் ஒருமுகமாய் அபிப்பிராயப் பட்டார்கள். ஆனால் அதற்கு வழியும் சாதனமும் சொல்லுவார் யாருமில்லை. வலிய அழைத்தாலும் சண்டைக்கு வராதவரை என்ன செய்ய முடியும்? ''எப்படியும் அவரை ஒரு கை பார்க்காமல் விடாதே'' என்று மட்டும் ஊக்கப்படுத்தி வந்தார்கள். ஒரு நாள் மாலை மிக்க முக மலர்ச்சியுடன் வேணு வீடு திரும்பினான். ''என்ன விசேஷம்?'' என்று அவன் மனைவி கேட்டாள்.

''விசேஷம் இருக்கிறது'' என்றான் வேணு. அவன் மனைவியின் ஆவல் பதின்மடங்கு அதிகமாயிற்று. ''என்ன? என்ன?'' என்று கேட்டாள்.

''இன்றைக்கு வக்கீல் ஐயாவிடம் பேசிக் கொண்டிருந்தேன். ஒரு நல்ல யோசனை சொல்லியிருக்கிறார். இதற்குத்தான் படித்தவர்கள் யோசனை வேண்டும் என்பது'' என்றான்.

''என்ன யோசனை? சொல்லு, சொல்லு.''

''போலீஸ்காரர் பிறத்தியான் வீட்டுக்குள் நுழையக் கூடாது. வாரண்டு வைத்துக் கொண்டுதான் நுழையலாம். அப்படியில்லாமல் நுழைந்தால் அவனை மாட்டிவிடலாம்.''

''அதற்கென்ன இப்போது?''

''என்னவா? அதுதான் சட்டம். அடுத்த வீட்டுச் சிவப்புத் தலைப்பாகையை ஒழிக்க வழி.''

''எப்படி ஒழிக்கிறது?''

''இன்னும் புரியவில்லையா? அடுத்த வீட்டுப் போலீஸ்காரரை நம் வீட்டில் நுழையும்படி செய்து இரண்டு சாட்சிகள் வைத்துவிட வேண்டியது. அப்புறம் வக்கீல் ஐயன் பார்த்துக் கொள்ளுகிறான்.''

''எப்படி நுழையும்படி செய்கிறது?''

''ஆ! அதுதான் இரகசியம். இதோ பார். இந்தத் தடியினால் உன்னை இன்று நொறுக்கப் போகிறேன்'' என்றான்.

''ஐயோ! உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா, என்ன?''

உடனே வேணு நாயக்கன் விழுந்து விழுந்து சிரித்தான். ''பைத்தியமில்லை; யுக்தி!'' என்றான்.

''இதோ பார்! நன்றாய்க் கேட்டுக் கொள். பரண்மேல் பழைய மெத்தை கிடக்கிறதல்லவா? அதை எடுத்துப் போடு. இந்தத் தடியினால் அதைப் போட்டு அடிக்கப் போகிறேன்! ஆனால் நீ உன்னைத்தான் அடிப்பதாகப் பாசாங்கு செய்ய வேண்டும். கூகூவென்று கத்து. என் மேல் உனக்கு இருக்கும் ஆத்திரத்தையெல்லாம் கொட்டித் திட்டு. 'கொல்கிறானே' 'கொல்கிறானே' என்று கூச்சல் போடு. வாசல் கதவைத் தாளிடாமல் இவ்வளவும் செய்யப் போகிறேன். அந்தச் சிவப்புத் தலைப்பாகை கட்டாயம் உள்ளே நுழையும். நான் வாசலில் ஓடிப் போய் எதிர் வீட்டுக்காரர்களைக் கூப்பிட்டுச் சாட்சி வைத்து விடுகிறேன்'' என்றான்.

முதலில் மங்கம்மாளுக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை. மெத்தையில் அடிப்பதற்குச் சம்மதியா விட்டால் முதுகின் மேல் அடி விழுமென்று தோன்றிற்று. ஆகவே ''சரி'' என்று ஒப்புக் கொண்டாள்.

சாப்பாடு முடிந்தது. அடுத்த வீட்டில் போலீஸ்காரரும் அவர் மனைவியும் படுத்துக் கொண்டார்கள் என்று தெரிந்தபின், அந்தச் சுவர் ஓரமாக மெத்தையைக் கொண்டு போய்ப் போட்டான். ''முதலில் கொஞ்சம் வாய்ச் சண்டை போட வேண்டும். உன் மனத்தில் என் மேலுள்ளதையெல்லாம்

# புஷ் பொலெரோ
# புத்தம் புதிய ஸாலிட் ஸ்டேட் மெயின்ஸ் ரேடியோ—மூவழிகளில் சிறந்த 3-பாண்டு ரேடியோ.

mcm/br/59a tam




**1** நீங்கள் விரும்பும் உச்ச சக்தி நயம் தருகிறது புஷ் பொலெரோ—<u>மின் சக்தி செலவோ 15 வாட் பல்பை விடக் குறைவு!</u> இதன் தயாரிப்பாளர்களோ புஷ்— உன்னத பொழுது போக்குக் கலைப் படைப்பின் மற்றொரு பெயர்.

**2** திறவுங்கள் பொலெரோவின் பின் புறத்தை. கண்கூடாகக் காண்பீர்கள். முழுவதும் டிரான்ஸிஸ்டரைஸ் செய்யப் பட்ட ஸாலிட் ஸ்டேட். தட்டுங்கள் பித்தானை— நெஞ்சையள்ளும் இசை யமுதம் கொஞ்சிவரும் நொடியில். இதுவே புஷ் தொழில் நுட்பக் கலையறிவு—உலக ரேடியோ தொழில் நுட்பக் கலையறிவுக்கு இணையானது.

**3** மெல்லிய செவ்வொளி பரப்பும் ஒலி காட்டும் குறி (ட்யூனிங் இண்டிகேட்டர்)யைப் பாருங்கள்—தொலை தூர நிலையமும் பழுதறக் கேட்கிறது 'காதடியில்'— இந்த வித்தை புரிவது பொலெரோ. வியப் பூட்டும் வெனீர் மரக் கேபினெட்—தொட்டால் வழுக்கும்! தெளிவாகக் காணத் தக்க முழுநீள ட்யூனிங் ஸ்கேல். ஆயுட் காலப் பயன் தரும் அற்புத ரேடியோ இதோ!

**புஷ்**
**பொலெரோ** காத்திருப்பானேன் இன்னும்?

சொல்லித் தீர்த்துவிடு. பக்கத்து வீட்டுக்குக் கேட்கும்படி உரக்கப் பேசு'' என்றான்.

மங்கம்மாள் பயந்து கொண்டே ஆரம்பித்தாள். ஆனால் இதற்கு முன்னெல்லாம் அவள் ஒரு வார்த்தை பேசியதும் வேணு வாயில் போடுவது வழக்கம். இப்பொழுது அவன் பேசாமல் இருக்கவே அவளுக்கு உற்சாகம் பிறந்தது. எட்டு வருஷ காலமாய் அவள் மனத்தில் குமுறிக் கொண்டிருந்தவை அனைத்தையும் எடுத்து வெளியே விடத் தொடங்கினாள். கால் மணி ஆயிற்று. அரை மணியும் ஆயிற்று. வேணு காரியம் என்ன என்பதை மறந்து போனான். உண்மையிலேயே தானும் தன் மனைவியும் சண்டையிடுவதாகவே கருதினான். ''இவ்வளவுதானா? இன்னும் உண்டா?'' என்று சொல்லிக் கொண்டு எழுந்தான்.

''இன்னும் இருக்கிறது'' என்று கூறி மங்கம்மாள் மேலும் ஆரம்பித்தாள் புராணத்தை. ஆனால் வேணு நாயக்கன் உண்மையாகவே தடியைத் தூக்கிக் கொண்டு வருகிறான் என்று தெரிந்ததும் ''வீல்'' என்று ஒரு பெரிய கூச்சல் போட்டுக் கொண்டு சமையல் அறைக்குள் ஓடிக் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் இட்டுக் கொண்டாள். உள்ளிருந்தபடியே அவள் வேணுநாயக்கன், அவனுடைய அப்பன், பாட்டன் இன்னும் இஷ்டமித்திர பந்து ஜனங்கள் எல்லாருடைய குணதிசயங்களையும் வர்ணித்து அவர்களை ஆசீர்வாதஞ் செய்யலானாள். அவள் வேணு நாயக்கனையும் விடவில்லை.

இந்தச் சமயத்தில் அடுத்த வீட்டிலிருந்து போலீஸ்காரர் குரல் கேட்டது. ''என்ன ஓய்! காட்டுப் பூனையை ஓட்டித் தொலையும். தூக்கத்தைக் கெடுக்கிறது'' என்றார் அந்தப் பொல்லாத குள்ளநரி. உடனே வேணுநாயக்கனுக்குப் பழைய ஞாபகம் வந்தது. தொப்புத் தொப்பென்று பழைய மெத்தையைப்போட்டு அடிக்கத் தொடங்கினான். பாவம்! மூன்று தலைமுறையாக வேணுநாயக்கன் குடும்பத்தைத் தாங்கி வந்த மெத்தை அன்று படாத பாடுபட்டது. துணி சுக்குச்சுக்காய்க் கிழிந்தது. பஞ்சு நாள் நாளாய்ப் பறந்தது.

போலீஸ்காரரின் மேல் கோபம் ஒரு பக்கம்; பெண்சாதி மேல் ஆத்திரம் ஒரு பக்கம்; அரை மணி நேரத்துக்கு மேலாகியும் வேணுநாயக்கன் ஓயவில்லை. திடீரென்று வாசற் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. ''ஆஹா! ஜயித்தோம்'' என்று அளவில்லாத குதூகலத்துடன் முன்னைவிட ஓங்கி அடித்தான். திடுதிடுவென்று யாரோ ஓடி வரும் சத்தம் கேட்டது. 'மாட்டிக் கொண்டாயா, தெருப் புக் குச்சிப் பயலே!' என்று எண்ணுவதற்குள் திடுதிடுவென்று முதுகில் நூந்தாறு அடி விழுந்து விட்டது. ''ஆஹா! பயலே!'' என்று சத்தமிட்டுக் கொண்டு வேணு குதித்து எழுந்தான். முதுகிலும் தலையிலும் தோளிலும் மாறி மாறி, அடி விழுந்தது. திரும்பிப் பார்த்ததும் வேணுவுக்குத் திகைப்பு உண்டாகிவிட்டது. ஏனென்றால் அவ்வளவு தைரியமாய் உள்ளே நுழைந்து தன்னை அடித்தவன் போலீஸ்காரரல்ல, தன் மைத்துனன் முத்துநாயக்கன், மங்கம்மாளின் அண்ணன் என்பதை அவன் கண்டான். ''சங்கதி என்னடா? கழுதை



அரசுத் துறையில் இயங்கும் டில்லி அசோகா ஓட்டலில் ஆண்டு தோறும் உடைந்து நொறுங்கும் பீங்கான் பாத்திரங்கள், தட்டுகளின் மதிப்பு மட்டும் எவ்வளவு தெரியுமா? சுமார் 50 ஆயிரம் ரூபாய்! கடந்த 11 ஆண்டுகளாக ஒவ்வொரு வருடமும் இப்படி நடந்து வருகிறது!

ஆதாரம்: ''காரவன்'' - சம்பத் குமாரி

மகனே! உன் கைவரிசையைக் கடைசியில் என்னிடமே காட்டுகிறாயா? முத்துநாயக்கன் தங்கையை ஒருவன் அடிப்பதற்காயிற்றா?'' என்று மேலும் சாத்தினான் முத்துநாயக்கன்.

அன்று வஸ்தாது நாயக்கன் வைகுண்டத்துக்கே போயிருப்பான். ஆனால் நல்ல வேளையாக மங்கம்மாளுக்குத் தெரிந்து போயிற்று. அவள் கதவைத் திறந்து கொண்டு ஓடி வந்து அண்ணன் கையைப் பிடித்துக் கொண்டாள். மேலே ஒரு காயம் இல்லாமல் அவள் கொழுக்கட்டைபோல் இருப்பதைக் கண்டதும் முத்து நாயக்கனுக்குக் கோபம் தணிந்தது. பிறகு சுற்றுமுற்றும் பார்த்தான். பழைய மெத்தையின் பதினாயிரம் துண்டு துணுக்குகளைக் கண்டான்.

''என்ன சமாசாரம்?'' என்று கேட்டான். எல்லா விவரமும் மங்கம்மாள் சொன்னாள். முத்து நாயக்கன் ஒரு நிமிஷம் திகைத்து நின்றான். பின்னர் வேணுநாயக்கன் மீது காறி உமிழ்ந்துவிட்டு ஓட்டம் பிடித்தான். மங்கம்மாள் வாசல் கதவைத் தாளிடப் போனாள். அந்த நிசி வேளையில் தெருவிலிருந்த அத்தனை வீட்டு வாசலிலும் ஜனங்கள் வந்து நிற்கக் கண்டாள். மிக்க வெட்கத்துடன் அவள் திரும்பி வந்து படுத்துக் கொண்டாள்.

மறு நாள் காலையில் வஸ்தாது வேணு நாயக்கன் எழுந்து வழக்கம் போல் வெளியே வந்தான். தன் முதுகு, தோள், முகம் எல்லாம் வீங்கியிருந்ததை அவன் கவனிக்கவில்லை. அடுத்த வீட்டு வாசலில் தயாராய்க் காத்திருந்த போலீஸ்காரர் அவனைப் பார்த்து, ''இதென்ன நாயக்கரே! நீரல்லவோ உம் பெண்சாதியை அடித்ததாக ஊரெல்லாம் பிரஸ்தாபமாயிருக்கிறது? பாவம் உம்மையா அந்த அம்மாள் இப்படி அடித்துவிட்டாள்? உடம்பெல்லாம் தடித்துப் போயிருக்கிறதே?'' என்றான். பிறகு அன்று முழுதும் வேணு வெளிக் கிளம்பவே யில்லை.

* * *

கொறட்கான்ஸ்டபின் வீராசாமிப் பிள்ளைக்குத் தோட்ட வேலையில் கொஞ்சம் பைத்தியமுண்டு. அவர் அந்த வீட்டுக்கு

வந்து ஆறு மாதங்கள்தான் ஆயிற்று. இதற்குள் கொல்லையைக் கிளி கொஞ்சும்படி வைத்திருந்தார். ஆள் உயரம் வளர்ந்திருந்த கொத்தவரைச் செடிகளில் கொத்துக் கொத்தாய்க் காய்த்திருந்தது. ஒரு பக்கம் மல்லிகைச் செடிகள் செழிப்பாகக் கிளம்பி அப்போதுதான் மொட்டு விட்டிருந்தன. ஒரு பந்தலில் புடலங்காய்கள் பிஞ்சும் பழமுமாய்த் தொங்கின. மற்றொரு பந்தலில் அவரைக் கொடி பச்சைப் பசேல் என்று அடர்த்தியாய்ப் படர்ந்திருந்தது. புதிய இங்கிலீஷ் குரோட்டன்ஸ்களும் வாடா மல்லிகைச் செடிகளும் மற்றொரு பக்கம் காணப்பட்டன. இரண்டு மூன்று வாழைக் கன்றுகளும் வளர்ந்திருந்தன. வீராசாமிப் பிள்ளை வீட்டில் தங்கும் நேரத்தில் முக்கால் பங்கு நேரம் புழக்கடைத் தோட்டத்திலேயே கழிப்பது வழக்கம். ஒரு செடியில் ஓர் இலைக்கு ஏதாவது ஆபத்து வந்து விட்டால் அவருக்கு அன்றிரவு தூக்கம் வராது.

வஸ்தாது வேணு நாயக்கன் பழைய மெத்தையுடன் யுத்தம் புரிந்து ஒரு மாதமாயிற்று. ஒரு நாள் காலையில் ஹெட்கான்ஸ்டபிள் படுக்கையை விட்டு எழுந்ததும் வழக்கம்போல் புழக்கடைக்குச் சென்றார். அவர் அடி வயிற்றில் பகீர் என்றது. ''ஐயோ!'' என்று ரொம்பவும் ஈனமான குரலில் ஒரு பெரிய கூச்சல் போட்டார். திடீரென்று கீழே விழுந்து மூர்ச்சையடைந்தார்.

அவர் மனைவி படுக்கையிலிருந்து குதித்தெழுந்து ஒரே ஓட்டமாய் ஓடி வந்தாள். நேற்று மாலை கிளி கொஞ்சிக் கொண்டிருந்த தோட்டம் இன்று அனுமான் அழித்த அசோகவனம் போலிருப்பதைக் கண்டாள். ஒரு செடி, ஒரு கொடி, ஒரு புல் பூண்டு உருப்படியாயிருக்க வேண்டுமே? கிடையாது. அவரைக் கொடிகள் அறுபட்டுக் கிடந்தன. கீரைப் பாத்திகள் மிதிபட்டுக் கிடந்தன. மல்லிகைச் செடிகள் வேரோடே பிடுங்கப்பட்டிருந்தன. வாழைக் கன்றுகள் வெட்டி வீழ்த்தப்பட்டிருந்தன. கொத்தவரை வெண்டைச் செடிகள் நிர்மூலமாய்க் கிடந்தன. ஒரே துவம்ஸம், ஒரே நாசம்.

ஹெட்கான்ஸ்டபிளின் மனைவி மகா உத்தமி. சாதாரணமாய் அதிர்ந்து பேசும் வழக்கமே அவளிடம் கிடையாது. ஆனால் இந்த மகா பாதகத்தை யாரால்தான் சகித்துக் கொண்டிருக்க முடியும்? 'அட பாவி. நீ நாசமாய்ப் போகமாட்டாயா? உன்னைத் தெய்வம் கேட்காதா?' என்று கத்திக் கொண்டு இரண்டு கை மண்ணை வாரி வேணு நாயக்கன் கொல்லைப் பக்கம் இறைத்தாள். உடனே ஓடி வந்து கணவனுக்கு சைத்தியோபசாரம் செய்யத் தொடங்கினாள். அவருக்கு ஸ்மரணை வந்ததும் இன்னொரு தடவை தோட்டத்தைப் பார்த்தார். அவ்வளவுதான். உடனே எழுந்து உள்ளே ஓடிப் போய்க் கூடத்தில் குப்புறப்படுத்துக் கொண்டார். அப்போது அவர் கண்களிலிருந்து பெருகியது கண்ணீரா? இல்லை, அதை இரத்தம் என்று சொல்ல வேண்டும்.

மணி பத்தடித்தது. ''எத்தனை நேரம் இப்படிப் படுத்திருப்பது? எழுந்திருங்கள். வெளியே போய்விட்டு வாருங்கள். வேறு வீடு இருந்தால் பார்க்கக் கூடாதா? இந்தப் பாழும் வீட்டை விட்டுப் போகலாம்'' என்றாள் போலீஸ்காரரின் மனைவி. வீராசாமிப் பிள்ளை எழுந்து உடுப்புத் தரித்துக் கொண்டு, 'டியூட்டி' பார்க்கச் சென்றார்.

ஒரு குறுகலான சந்து. இரண்டு பக்கமும் மதில் சுவர். ஜன நடமாட்டம் கிடையாது. மின்சார விளக்குகள் அழுது வடிந்தன. இரவு பதினொரு மணிக்கு ஹெட்கான்ஸ்டபிள் வீராசாமிப் பிள்ளை தனியாக வீடு நோக்கி வந்து கொண்டிருந்தார். அந்தச் சந்தின் நடுவில் மற்றொரு சந்து சேருமிடத்தில் அதன் வழியாக வேறொரு மனிதன் வந்தான். இந்த முச்சந்தியில் ஒரு மின்சார விளக்கு இருந்த போதிலும் பக்கத்தில் மரங்கள் அதிகம் இருந்தபடியால் சாலையின் பெரும் பகுதியில் நிழல் விழுந்திருந்தது. தற்செயலாக அம்மனிதன் முகத்தை வீராசாமிப் பிள்ளை பார்த்த நேரமும் அவன் மீது வெளிச்சம் விழுந்த நேரமும் ஒத்துக் கொண்டன. வந்தவன் வஸ்தாது வேணு நாயக்கன்.

போலீஸ்காரரின் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த துக்கம் அவ்வளவும் அந்த நேரத்தில் குரோதமாக மாறிற்று. இருவரும் நேருக்கு நேர் நின்று ஒரு நிமிஷம் உற்றுப் பார்த்தார்கள். வேணுவுக்குக் குடி மயக்கம். எனவே, ஆள் இன்னார் என்று அறிந்து கொள்ள ஒரு நிமிஷம் பிடித்தது. உடனே பல்லை இளித்துக் கொண்டு, ''என்ன சிவப்புத் தலைப்பா? தோட்டம் எப்படி இருக்கிறது?'' என்றான்.

அதற்கு மேல் வீராசாமியால் தாங்க முடியவில்லை. கன்னத்தில் ஓங்கி ஓர் அறை கொடுத்தார். ஆனால் வஸ்தாது வேணுநாயக்கனா இதற்கெல்லாம் பயப்படுகிறவன்? இந்த வைய சந்தர்ப்பத்தைத்தான் அவன் வெகு காலமாகத் தேடிக் கொண்டிருந்தது. ஐந்து நிமிஷத்தில் போலீஸ்காரர் கீழே விழுந்து மண்ணைக் கவ்வினார். கொஞ்ச நேரத்தில் அவர் பிண்டப் பிரதானமாகியிருப்பார். ஆனால் அந்தச் சமயத்தில் அவருடைய அதிர்ஷ்டம் வந்து குறுக்கிட்டது.

இவர்கள் கட்டிப் புரண்டது அடர்ந்த மர நிழலுள்ள இடம். இரண்டு கைகளிலும் இரண்டு பெட்டிகளைத் தூக்கிக் கொண்டு அவ்வழியே ஓடி வந்த மூன்றாவது மனிதன் ஒருவன் இவர்கள் மீது கால் இடறித் தொப்பென்று விழுந்தான். அவன் வைத்திருந்த பெட்டியொன்று வஸ்தாது நாயக்கன் தோள் மீது விழுந்தது. அவன் திடுக்கிட்டு எழுந்திருந்தான். இதுதான் சமயமென்று போலீஸ்காரர் சட்டென்று நழுவிச் சத்தம் போடாமல் மரத்தடியில் ஒளிந்து கொண்டார். குடி மயக்கத்திலிருந்த வேணுவுக்கு ஒன்றும் புரியவில்லை. ஓடி வந்தவன் இருட்டில் விழுந்து கிடப்பதுதான் தெரிந்தது. அவர்தான் போலீஸ்காரர் என்று நினைத்து ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து அவனைப் பிடித்துக் குத்தத் தொடங்கினான். அவன் பேசுவதற்கும் இடங் கொடுக்கவில்லை. மேலும் மேலும் விழுந்த அடி பொறுக்காமல் அந்த மனிதன் மூர்ச்சையடைந்தே போனான். வஸ்தாது

# ப்ரூக்ஸ் ஒலிம்பிக் ஹெக்டார்

## சுகமான சவாரிக்குச் சிறந்தவை

ப்ரூக்ஸ், ஒலிம்பிக், ஹெக்டார் சைக்கிள் ஸீட்டுகள் உயர்ந்த ரகத் தோலினால் உருவாக்கப்படுபவை. இயற்கையான தோலினால் உருவாக்கப்பட்ட இவை சொகுசான சவாரிக்கு உகந்தவை.

உலகப்புகழ்பெற்ற ப்ரூக்ஸ், ஒலிம்பிக் ஸீட்டுகள் தனித்தன்மை வாய்ந்தவை. சகாயமான விலையில் கிடைக்கும் ஹெக்டார் உங்கள் பணத்திற்கு சிறந்த மதிப்பளிக்கிறது.

ப்ரூக்ஸ், ஒலிம்பிக், ஹெக்டார்

சிறந்த சைக்கிள்களை அளிக்கும் டி.ஐ நிறுவனத்தாரின் தயாரிப்பு













இந்தியாவில் தயாரிப்போர்:
தி ரைட் சாடில்ஸ் ஆஃப்
இந்தியா, சென்னை 53.

உரிமையாளர்கள்:
டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ்
ஆஃப் இந்தியா லிமிடெட்
அனுமதி பெற்று உபயோகிப்பவர்.

TIC/WS/6780



திருவாரூர் கல்கி ஏஜண்டு ஜி. நடராஜ அய்யரின் குமாரி செள. அம்புஜத்துக்கும் சாத்தனூர் லட்சுமண அய்யர் குமாரர் சிரஞ்சீவி எல். வெங்கட்ராமனுக்கும் திருவாரூரில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் மாலையில் நடைபெற்ற வரவேற்புக்கும் நண்பர்களும் உறவினர்களும் வருகை தந்து தம்பதிகளை வாழ்த்தினர். வரவேற்பில் ஸ்ரீ என். ரமணியின் வேணுகானமும் நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

இரண்டு மூன்று தடவை அவனைப் புரட்டிப் பார்த்துவிட்டு வேகமாய் வீடு நோக்கி நடந்தான். ''இவ்வளவு தடியனா! அந்தப் போலீஸ்கார ? ஒரு வேளை உடம்பு வீங்கிப் போயிற்றோ?'' என்று நினைத்துக் கொண்டான்.

வேணு சந்து திரும்பிப் போன பிறகு ஹெட் கான்ஸ்டபிள் வீராசாமி மரத்தின் மறைவிலிருந்து வெளியே வந்தார். கீழே கிடந்தவனை உற்றுப் பார்த்தார். கீழே கிடந்த பெட்டிகளையும் பார்த்தார். கொஞ்சம் சந்தேகம் உதித்தது. தூரத்தில் ஏதோ 'கோல்மால்' நடக்கும் சத்தம் கேட்டது. சந்தேகம் உறுதிப்பட்டது. பெட்டிகளை எடுத்துக் கொண்டு சத்தம் கேட்ட திசையை நோக்கி விரைவாக நடந்தார். ஒரு பங்களாவின் வாசலில் ஏக தடபுடலாய்ப் பல கூடி இரைந்து கொண்டிருந்தார்கள். இரண்டு போலீஸ்காரர்களும் ஒரு சப்-இன்ஸ்பெக்டரும் கூட நின்றார்கள். கையில் பெட்டிகளுடன் உடம்பெல்லாம் ரத்தம் சொட்ட உடுப்பெல்லாம் கிழிந்து அலங்கோலமாய் வந்த வீராசாமியைக் கண்டதும் அங்கு பெருங் கிளர்ச்சி உண்டாயிற்று.

''என்ன?''

''ஏது?''

''அகப்பட்டானா!''

''ஓடிப் போனானா?''

''ஐயோ பாவம்; நன்றாய் அடிபட்டிருக்கிறான்!''

''எத்தனை பேர்?''

''திருட்டுப் பசங்கள்!''

இவ்வாறு ஏககாலத்தில் பலர் கூச்சல் போட்டார்கள். வீராசாமிக்குக் கொஞ்சம் விஷயம் விளங்கிற்று. தம் அதிர்ஷ்டத்தைத் தாமே வியந்து கொண்டார்.

இதற்குள் வீட்டு எஜமான் கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஓடி வந்தான். வீராசாமி கையில் பெட்டிகளைக் கண்டதும் அவனுக்குக் கரை காணாத சந்தோஷம் உண்டாயிற்று. ''ஐயோ! பிழைத்தேன். உயிர் வந்தது. நீ மகாராஜனாய் இருக்க வேண்டும்'' என்று வீராசாமியைக் கட்டிக் கொண்டான். பெட்டிக்குள் ரூபாய் 20,000 பெறுமான நகைகள் அல்லவா இருந்தன?

சப் இன்ஸ்பெக்டர் இப்போது குறுக்கிட்டு, ''அதெல்லாம் இருக்கட்டும். என்ன சமாசாரம்? சீக்கிரம் சொல்லு. திருடனை எங்கே கண்டாய்? என்ன நடந்தது? சீக்கிரம் சொல்லு!'' என்றார்.

வீராசாமிப்பிள்ளையின் மூளை வரும்போதே வேலை செய்து கொண்டிருந்தது. எனவே, அவ. தயங்காமல் சொல்லலுற்றார்: ''வடபக்கத்துச் சந்து வழியாய் வந்து கொண்டிருந்தபோது மூன்று தடிப் பசங்கள் குறுக்குச் சந்து வழியாக ஓடி வந்தார்கள்! என்னைக் கண்டதும் திடுக்கிட்டு நின்றார்கள். உடனே எனக்குச் சந்தேகம் தட்டிற்று. 'அடே, திருட்டுப் பயல்களே' என்று கம்மா ஓர் அதட்டல் அதட்டினேன். உடனே மூன்று பேரும் என் மேல் வந்து விழுந்தார்கள். அப்பா! என்ன பாடுபட்டுப் போவேன் ?



கோபு : இருந்தால் ராஜு மாதிரி இருக்கவேண்டும்' கம்பெனியில் வேலை செய்ய.

கிட்டு : என்ன கோபு, ராஜுவுக்கு என்ன?

கோபு : அவன் அப்பா கம்பெனி முதலாளி' மாமனார் யூனியன் லீடர்!

கிட்டு : அதனால் ...

கோபு : லாக் அவுட் என்றால் மாமனார் வீட்டுக்குப் போய்விடுகிறான், ஸ்ட்ரைக் என்றால் அப்பா வீட்டுக்குப் போய்விடுகிறான் !

- முகுந்தன்

தப்பிப் பிழைப்பது இனி மேல் இல்லை என்றே நினைத்துவிட்டேன். இருந்தாலும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு சண்டை போட்டேன். கையில் கத்தி, துப்பாக்கி ஒன்றுமில்லை. அந்த மூன்று பேரிலும் ஒருவன்தான் நல்ல தடியன். ஒரு திமிறு திமிறிக்கொண்டு அவன் நெற்றியைப் பார்த்து ஒரு குத்து விட்டேன். அப்படியே அவன் சுருண்டு விழுந்தான். மற்ற இரண்டு பேரும் ஓடியே போனார்கள். கீழே விழுந்தவன் மறுபடியும் எழுந்து தாக்கினான். மூன்று பேரையே ஒரு கை பார்த்தவன் ஒருவனுக்குப் பயப்படுவேனா? அடித்துப் போட்டேன். அந்த மரத்தடியிலேயே இப்போது கிடக்கிறான். உயிர் இருக்கிறதோ, செத்துப்போனானோ தெரியாது. பெட்டிகளை எடுத்துக் கொண்டு ஓடி வந்தேன்.''

எல்லோரும் கையில் லாந்தர்களுடன் கிளம்பிச் சென்றார்கள். முச்சந்தியில் கீழே விழுந்து கிடந்த பிரம்மாண்ட மனிதனைப் பார்த்ததும் அவர்களுக்குப் பிரமை உண்டாகிவிட்டது. வீராசாமியையும் கீழே கிடந்தவனையும் மாறி மாறிப் பார்த்தார்கள். ''இத்தனை பெரிய ஆளை இவன் எப்படி அடித்தான்?'' என்று அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். நல்ல வேளையாக அவன் மூக்கில் மூச்சு வந்து கொண்டிருந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் கண்களைத் திறந்தான். கையிலும் காலிலும் விலங்கு பூட்டிப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போனார்கள்.

* * *

ஹெட்கான்ஸ்டேபிள் வீராசாமிப் பிள்ளை ஒரு வாரம் ஆஸ்பத்திரியில் இருந்து வஸ்தாது வேணு நாயக்கன் அடித்த அடியினால் உண்டான காயங்களை ஆற்றிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தார். வேணுவும் அந்த ஒரு வாரமாக வெளியில் கிளம்பவில்லை. ஆனால் அடுத்த வீட்டுப் போலீஸ்காரர் ஆஸ்

பத்திரியில் இருப்பதை மட்டும் தன் மனைவி மூலம் விசாரித்துத் தெரிந்து கொண்டான். மீசையை முறுக்கி விட்டுக் கொண்டு, ''வஸ்தாது வேணு நாயக்கனிடமா இவன் கைவரிசையைக் காட்டினான்?'' என்று உறுமிக் கொண்டே இருந்தான்.

''என்னவோ திருடனைப் பிடித்தான் என்று சொல்லிக் கொள்கிறார்கள்!'' என்றாள் மங்கம்மாள்.

''திருடனா, திருடன்! இந்தக் கையினால் எண்ணி 99 குத்து அல்லவா விட்டேன்?'' என்றான்.

''ஐயோ இரையாதேயுங்கள்!'' என்று மங்கம்மாள் அவன் வாயைப் பொத்தினாள்.

எட்டாம் நாள் காலையில் வீராசாமிப் பிள்ளை எழுந்து வீட்டுக்கு வெளியில் வந்தார். அவர் தலையில் இன்னும் கட்டுப் போட்டிருந்தது. வேணுவும் அச்சம்பயம் வெளியே வந்தான். அவனால் சும்மா இருக்க முடியவில்லை. ''என்ன ஓய்! காயம் இன்னும் ஆறவில்லையா?'' என்றான். வீராசாமி சும்மா இருந்தார். வேணு மறுபடியும் ''என்ன ஓய்! பேசக் காணும்? பயப்படாதே. இனிமேல் குத்தவில்லை'' என்றான்.

வீராசாமி, ''என்னங்காணும் உளறுகிறீர்!'' என்றார்.

''நானா உளறுகிறேன்? அதற்குள் முதுகு 99 குத்தையுமா மறந்து விட்டது?'' என்று சொல்லிச் சிரித்தான் வேணு.

''என்ன? நீயா அன்று என்னை அடித்தாய்''

''பின்னே யார்? உன் அப்பனா?''

''இரு, இரு. எதிர் வீட்டுக்காரர்களைக் கூப்பிடுகிறேன். இரண்டு பேரை வைத்துக் கொண்டு இதைச் சொல்லு.''

''சொன்னால் தலை போய்விடுமோ?''

''தலை போகாது. பன்னிரண்டு வருஷங்கள் கடுங்காவல். அவ்வளவுதான். மூன்று திருடர்களில் ஒருவனைப் பிடித்தாகி விட்டது. இரண்டு பேர் ஓடிப் போனார்கள். ஓடிப் போனவர்களில் நீ ஒருவனா? ரொம்பச் சந்தோஷம்'' என்றார் போலீஸ்காரர்.

நடையிலிருந்து இந்த சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த வேணுவின் மனைவிக்குப் பாதிப் பிராணன் போய்விட்டது. வேணுவுக்கு நன்றாய் விளங்கவில்லை. இருந்தாலும் கொஞ்சம் பயம் உண்டாயிற்று. உடனே அவன் தட்டுத் தடுமாறிக் கொண்டு, ''போனதெல்லாம் போகட்டும் அண்ணே! நாம் அண்டை வீட்டுக்காரர்கள். ஏன் மனத்தாங்கல்? — இனி சிநேகமா யிருப்போம்'' என்றான். ''அந்தப் பாக்கியம் எனக்கில்லை நாயக்கரே! நான் நாளையே இந்த வீட்டை விட்டுப் போகிறேன்'' என்றார் வீராசாமி. வேணுவுக்கு மிக்க சந்தோஷம் உண்டாயிற்று. ''தொலைந்தான் சனியன்'' என்று மனத்தில் நினைத்துக் கொண்டான். ''அதேன் அண்ணே வந்து ஆறு மாதங்கள் கூட ஆகவில்லையே? ஏன் போக வேண்டும்?'' என்று கேட்டான்.

வீராசாமிப் பிள்ளை, ''அதை ஏன் கேட்கிறாய் தம்பி! 'யானைக் குட்டி முதலி!' என்னும் பெயர் பெற்ற திருடனை நான் பிடித்துக் கொடுத்தேன். அவனோடு சண்டை போட்டுத் தான் காயமாயிற்று. இதற்காகச் சர்க்கார் என்னை சப்-இன்ஸ்பெக்டர் வேலைக்கு உயர்த்தியிருக்கிறார்கள். அதோடு திருட்டுப் போன நகையை மீட்டுக் கொடுத்ததற்காக ஆத்தூர் ஜமீன்தார் ஆயிரம் ரூபாய் வெகுமதி கொடுத்தார். இனிமேல் நான் ஏன் இந்த எட்டு ரூபாய் வீட்டில் குடியிருக்க வேண்டும்? முப்பது ரூபாய்க்கு ஒரு மச்சு வீடு பார்த்திருக்கிறேன்!'' என்றார்.

வேணு நாயக்கனுக்கு இன்னும் விளங்கவில்லை. மனக் குழப்பமே அதிகமாயிற்று. ''என்னடா அதிசயம்! குற்றுயிராகும் வரையிலும் தலையிலும் முதுகிலும் மாறி மாறிக் குத்தியவன் நான். என்னமோ திருடன் திருடன் என்கிறானே!'' என்று திகைத்தான்.

அன்று சாயங்காலம் சாராயக் கடைக்குப் போனான். [illegible] விசாரித்து விஷயங்களையெல்லாம் நன்றாகத் தெரிந்து கொண்டான். அன்றிரவு வந்து வீட்டில் சுரமாகப் படுத்தவன் அப்புறம் ஒரு மாதம் வரை எழுந்திருக்கவில்லை.







# இதய வீணை



சின்னஞ் சிறு வயதில் வீட்டை விட்டுப் பெற்ற தகப்பனாலேயே துரத்தப்பட்ட சுந்தரத்துக்குத்தான் எத்தனை சோதனைகள்! காஷ்மீரில் வழிகாட்டியாக, தமிழ் நாட்டில், வடநாட்டுச் சாதுவாக, பிச்சைக்காரனாக, கொலைக் குற்றம் சுமத்தப்பட்டுக் காட்டில் மறைந்து திரியும் அநாதையாக அலைந்து, சொல்லவும் நினைக்கவும் கூசும் அபாண்டமான பழியையும் சுமக்க நேர்ந்தது!

இவ்விவரங்களை அறிந்ததும், அந்தப் பாத்திரத்தை ஏற்றிருப்பவர் — 'பாரத்' புரட்சி நடிகர் எம். ஜி. ராமச்சந்திரன் தான் என்பது யாருக்கும் எளிதில் புரிந்துவிடும். தாயோரைக் காத்து, தீயோரைத் திருத்துக் கட்டும் நல்லவனாக வரும் எம். ஜி. ஆர். 'சும் சும்' குத்துச் சண்டையிலிருந்து செய்யாத குற்றத்துக்காகக் கண்ணீர் வடித்துக் கடைசியில் அதற்காக அடி வாங்கும் கட்டம் வரையில் நடிப்பில் நிறைவை அளிக்கிறார். விறுவிறுப்பும், சுறுசுறுப்பும் நிறைந்த சண்டைக் காட்சிகளில் 'சாமானியர்'களின் கையொலியையும், சீழ்க்கை ஒலியையும் பெறுகிறார்.

படத்தில் நன்றாய் நடிப்பவர்களில் முதல் வரிசையில் இடம் பெறுபவர் லக்ஷ்மி. கணவனால் சந்தேகிக்கப்பட்டு வெறுக்கப்படும் கட்டத்தில் உணர்ச்சி பொங்க நடிக்கிறார். மனைவியைச் சந்தேகிக்கும் கணவனாக வரும் சிவகுமார் தம் நடிப்பில் குறைப்பட இடம் வைக்கவில்லை.

கிருஷ்ணன் பஞ்சுவின் டைரக்ஷன் சிறப்பாயிருக்கிறது.

படத்தின் பாராட்டுக்குரிய அம்சம், அரசியல் பூச்சுடன் இரு பொருள்படும் சுவையான வசனம். சொர்ணம் தீட்டியிருக்கிறார்.

''இதய வீணை''க்கு 'ஏ ஒன்' சர்ட்டிபிகேட் அளிப்பது ஒளிப்பதிவு. குறிப்பாக, காஷ்மீரின் பனி மூடிய இமயச் சாரல்களையும், இயற்கை எழில் கொஞ்சும் வண்ண மலர்களையும், திகிலைத் தரும் மலைப் பாதைகளில் நடக்கும் சண்டைக் காட்சிகளையும் சொல்லலாம். படம் முழுதும் எழில் ஓவியமாகப் படைத்திருக்கும் ஒளிப்பதிவாளர் ஏ. சண்முகம் பாராட்டுக்குரியவர்.

வாலியின் ''காஷ்மீர் பியூட்டிபுல் காஷ்மீர்'' என்ற பாடலும் கவிஞர் புலமைப்பித்தனின் ''பொன்னந்தி மாலைப் பொழுது'' என்ற பாடலும் நினைவில் தங்குகின்றன. மற்றப் பாடல்கள் பெருமூச்சு விடச் செய்கின்றன!

இப்படத்தில் சில அதிசய மனிதர்கள்: (1) சுமார் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகும் இளமையாகவே தோன்றும் தந்தை. (2) தன் மனைவியைக் கெடுத்தவன் என்று நினைத்துக் கைத்தடியினால் வாங்கு வாங்கென்று வாங்கியும் மூர்ச்சை போட்டு விழாத கதாநாயகன் (3) ஒருவன் பயங்கரமாக அடித்துக் கொடுமைப்படுத்துவதைப் பார்த்துக் கொண்டு தாமும் தடுக்காமல், போலீசுக்கும் தெரிவிக்க முயலாமல் இருக்கும் ஒரு பிரபல அட்வகேட்!!!

மணியனின் ''இதய வீணை'' உதயம் புரொடக்ஷன்ஸாரின் வண்ணப் படமாக வெளிவந்திருக்கிறது. தயாரிப்பாளர் மணியனுடன் வித்துவான் வே. லட்சுமணனும் கருத்து சேர்ந்திருக்கிறார்.

— காந்தன்






## கொடுமைகளைக் கட்டவிழ்க்கும் திட்டம்!

நெல்லை மாவட்டம் வடக்கு வள்ளியூரில் வயலில் வேலை செய்து கொண்டிருந்த இருபத்தைந்து வயதான இளம் வாலிபர் ஒருவரை அக்டோபர் முதல் நாளன்று நான்கு பேர்கள் சேர்ந்து ஒரு ஜீப் காருக்குள் தள்ளித் திசையின்வலை என்ற இடத்துக்கு எடுத்துச் சென்று பலவந்தமாக 'வாசெக்டமி' (அறுவைச் சிகிச்சை) ஆபரேஷன் செய்ததாக ''ஹிந்து''வில் (14-10-72) செய்தி வெளியாகியுள்ளது. அந்த வாலிபன் தன் பெற்றோர்களுக்கு ஒரே மகன் என்றும், இன்னும் திருமணமே ஆகாதவன் என்றும் அச்செய்தி கூறுகின்றது. இரவு வெகுநேரமாகியும் மகன் வீடு திரும்பாததினால் கவலை கொண்ட பெற்றோர்கள், விஷயமறிந்து ஆஸ்பத்திரிக்குச் சென்று மீட்டு வந்ததாகவும், மருத்துவ மனையில் தந்த ''ஊக்கப் பணம்'' எழுபத்தைந்து ரூபாயை அவர்கள் நிராகரித்ததாகவும் தெரிகின்றது.

பத்திரிகைகளில் வெளியாகும் இதுபோன்ற செய்திகள் படிப்பவருக்குச் சுவையூட்டும் வகையிலும், அன்றே மறக்கக் கூடியதாகவும் இருக்கலாம். ஆனால், அக்கொடுமைக்கு ஆளான நபரின் குடும்பத்தின் எதிர்காலம் எந்த அளவுக்கு இதனால் பாதிக்கப்பட்டிருக்கும் என்று எண்ணிப் பார்த்தால் மிகவும் வேதனையாக இருக்கின்றது. வட்டார அபிவிருத்திக்காகக் கொடுக்கப்பட்டிருக்கும் ஜீப் கார்களை இதுபோன்ற காரியங்களுக்கெல்லாம் பயன்படுத்துவதை உடனடியாகத் தடுத்து நிறுத்த வேண்டும். அரசாங்கத்தின் கெடுபிடி தாங்க மாட்டாமல், புள்ளி விவரங்களை அதிகரித்துக் காட்ட, அதிகாரிகள் இம்மாதிரி இழிவான செய்கைகளில் ஈடுபடுகின்றனர். முனிசிபாலிடியினர் தெருவில் அலையும் நாய்களைப் பிடிப்பதைப் போல், மனிதர்களையும் பிடிக்க ஆரம்பித்தால், குடும்பக் கட்டுப்பாடு திட்டம் கொடுமைகளைக் கட்டவிழ்த்துவிடும் திட்டமாக மக்களால் எண்ணப்படும்.

சென்னை
17—10—72 பி. ஆர். சீனிவாசன்

## திறந்தவெளி திரைப்பட அரங்கு

எண்பதாயிரம் மக்களுக்கு ஒன்று என்ற விகிதத்தில்தான் இந்தியாவில் சினிமா தியேட்டர்கள் உள்ளன. அமெரிக்காவில் பத்தாயிரம் பேர்களுக்கு ஒன்று. இத்தாலியிலும் ருஷ்யாவிலும் ஐயாயிரம் பேர்களுக்கு ஒன்று என்ற விகிதத்தில் உள்ளன.

பெருவாரியான மக்களுடன் செய்தித் தொடர்பு கொள்ளவும் அவர்களுக்குக் கல்வி அறிவு புகட்டவும் சினிமா ஒரு சக்தி வாய்ந்த சாதனம் என்பதில் யாருக்கும் ஐயமில்லை. நமது நாட்டில் கிராமப்புறங்களில் நிரந்தர சினிமா தியேட்டர்களை ஆரம்பிப்பது சாத்தியமில்லாதிருப்பதற்குக் காரணம், ஒரு சினிமா தியேட்டர் கட்ட மூன்று லட்சம் ரூபாய் செலவாகும் என்பதுதான். இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண ஒரே வழி, திறந்தவெளி சினிமாதான். இதற்கு ஐம்பதாயிரம் ரூபாய்தான் செலவாகும். மக்களின் தேக ஆரோக்கியத்தையும் கெடுக்காது. பூங்காச் சூழலில் அமர்ந்திருந்து படம் பார்க்கும்போது மனத்துக்கு ஏற்படும் கிளுகிளுப்பு அலாதியான ஒன்றாக இருக்கும். மழை பெய்யும்போது ஒதுங்கிக் கொள்ள ஒரு பக்கமாகக் கொட்டகை ஒன்று அமைக்கலாம். பாதுகாப்புக்குச் சுற்றுச் சுவர் எழுப்பலாம். எல்லாம் மேற்சொன்ன ஐம்பதாயிரத்துக்குள் அடங்கிவிடும்.

இதுபோன்ற சினிமாக்கள் கிராமப்புறங்களில் நிறைய ஏற்பட்டால் ஏழைக் கிராமவாசிக்குச் சினிமாப் பார்க்கப் பக்கத்து ஊருக்குப் போய்வரும் பயணச் செலவு மிச்சமாகும்.

இந்தத் திறந்தவெளி சினிமா அரங்குகளில் பிரதான சினிமாவைத் தவிர, விவசாய — தொழில் வளர்ச்சிக்கு மக்களை ஊக்குவிக்கும் விதமாகவும், சமூக நலத் திட்டங்களில் அவர்கள் பங்கெடுத்துக் கொள்வதை வரவேற்கும் விதமாகவும் அவர்களுக்குக் கல்வி புகட்டும் விதமாகவும் பலவித சிறு திரைப் படங்களைக் காட்டலாம்.

பாரத மக்களும் நாடும் துரித முன்னேற்றம் அடைய இந்தச் சக்தி வாய்ந்த சாதனத்தை மத்திய, மாநில அரசுகள் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

சென்னை — 34 என். கிருஷ்ணசாமி
20—10—72 திரைப்படத் தயாரிப்பாளர்—
இயக்குனர், துணைத் தலைவர்,
தென் இந்திய திரைப்பட
நுண்கலைஞர்கள் சங்கம்

## வன்முறை வேண்டாம்!

அண்மையில் தி.மு.க.விலிருந்து அக்கட்சியின் பொருளாளர் திரு எம். ஜி. ராமச்சந்திரனை நீக்கிவிட்டதன் காரணமாகக் கொந்தளிப்பான நிலை ஏற்பட்டுள்ளது. மாணவர்கள் பொதுச் சொத்துக்களை அழித்தல், நகரசபை ஜீப்பைக் கொளுத்துதல், அரசு உந்து வண்டிகளின் மீது கல்லெறிதல், கண்ணாடிக் கதவுகளை உடைத்தல், தார் பூசுதல் முதலியவைகளைச் செய்து வருகிறார்கள்.

பொதுச் சொத்துக்களுக்குத் தீங்கு விளைவிப்பது நம்மை நாமே அழித்துக் கொள்வது போலாகும். திரு எம். ஜி. ஆர். அவர்களே இதுபோன்ற செயல்களைத் தவிர்க்குமாறு உருக்கமாய் வேண்டிக் கொண்டுள்ளார். மாணவர்கள் அவரது கோரிக்கைக்குச் செவி சாய்க்க வேண்டும்.

சென்னை — 30
19—10—72 எம். ராமமூர்த்தி



# அன்னைத் தெய்வம்

ஜகத்குரு
ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசார்ய ஸ்வாமிகள்

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று ஒளவைப் பாட்டி சொல்லியிருக்கிறாள். இரண்டு முன்னறி தெய்வங்களிலும் முன்னதாக 'அன்னை'யைச் சொல்லியிருக்கிறாள். தைத்திரீயோபநிஷதமும், 'மாதாவைத் தெய்வமாகக் கொள்வாயாக; பிதாவைத் தெய்வமாகக் கொள்வாயாக' என்கிறது. இங்கேயும் முதலில் அம்மாவைத்தான் சொல்லியிருக்கிறது.

தாயாரைத் தெய்வமாக நினைக்க முடியுமானால், இதையே திருப்பி வைத்துப் பார்க்கும்போது தெய்வத்தைத் தாயாராக நினைக்க முடியும். சர்வ லோகங்களையும் படைத்துக் காத்துக் கொண்டிருக்கிற மகா சக்தியைத் தாயாராக நினைக்கும்போது 'அம்பாள்' என்கிறோம்.

எல்லாமாக ஆகியிருக்கிற பரமாத்மா, நாம் எப்படி நினைத்தாலும் அப்படி வந்து அருள் செய்கிறது. எந்த ரூபமாகத் தியானித்தாலும் அப்படியே வந்து அநுக்கிரகம் செய்கிற தன்மை பரமாத்மாவுக்கு உண்டு. அப்படி, சாக்ஷாத் பரப்பிரம்மமே தாயாகி, அம்பிகையாய் இருந்துகொண்டு நமக்கு அநுக்கிரகம் செய்ய வேண்டுமென்று நாம் பிரார்த்தித்தால் அவ்விதமே வருகிறது.

பரமாத்மாவை அன்னைத் தெய்வமாக பாவிப்பதில் தனியான விசேஷம் உண்டு. அம்மாவிடம் நமக்குள்ள அன்பும், அம்மாவுக்கு நம்மிடம் உள்ள அன்பும் அலாதியானவை அல்லவா? எனவே, 'அம்மா' என்று நினைத்து பக்தி செய்தால் ஒரே அன்புமயமாக இருக்கிறது; ஆனந்த மயமாக இருக்கிறது. நாம் குழந்தையாகிவிடுவதால், தானாகவே காமக் குரோதாதிகள் நம்மை விட்டு விலகுகின்றன. வயசேறிப் போவதால் ஏற்படும் விகாரங்களை, அவளுடைய குழந்தை என்ற உணர்வினால் போக்கிக் கொள்கிறோம்.

பரமாத்மாவை 'அம்மா' என்பது நாமாக உபசாரத்துக்குச் செய்கிற பாவனை அல்ல. வாஸ்தவத்திலேயே பரமாத்மா ஒரு தாயாரின் அன்போடுகூடவே சமஸ்தப் பிராணிகளுக்கும் அநுக்கிரகம் செய்து கொண்டிருக்கிறது.

இந்த ஜன்மத்துக்கு ஏற்பட்ட தாயையே தெய்வமாக வழிபட வேண்டுமானால், எந்தெந்த ஜன்மத்துக்கும் துணையாக இருக்கிற பரமாத்மாவையும் தாயாக வைத்து வணங்கத்தான் வேண்டும். நம் வீட்டு அம்மா, இந்த ஒரு ஜன்மாவில், நாலைந்து குழந்தைகளுக்கு மட்டும் தாய் ஆவாள். அம்பிகையோ எல்லா ஜன்மங்களுக்கும் எல்லா ஜந்துக்களுக்கும் தாயாக இருக்கிறவள். அவள் ஜகன்மாதா. அணு முதல் மனிதன் வரை, பக பட்சி, புழு பூச்சி, புல் செடி கொடி மரம் எல்லாம் ஒரே சக்தியிலிருந்துதானே வந்திருக்கின்றன? ஒரே ஜகன்மாதாவிடமிருந்துதான் நாம் இத்தனை பேரும், இத்தனை வஸ்துக்களும் வந்திருக்கிறோம். பரமாத்மாவை அம்பிகையாகப் பூஜிப்பதால், இந்த அநுபவம் பிறக்கும். அவள் ஒருத்திதான் அம்மா; நாம் அனைவரும் அவளுக்குப் பிறந்த குழந்தைகள்; அதாவது எல்லாரும், எல்லாமும் சகோதரர்கள் என்ற அநுபவம் வரும்.

தெய்வங்களும், அவதார புருஷர்களும், மகான்களும்கூட அம்பாளை உபாசித்து அநுக்கிரகம் பெற்றிருக்கிறார்கள். ஆதிசங்கர பகவத்பாதர்களும், காளிதாசனும் அவளுடைய அநுக்கிரகத்தாலேயே விசேஷ வாக்குச் சக்தி பெற்றார்கள். திருஞானசம்பந்தருக்கு அவளது க்ஷீரமே திவ்வியப் புலமை தந்தது.

எல்லாவித இகபர நலன்களும் தருகிற அம்பிகை, விசேஷமாக வாக்குவன்மையை அருளுகிறாள். ஏனெனில், அவளே அக்ஷர ஸ்வரூபமானவள். நம் உடலின் மேல் சதையைச் சிறிது கீறிவிட்டால் — வெளியில் நாம் எத்தனை அழகாக இருந்தாலும் — உள்ளே அருவருப்புத் தருகிற வஸ்துக்களையே பார்க்கிறோம். பரமாத்மா அம்பாளாக வருகிறபோது தரித்த சரீரமோ கருணைமயமானது. அம்பிகையாக வரும்போது பரமாத்மா ஐம்பத்தொரு அட்சரங்களையே சரீரமாகத் தரித்துக் கொண்டு வருகிறது. அதனால்தான் தேவி உபாசகர்கள் விசேஷ வாக்குவன்மை பெறுகிறார்கள்.

லோகம் முழுவதற்கும், காலம் முழுவதற்கும் தாயாக இருந்து அநுக்கிரகம் செய்கிற பராசக்தியின் கடாக்ஷம் எப்படிப்பட்டவனையும் கைதூக்கி ரட்சிக்கும். அந்த அம்பிகையை நாம் அன்போடு தியானம் செய்ய வேண்டும்; அட்சர மயமானவளை வாக்கால் துதிக்க வேண்டும். அம்மாவின் சரீரம், மனப்பான்மை எல்லாம் குழந்தைக்கும் இருப்பது போல் அம்பாளே நம் சரீரம், மனம் எல்லாமாகி யிருக்கிறாள் என்ற உணர்ச்சியோடு — அவள் வேறு நாம் வேறு அல்ல என்ற அனன்ய பாவத்தோடு — அபேதமாக அம்பாளை உபாசிக்க வேண்டும்.

**பரமாத்மாவைத் தாயாக வழிபடுவதன் விசேஷம் என்ன?**

வியக்கவைக்கும் உங்கள் அழகை
வெளிப்படுத்திக் காட்டும் ஜரிகைப் புடவைகள். இப்போழுது
ஹேண்ட்லூம் ஹவுஸில் வந்து குவிந்துள்ளன.

உங்கள் அழகை
சிறப்பாக எடுத்துக்காட்ட
காஞ்சிபுரம், பெனாரஸ், ராஜஸ்தான்
புடவைகள்.



**ஹேண்ட்லூம் ஹவுஸ்**

9, ரத்தன் பஜார், சென்னை 600003

FDS-HH-1830 THA

**10%** விசேஷ தள்ளுபடி 3-11-72 வரை.
29-10-72 ஞாயிற்றுக்கிழமை திறந்திருக்கும்

# அலை ஓசை

அமரர் கல்கி

## 8. மரத்தடியில்

இரும்பையொத்த கையினால் தன் கையை அவ்விதம் பிடித்தவன் ஆஜானுபாகுவான ஒரு போலீஸ்காரர் என்பதைக் கண்ட சூரியாவின் உள்ளத்தில் ஒரு கண நேரத்துக்குள் ஆயிரம் எண்ணங்கள் பாய்ந்து சென்றன. இத்தனை நாட்கள், இத்தனை தூரம் பிரயாணம் செய்தபோதெல்லாம் பிடிபடாமல் வந்து கடைசியாக இந்தத் தில்லி நகரின் முழுச் சோம்பேறிப் போலீஸ்காரரிடந்தானா சிக்கிக் கொள்ள வேண்டும்? அதுவும் தான் செய்ய வேண்டிய முக்கியமான காரியங்கள் சில பாக்கியிருக்கும்போது? இன்னும் இரண்டு நாட்கள் அவகாசம் தனக்குக் கிடைத்திருக்கக் கூடாதா?—இவ்விதம் ஏற்பட்ட மனக் கலக்கத்தைச் சூரியா வெளியில் காட்டிக் கொள்ளாமல், "யார் நீ? எதற்காக என் கையைப் பிடிக்கிறாய்?" என்று அதட்டலாகக் கேட்டான். போலீஸ்காரர், "இன்ஸ்பெக்டர் சாகிப் உன்னைக் கூட்டிக் கொண்டு வரச் சொன்னார்!" என்று சொன்னதும் சூரியாவின் கலக்கம் அதிகமாயிற்று. "உன் இன்ஸ்பெக்டர் சாகிப்பை எனக்குத் தெரியாது. அவரிடம் எனக்கு என்ன வேலை? நான் வர முடியாது!" என்று சொன்னான்.

அதற்கு அந்தப் போலீஸ்காரர், "இன்ஸ்பெக்டர் சாகிப்பைப் பார்த்தால் அப்படிச் சொல்ல மாட்டாய். சீக்கிரம் வா!" என்று கூறினார்.

இதை அவர் கூறிய குரல் சூரியாவின் மனத்தில் ஏதோ ஒரு சந்தேகத்தை உண்டாக்கியது. குரலைக் காட்டிலும் அதிகமாக அந்தப் போலீஸ்காரருடைய முகத்தில் தோன்றிய புன்னகையும் கண் சிமிட்டலும் சூரியாவின் மனத்தில் குழப்பத்தை உண்டாக்கின. இதற்குள்ளே ஜும்மா மசூதியின் படிகளில் அவர்கள் நின்ற இடத்துக்கு அருகில் கூட்டம் அதிகமாகச் சேர ஆரம்பித்தது. சிலர் போலீஸ்காரருக்கும் சூரியாவுக்கும் நடந்த விவாதத்தைக் கவனிக்கவும் தொடங்கியிருந்தார்கள். இதையெல்லாம் ஒரு விநாடி நேரத்துக்குள் எண்ணிப் பார்த்து எப்படியிருந்தாலும் அந்தப் போலீஸ்காரருடன் போவதே நல்லது என்று சூரியா தீர்மானித்தான். "சரி; வருகிறேன். இன்ஸ்பெக்டர் சாகிப் எங்கே இருக்கிறார்?" என்று கேட்டான் சூரியா. "பேசாமல் என்னுடன் வா! ஆனால் ரொம்ப நெருங்கி வராதே! கொஞ்சம் தூரத்திலேயே என் பின்னால் வந்து கொண்டிரு! இன்ஸ்பெக்டர் சாகிப்பிடம் உன்னை நான் அழைத்துக் கொண்டு போகிறேன்!" என்று சொல்லி விட்டுப் போலீஸ்காரர் நடந்தார்.

சூரியாவுக்கு இப்பொழுது தைரியம் அதிகமாயிற்று. தான் தப்பித்துக் கொள்வதற்குச் சௌகரியமாகப் போலீஸ்காரர் முன்னால் சென்றதினாலும், அவன் திரும்பிக்கூடத் தன்னைப் பார்க்காததினாலும் சூரியாவின் மனத்தில் ஏற்கனவே தோன்றிய எண்ணம் உறுதிப்பட்டது. போலீஸ்காரர் போன வழியே, அவனைத் தன் கண் பார்வையிலிருந்து தவறவிடாமல், பின்னால் நடந்து சென்றான். போலீஸ்காரர் ஜும்மா மசூதியைச் சுற்றி ஜே ஜே என்று நெருங்கி நின்ற ஜனக் கூட்டத்தின் வழியாகப் புகுந்து நடந்து வெள்ளி வீதிக்குச் சென்று மணிக் கூண்டை அடைந்தான். பிறகு டவுன் ஹால் காம்பவுண்டுக்குள் புகுந்து போய் அதன் பின்புறத்தில் கொஞ்சதூரத்தில் இருந்த விசாலமான மைதானத்தை அடைந்தான்.

இன்று 'காந்தி மைதானம்' என்று பெயர் பெற்று விளங்கும் அந்த மைதானத்தில் ஆங்காங்கே சில மரங்களும் செடிகளும் இருந்தன. மைதானத்தின் விளிம்பை அடைந்ததும் போலீஸ்காரர் நின்று திரும்பிப் பார்த்தார். சூரியா சமீபத்தில் வந்த உடனே அவர் சற்றுத் தூரத்தில் இருந்த ஒரு மரத்தைச் சுட்டிக்காட்டி, "அந்த மரத்துக்குப் பின்னால் இன்ஸ்பெக்டர் சாகிப் இருக்கிறார். போய்ப் பார்த்துக் கொள்! இன்ஸ்பெக்டர் சாகிப்பும் நீயும் பேசும்போது நான் அருகில் இருப்பது நன்றாயிராது. உங்களுக்குள் எத்தனையோ ரகசியங்கள் இருக்கும்!" என்று சொல்லி மறுபடியும் புன்னகை புரிந்தார்.

சூரியா பொங்கி வந்த வியப்புடனே போலீஸ்காரர் சுட்டிக் காட்டிய

மரத்தை நோக்கிச் சென்றான். மரத்தின் அருகில் போகும்போது அதன் பின்னால் ஒரு பெண் உட்கார்ந்து கையில் வைத்துக் கொண்டிருந்த புத்தகத்தை ஆழ்ந்த கவனத்துடன் படித்துக் கொண்டிருந்தது தெரிந்தது. ''அவள் யார்?'' என்ற எண்ணம் சூரியாவின் மனத்தில் உதயமாவதற்குள், அவனுடைய காலடிச் சத்தத்தைக் கேட்டு அந்தப் பெண் தலை நிமிர்ந்து பார்த்தாள். அவள் தாரிணி என்று கண்டதும் சூரியாவுக்கு மகிழ்ச்சி பொங்கிற்று.

''வருக! வருக! வீரர் சூரியாவின் வரவு நல்வரவாகுக!'' என்றாள் தாரிணி.

''ஓகோ! இன்ஸ்பெக்டர் சாகிப் நீங்கள்தானா? அந்தப் போலீஸ்காரர் என் கையைப் பிடித்ததும் ஒரு நிமிஷம் திணறிப் போய்விட்டேன்!'' என்று சொல்லிக் கொண்டே சூரியா தாரிணிக்கு எதிரில் உட்கார்ந்தான். மேலும் தொடர்ந்து, ''உங்களுடைய சாமர்த்தியம் எனக்குத் தெரிந்த விஷயந்தான். ஆயினும் ஒரு போலீஸ்காரரையே உங்கள் வலையில் சிக்க வைப்பீர்கள் என்று எதிர்பார்க்கவில்லை'' என்று சொன்னான்.

''போலீஸ்காரரைப் பார்த்து எதற்காக அவ்வளவு பயம்? புரட்சி வீரர் சூரியாவே போலீஸ்காரருக்குப் பயப்பட்டால் மற்றவர்களின் கதி என்ன?'' என்று தாரிணி கேட்டாள்.

''பயம் என்று நான் சொன்னேனா? எத்தனையோ இடங்களில் எவ்வளவோ வேஷங்கள் போட்டு எத்தனையோ தந்திரம் செய்து போலீஸாரிடம் தப்பி வந்தேன். புனிதமான சந்நியாசி வேஷம் கூடப் போட்டுக் கொண்டேன். அப்படியெல்லாம் செய்து இத்தனை தூரம் தில்லிக்கு வந்துவிட்டுத் தங்களைச் சந்திக்காமல், விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்ளாமல், போலீஸ் 'லாக்—அப்' புக்குப் போகிறதென்றால் திகைப்பாயிராதா?''

''போன காரியமெல்லாம் பூர்த்தியாயிற்றா?'' என்று தாரிணி கேட்டாள்.

''எப்படிப் பூர்த்தியாகும்? அதற்குள்ளேதான் தலை போகிற காரியம் என்று தங்களிடமிருந்து கடிதம் வந்துவிட்டதே? அந்தக் கடிதத்தினால் தேவபட்டணத்தில் நேர்ந்த விபரீதங்களைக் கேட்டால் ஆச்சரியப்படுவீர்கள்! எதற்காக அப்படிக் கடிதம் எழுதினீர்கள்? சீதாவுக்கு அவ்விதம் என்ன நேர்ந்துவிட்டது? உண்மையில் சீதாவை நினைத்தால் எனக்குக் கோபம் வருகிறது. ஒரு தனிப்பட்ட மனுஷிக்காக எவ்வளவோ முக்கியமான தேசிய காரியங்கள் தடைப்பட்டுப் போகிறதென்றால்....?''

''நான் அவ்விதம் நினைக்கவில்லை. கோபுரத்தைப் பொம்மை தாங்குகிறது என்று நினைத்துக் கொள்வதைப் போல நம்மாலேதான் தேசத்தின் காரியங்கள் நடக்க வேண்டும் என்று நினைத்துக் கொள்கிறோம். தெய்வசித்தம் ஒன்று இருக்கிறது; அதன் சட்டப்படி எல்லாம் நடக்கின்றன. தேசத்தை நாம் காப்பாற்ற முயல்வதைவிட நமக்குத் தெரிந்திருக்கும் ஒருவரின் கஷ்டத்தைப் போக்கினால் கை மேல் பலன் உண்டு'' என்றாள் தாரிணி.

''கடைசியாக நாம் சந்தித்தபிறகு தத்துவ ஆராய்ச்சி பலமாகச் செய்திருக்கிறீர்கள். முன் தடவை நாம் பேசிய போது தனிமனிதர்களுடைய சுக சௌகரியங்களைக் காட்டிலும் தேச நன்மையே பெரிது என்று முடிவு செய்தோம். இந்த மாறுதலுக்குக் காரணம் என்னவோ தெரியவில்லை.''

''உங்கள் அத்தங்காள்தான் காரணம். தேசம் எந்தக் கேடாவது கெட்டுப் போகிறது. சீதாவின் கஷ்டம் நீங்கினால் போதும் என்று எனக்கு இப்போது தோன்றுகிறது.''

''சீதாவின் பேரில் உங்களுக்கு அளவில்லாத கருணை உண்டாகியிருக்கிறது. அதற்குக் காரணம் என்னவென்று தெரியவில்லை.''

''ஒருவரிடம் ஒருவர் பிரியம் கொள்வதற்குக் காரணம் வேண்டுமா, என்ன?''

''வேண்டியதில்லைதான். பிரியம் கொள்வதற்குக் காரணம் வேண்டியதில்லை என்பதினாலேதானே ஸ்திரீகள் முதல் நம்பர் அயோக்கியர்கள் பேரில் காதல் கொள்கிறார்கள்?''

''நீங்கள் சொல்வது எனக்கு நன்றாய்ப் புரியவில்லை. ஸ்திரீகள் அயோக்கியர்கள் மீது மட்டுமே காதல் கொள்கிறார்கள் என்று சொல்கிறீர்கள்? அப்படியானால் அதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. ஸ்திரீகள் காதல் கொள்ளக்கூடிய யோக்கியர்கள் சிலரும் இருக்கிறார்கள். எனக்கு அப்படிப்பட்ட யோக்கியர் ஒருவரைத் தெரியும்'' என்று தாரிணி கூறிவிட்டு எங்கேயோ பார்த்தாள்.

சூரியா எரிச்சலுடன், ''அப்பேர்ப்பட்ட தனிப் பெரும் யோக்கியன் யார் என்று எனக்கும் தெரியும். அவன் பெயர் சௌந்தர ராகவன் இல்லையா?'' என்றான்.

''நான் சௌந்தரராகவனை நினைத்துக் கொண்டு பேசவில்லை. என்றாலும் அவரையும் நான் அயோக்கியர் என்று

சொல்ல மாட்டேன். ஏதோ சில தவறுகள் அவர் செய்யக் கூடும். ஆனால் சீதாவிடம் அவருக்கு எவ்வளவோ அன்பு உண்டு என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும். சீதா தன்னுடைய வீண் சந்தேகங்களினால் அவருடைய அன்பையெல்லாம் விஷமாகச் செய்து விடுகிறாள்'' என்றாள் தாரிணி.

''போகட்டும்; ராகவனுடைய அந்தரங்கத்தைச் சீதாவைவிட நீங்கள் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறீர்கள் அல்லவா?''

''சில சமயம் ஒரு பொருளுக்கு மிகவும் சமீபத்திலிருப்பவர்களைக் காட்டிலும் கொஞ்சம் தூரத்தில் இருப்பவர்களுக்கு அதன் சொரூபம் நன்றாய்த் தெரிகிறது. அதனால் சீதாவைக் காட்டிலும் ராகவனுடைய உள்ளத்தை என்னால் நன்றாய் அறிந்து கொள்ள முடிந்தது.''

''யார் கண்டார்கள்? சீதாவைக் காட்டிலும் ராகவனுடைய உள்ளத்துக்கு நீங்கள் அதிக சமீபத்தில் இருக்கலாம் அல்லவா?''

''சூரியா! நீங்கள் ஏதோ விகல்பமாகப் பேசுகிறீர்கள். இத்தனை நேரமும் அறியாமல் போனேன். இப்படிப் பேசுவதானால் நான் உங்களுடன் பேசுவதற்கே இஷ்டப்படவில்லை. நீங்கள் எழுந்து போகலாம்!''

''இந்த மைதானம் உங்களுக்குச் சொந்தமா என்ன?''

''சரி; அப்படியானால் நான் எழுந்து போகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு தாரிணி எழுந்தாள்.

சூரியா பரபரப்புடன், ''தாரிணி! நான் சொன்னதையெல்லாம் வாபஸ் வாங்கிக் கொள்கிறேன். நான் கூறியது பிசகுதான். தயவு செய்து உட்காருங்கள்! சீதா விஷயமாக நான் என்ன செய்யவேண்டும் என்று சொல்லி விட்டுப் போங்கள்!'' என்றான்.

தாரிணி மறுபடியும் உட்கார்ந்து, ''திடீரென்று உங்களிடம் இந்த மாறுதல் காணப்படுவதின் காரணம் தெரியவில்லை. யாரோ ஏதோ சொல்லி உங்கள் மனத்தைக் கெடுத்திருக்கிறார்கள். சீதாவைப் பார்த்துவிட்டு இங்கு வந்தீர்களா?'' என்றாள்.

''இல்லை; ஸ்டேஷனில் இறங்கியதும் நேரே இங்கு வந்தேன். என்னுடைய அறைக்குக்கூடப் போகவில்லை. சீதா எப்படி இருக்கிறாள்? அவள் விஷயத்தில் நான் என்ன செய்ய வேண்டும்?''

''அவள் மனத்தில் ஏதோ ஒரு விஷம் புகுந்திருக்கிறது. ஏதோ ஒரு சந்தேகம் குடிகொண்டிருக்கிறது. அதனாலேயே அவளுடைய குடும்ப வாழ்க்கை பாழாகிக் கொண்டிருக்கிறது. அவளுடைய ஆயுளுக்கே அபாயம் வந்துவிடும்போல் இருக்கிறது. நீங்கள் உடனே போய் விசாரித்து அவளுடைய மனத்திலுள்ளதைத் தெரிந்துகொள்ள முயல வேண்டும். சில நாளைக்கு அவளை எங்கேயாவது அனுப்பிவைத்தாலும் நல்லது.''

''அவள் எந்த ஊருக்குப் போவாள்? போவதற்கு எந்த ஊர் இருக்கிறது? நான் சொல்லுகிறேன், தாரிணி! சீதா இனிமேல் சுகமடைவதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. அவள் விவாகரத்து செய்து கொள்ள வேண்டும். ஆனால் ஹிந்து சாஸ்திரமும் பிரிட்டிஷ் சட்டமும் அதற்கு இடங் கொடுக்கவில்லை. ஆகையால் துன்பப்பட்டுப் பட்டுச் சாகவேண்டியதுதான்.''

''நான்கூடச் சில சமயம் நினைத்ததுண்டு. சீதா விவாகரத்து செய்துவிட்டு உங்களைக் கல்யாணம் செய்து கொண்டால் எவ்வளவு சந்தோஷமாயிருப்பாள் என்று.''

''ஒரு நாளும் இல்லை. நீங்கள் நினைப்பது பெருந் தவறு. சீதாவிடம் என்னுடைய அபிமானம் அந்தவிதமானது அன்று. அத்தையிடம் நான் கொண்ட அபிமானம் அவளுடைய பெண்ணின் க்ஷேமத்தில் அக்கறை கொள்ளச் செய்திருக்கிறது. மற்றபடி அவளுடைய லட்சியங்களுக்கும் என்னுடைய இலட்சியங்களுக்கும் பொருந்தவே பொருந்தாது. சீதா பட்டுப்பூச்சி இனத்தைச் சேர்ந்தவள். பட்டிலும் பகட்டிலும் பளபளப்பிலும் படாடோபத்திலும் பிரியம் கொண்டவள். பார்ட்டிகளுக்குப் போவதே ஜன்ம சாபல்யம் என்று எண்ணியிருக்கிறவள்....''

''சீதா பிறக்கும்போதே இந்த மாதிரி குணங்களுடன் பிறந்தாளா? எல்லாம் பின்னால் ஏற்பட்ட பழக்க வழக்கங்கள்தானே?''

''அது எப்படி இருந்தால் என்ன? உங்களுக்கு ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். தேவபட்டணம் போலீஸாரிடமிருந்து தப்புவதற்காக நான் சந்நியாசி வேஷம் பூண்டேன். அந்த வேஷத்திலேயே நான் சில நாட்கள் இருக்க நேர்ந்தது. அப்போது உண்மையாகவே நான் சந்நியாசியாகிவிட வேண்டும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. மதராஸில் காமாட்சி அம்மாளைப் பார்த்துப் பேசிய பிறகு அந்த எண்ணம் பலம் பெற்றுத் தீர்மானம் ஆயிற்று.''

''தங்களுடைய தீர்மானத்தை நான் மிகவும் மெச்சுகிறேன்.''

''எல்லா விஷயத்திலும் நம்முடைய கருத்துக்கள் ஒத்திருப்பது பற்றிச் சந்தோஷம்'' என்றான் சூரியா.



# ரேடியோவின்
# சிறந்த கட்டங்களுக்கு
# எஸ்ட்ரெலா வின்
# சிறந்த ரேடியோ பாட்டரிகள்

ரேடியோ நாடகங்களின் நவரச நயங்களை நிறைவுடன் கவர்ந்திடும் கணீ-ரென்ற தெளிவுள்ள ஒலியின்பம்—கூடுதலான சக்திசெறிந்த எஸ்ட்ரெலா பேட்டரிகளை உபயோகிக்கும் நல்விளைவே. காகித, பிளாஸ்டிக், உலோக கவச உறைகளிட்ட பேட்டரி வகைகள் உள்ளன நீங்கள் தேர்ந்தெடுக்க. கசியாத் தன்மை உடையவை அவை.நெடுங்காலம் உழைப்பவை. டார்ச்சு-களுக்கும் இவையே சிறந்தவை, ஓங்கிய ஒளியையும் நம்பிக்கையான உழைப்பையையும் தருபவை.





**எஸ்ட்ரெலா**
**பேட்டரிகள்**

**அதிக சக்தி அதிக உபயோகம்**

எஸ்ட்ரெலா பேட்டரீஸ்
லிமிடெட், பம்பாய்-19.

FOCUS / 10 (G) TH



BD. 5117 A

# உங்கள் எழிலின் உன்னதமான பல தோற்றங்கள்

உங்களுக்கென்றே பாம்பே டையிங் அளிக்கும் பல புதிய புடவை வகைகள். மென்மையான, மென்மையழகு மிளிரும் 100% 'டெரீன்'. அசத்தாடும் 'ரேலிகா'— நேர்த்தியான மடிப்புத்திறன் கொண்ட, பாம்பே டையிங்கின் தனிப்பட்ட 100% 'ஆன்டி-க்ரீஸ்' காட்டன் புடவை. இணையற்ற 'ஸ்விஸ் வாயில்கள்'. அழகும் எளிமையும் நிறைந்த வாயில்கள். குறைந்த பட்சம் 100 வெவ்வேறு டிசைன்களிலும் கண்ணைப்பறிக்கும் நிறங்களிலும் கிடைக்கும் புடவைகளை எங்கள் தனிப்பட்ட கடைகளில் கண்டு மகிழுங்கள்.

**பாம்பே டையிங்**

''எனக்கும் சந்தோஷம்தான். ஆனால் காமாட்சி அம்மாள் தங்களுடைய குரு நாதரானது எப்படி ?''

''சீதாவைப் பற்றி விசாரிப்பதற்காக அந்த அம்மாளிடம் போயிருந்தேன். சீதாவுக்கு டைபாய்ட் சுரம் வந்தது பற்றியும் நீங்கள் அவளுக்குச் சிசுருஷை செய்து பிழைக்க வைத்தது பற்றியும் தெரிவித்தாள்.''

'' அவ்வளவுதானா ! அதிலிருந்து எப்படிச் சந்நியாசம் வாங்கிக் கொள்ளும் உறுதி ஏற்பட்டது ?''

''காமாட்சி அம்மாள் இன்னும் சில விஷயங்களும் சொன்னாள். ராகவனுடைய இளம் பிராயத்தில் அவன் வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டப்பட்டதைப் பற்றியும் அவளும் அதற்கு ஆவலாயிருந்தது பற்றியும் சாதி வித்தியாசம் காரணமாகத் தான் சம்மதம் கொடுக்க மறுத்துவிட்டது பற்றியும் சொன்னாள். தாயாருடைய வாக்கை இவ்வளவு பக்தியாக நிறைவேற்றி வைத்த சௌந்தர ராகவனை நான் மனதார மெச்சினேன்.''

''நீங்கள் இன்றைக்கு ஒரு மாதிரி பேசி வந்ததின் காரணம் இப்போது தெரிகிறது. ஒரு விஷயம் கேட்க விரும்புகிறேன். அந்தப் பெண்ணின் இப்போதைய அபிப்பிராயத்தைப் பற்றிக் காமாட்சி அம்மாள் சொன்னாளா?''

''இல்லை; அவளுக்கு எப்படி அது தெரியும்? ஆனால் 'ராகவன் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் ஒருவேளை சந்தோஷமாயிருந்திருப்பான்' என்று சொன்னாள்.''

தாரிணி சிறிது நேரம் யோசனை செய்துவிட்டு, ''இதற்கும் தங்களுடைய சந்நியாசத்துக்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டாள்.

''நான் எப்போதாவது கல்யாணம் செய்து கொள்வதாயிருந்தால் ஒரு பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்ள முடியும். அவள் இன்னொரு ஆசாமியிடம் காதல் கொண்டிருப்பதாகத் தெரிந்தால், நான் சந்நியாசம் வாங்கிக் கொள்வதைத் தவிர வேறு என்ன வழி இருக்கிறது?''

''நீங்கள் நினைப்பது முற்றும் தவறு. அந்தப் பெண்ணின் இதயத்தில் ராகவனுக்கு இப்போது கொஞ்சம்கூட இடமில்லை. நீங்கள் சந்நியாசி ஆனதாகத் தெரிந்தால் அவளும் கிறிஸ்துவ மதத்தைத் தழுவிக் கன்னிகா மடத்தைச் சேர்ந்து விடுவாள்!''

சூரியா ஆர்வத்துடன் தாரிணியின் கரங்களைப் பிடித்துக் கொண்டு, ''இது உண்மைதானா ?'' என்று கேட்டான்.



'' தங்களுடைய இருதயத்தையே கேட்டுப் பார்க்கிறதுதானே ?'' என்று சொன்னாள் தாரிணி.

''என் இருதயம் சொல்லியதை நம்புவதற்கு இதுவரையில் எனக்குப் பயமாயிருந்தது. அவ்வளவு பெரிய பாக்கியம் இந்தத் துரதிர்ஷ்டசாலிக்கு எப்படிக் கிடைக்கும் என்றும், இருதயம் நம்மை ஏமாற்றுகிறது என்றும் எண்ணிக் கொண்டிருந்தேன்.''

''இருதயம் ஏமாற்றவில்லை. சலன சுபாவமுள்ள அறிவுதான் ஏமாற்றிற்று. சீதாவையும் அதே அறிவுதான் ஏமாற்றுகிறது. நீங்கள் உடனே சென்று அவளுடைய நிலையைத் தெரிந்து கொண்டு வாருங்கள். சீதாவை நான் பார்த்து இருபது நாட்கள் ஆகிவிட்டன. எப்படியிருக்கிறாளோ என்று கவலையாயிருக்கிறது.''

''அப்படியே ஆகட்டும். நாளைக்கு நாம் இந்த இடத்திலேயே சந்திக்கலாமா? ''

''கூடவே கூடாது. சுற்றுமுற்றும் பாருங்கள். நம்மை எத்தனை பேர் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தெரியும். நாளைக்கு ஜாகையில் சந்திக்க

வேண்டியதுதான். நம்முடைய நண்பர்கள் உங்களுடைய அனுபவங்களைக் கேட்க ஆவல் உள்ளவர்களாயிருக்கிறார்கள். நாளைக்கு இதே நேரத்துக்கு மணிக் கூண்டுக்கு அருகில் வாருங்கள். போலீஸ்காரர் இந்துலால் உங்களைச் சந்தித்து ஜாகைக்கு அழைத்துக் கொண்டு வருவார். இப்போது என்னுடன் தொடர்ந்து வரவேண்டாம். நான் அந்தப் போலீஸ்காரன் அருகில் போய்ச் சேரும் வரையில் தாங்கள் இந்த மரத்தடியிலேயே உட்கார்ந்திருப்பது நல்லது.''

இவ்விதம் கூறிவிட்டுத் தாரிணி எழுந்து நடந்தாள். சூரியா அங்கேயே உட்கார்ந்து தாரிணியும் போலீஸ்காரரும் மறையும் வரையில் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

## 9. இதயம் நின்றது

தாரிணி கண்ணுக்கு மறைந்ததும் சூரியா அங்கிருந்து எழுந்து செல்லலாம் என்று நினைத்தான். அச்சமயம் இத்தனை நேரமும் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்திருந்த மூன்று மனிதர்கள் தன்னை நோக்கி வருவதைச் சூரியா பார்த்தான். அவர்கள் அருகில் வரட்டும் என்று காத்திருந்தான்.

மூன்று மனிதர்களும் வந்து சூரியாவைச் சுற்றி உட்கார்ந்து கொண்டார்கள்.

''தம்பி! உனக்கு எந்த ஊர்?'' என்று அவர்களில் ஒருவன் கேட்டான்.

''எனக்கு மதராஸ்!'' என்றான் சூரியா.

''ஆ! மதராஸ்!'' என்று மூன்று பேரும் சேர்ந்து சொன்னார்கள்.

சற்றுப் பொறுத்து. ''இங்கு ஒரு பெண் உட்கார்ந்திருந்தாளே, அவள் உனக்கு என்னமாக வேணும்?'' என்று ஒருவன் கேட்டான்.

''அவள் என் சிநேகிதி!'' என்றான் சூரியா.

''ஆகா! அவள் உன் சிநேகிதி!'' என்றார்கள் மூன்றுபேரும் சேர்ந்தாற் போல்.

அதற்குப் பிறகு சற்று நேரம் சம்பாஷணை நகரவில்லை. சூரியா பொறுத்துப் பார்த்துவிட்டு, ''உங்களுக்கு என்ன வேண்டும்? எதற்காகக் கேட்கிறீர்கள்?'' என்றான்.

''பஹுத் அச்சா! அப்படிக் கேள். சொல்கிறோம்'' என்றான் ஒருவன்.

''பஹுத் அச்சா! அப்படிக் கேள். சொல்கிறோம்'' என்றார்கள் மற்ற இருவரும்.

அவர்கள் ஏதோ ஒரு சுதேச சமஸ்தானத்தைச் சேர்ந்தவர்களாயிருக்கலாம் என்று ஏற்கனவே சந்தேகித்தான் சூரியா. இப்போது அவர்கள் பல்லவி, அனுபல்லவி முறையில் பேசுவதிலிருந்து சந்தேகம் உறுதிப்பட்டது.

''சொல்லுங்கள்; கேட்பதற்குத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றான் சூரியா.

''அந்தப் பெண்ணின் சிநேகம் உனக்கு வேண்டாம்!'' என்று ஒருவன் சொன்னான்.

மற்ற இருவரும் அதையே திருப்பிச் சொன்னார்கள்.

''ஏன் அந்தப் பெண்ணிடம் என்ன கெடுதல்? அவளிடம் சிநேகம் செய்தால் என்ன?'' என்று சூரியா கேட்டான்.

''பெரிய இடத்துச் சமாசாரம்!'' என்றான் ஒருவன்.

''ஆமாம், ரொம்பப் பெரிய இடத்துச் சமாசாரம்'' என்றார்கள் மற்ற இருவரும்.

''அப்படியானால் அந்த ரொம்பப் பெரிய இடத்திலே போய்ச் சொல்லுங்கள். என்னிடம் ஏன் சொல்ல வேண்டும்?'' என்றான் சூரியா.

மூன்றுபேரும் ஒருவருடைய முகத்தை ஒருவர் பார்த்தார்கள்.

''எனக்கு நேரமாகிறது; நான் போய் வருகிறேன்'' என்றான் சூரியா.

மூன்று பேரில் ஒருவன் மற்றவர்களைப் பார்த்து, ''சொல்லி விடலாமா?'' என்று கேட்டான்.

''சொல்லிவிடலாமா?'' என்று அவர்களும் கேட்டார்கள்.

முதல் மனிதன் சூரியாவைப் பார்த்து, ''தம்பி! உனக்குப் பணம் வேணுமா?'' என்றான்.

''எவ்வளவு?'' என்று சூரியா கேட்டான்.

முதல் மனிதன் மற்றவர்களைப் பார்த்து, ''எவ்வளவு என்று கேட்கிறான்; சொல்லட்டுமா?'' என்றான்.

''சொல்லு!'' என்றார்கள்.

''தம்பி! உனக்கு லட்சம் ரூபாய் பணம் வேண்டுமா? ஒரு லட்சம் ரூபாய்!'' என்றான் முதல் மனிதன்.

சூரியா கொஞ்சம் திகைத்துப் போனான். மெதுவாகச் சமாளித்துக் கொண்டு, ''கள்ள நோட்டா? நிஜப் பணமா?'' என்றான்.

# வளரும் குழந்தைகளுக்கு இனிய போர்ன்விடா!

சக்தி வளரட்டும்! பள்ளியிலும் விளையாட்டிலும், இன்றும் என்றுமே, வெற்றி அவனுக்கே. ஆம்! அவன் சுவைத்துப் பருகுவது போர்ன்விடா. ஊட்டமளிக்கும் **கோகோ**, பால் மால்ட், சர்க்கரை இவை இனிதே கலந்திட்ட போர்ன்விடாவிலே அடங்கி யுள்ளது அவனுடைய ஒளிமிக்க எதிர்காலம்.






SHB-7379-TH

**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும் காட்பரீஸ் போர்ன்விடா!**



''ஆகா! கள்ள நோட்டு!'' என்று சொல்லிவிட்டு மூவரும் சிரித்தார்கள்.

பிறகு முதல் மனிதன், ''தம்பி! நிஜப் பணம்! ஒரு லட்சம் ரூபாய் நோட்டு வேண்டாம் என்றால் தங்கமாகத் தருகிறோம்!'' என்றான்.

''ஆமாம்; தங்கமாகத் தருகிறோம்'' என்றார்கள் மற்றவர்கள்.

''கொடுங்கள்!'' என்று சூரியா கையை நீட்டினான்.

''கெட்டிக்காரப் பையன்; பணத்துக்குக் கையை நீட்டுகிறான்!'' என்று சொல்லிவிட்டு மூவரும் சிரித்தார்கள்.

கடைசியில் ஒருவன் மென்று விழுங்கிக் கொண்டு, ''ஒரு லட்சம் ரூபாய் கம்மாக் கிடைக்குமா? எங்களுக்கு ஒரு உதவி செய்தால் கிடைக்கும்!'' என்றான்.

''என்ன உதவி?'' என்றான் சூரியா.

''சற்று முன்னால் நீ ஒரு பெண்ணுடன் பேசிக் கொண்டிருந்தாயே? அவளைக் கொண்டு வரும்படி எங்களுக்குப் பெரிய இடத்து உத்தரவு கிடைத்திருக்கிறது. அதற்கு நீ உதவி செய்தால் லட்சம் ரூபாய் ரொக்கமாகப் பெற்றுக் கொள்ளலாம்!''

சூரியா இம்மாதிரி ஏதோ வரப் போகிறது என்று எதிர்பார்த்தான். ஆயினும் அதைக் காதால் கேட்டதும் சொல்ல முடியாத கோபம் வந்தது.

கோபத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டான். இப்போது கோபித்துக் கொண்டு என்ன பயன்? அவர்கள் மூன்று பேர்; முரட்டுத் தடியர்கள். அவர்களுடன் சண்டை பிடிப்பதால் பல காரியங்கள் கெட்டுப் போகும். மேலும் அவர்களுடைய உண்மையான நோக்கம் என்ன என்று அவனுக்கு இன்னும் சந்தேகமா யிருந்தது.

கொஞ்ச நேரம் யோசிப்பது போல் பாசாங்கு செய்துவிட்டு, ''இரண்டு நாட்கள் அவகாசம்கொடுங்கள்; யோசித்துப் பதில் சொல்கிறேன்'' என்றான்.

''எப்போது எங்கே சந்திக்கலாம்?'' என்று முதல் மனிதன் கேட்டான்.

''இதே இடத்தில் இதே நேரத்தில் நாளை மறு நாள் சந்திக்கலாம்!'' என்றான் சூரியா.

''உன்னுடைய ஜாகை எங்கே?'' என்று ஒருவன் கேட்டான்.

''ஜாகை எங்கே?'' என்று மற்ற இருவரும் கேட்டார்கள்.

''தற்போது எனக்கு ஜாகை எதுவும் இல்லை. இனிமேல்தான் தேட வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டு சூரியா எழுந்தான். அவர்களும் எழுந்தார்கள்.

சூரியா எங்கே போனாலும் அவர்களும் சற்றுத் தூரத்தில் பின் தொடர்ந்து வந்தார்கள்.

காரியம் இல்லாத இடங்களுக்கெல்லாம் சூரியா சென்று அந்த மூன்று பேருடைய பார்வையிலிருந்து தப்புவதற்கு இரவு வெகுநேரமாகி விட்டது. ஆயினும் சீதாவை அன்று இரவு எப்படியும் பார்த்துவிடுவது என்ற தீர்மானத்துடன் நடந்தான்.

* * *

சீதா தன்னுடைய வீட்டின் அறையில் தன்னந் தனியாக உட்கார்ந்திருந்தாள்.

சுவரில் மாட்டியிருந்த கடிகாரம், 'டிக் டிக், டிக் டிக்' என்று அடித்துக் கொண்டிருந்தது.

சீதாவின் இதயம் கடிகாரத்தின் 'டிக்' சத்தத்தோடு ஒத்து அடித்துக் கொண்டிருந்தது.

கடிகாரத்தின் ஒவ்வொரு 'டிக்'கும் தன்னுடைய வாழ்நாளின் இறுதியை அருகில் கொண்டு வந்து கொண்டிருக்கிறது என்பது சீதாவுக்குத் தெரிந்துதானிருந்தது.

கடிகார முள் நள்ளிரவின் பன்னிரண்டு மணியை நெருங்க நெருங்க, சீதாவின் இதயத்தில் குத்தியிருந்த துன்ப முள்ளின் வேதனை அதிகமாகிக் கொண்டிருந்தது.

மணி பதினொன்றரை ஆகிவிட்டது. அவளுடைய ஆயுளில் இன்னும் அரை மணி நேரம்தான் பாக்கியிருக்கிறது.

அதற்குள் எத்தனையோ காரியங்கள் செய்தாக வேண்டும்.

குழந்தைக்குக் கடிதம் எழுத வேண்டும்; இவருக்கும் நாலு வரி எழுதத்தான் வேண்டும்.

ஆனால் எத்தனை முயன்றாலும் ஒன்றும் எழுத வரவில்லையே, என்னசெய்கிறது?

சரியாகப் பன்னிரண்டு மணிக்குக் கைத் துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு செத்துப் போவது என்று சீதா முடிவு செய்திருந்தாள்.

அதற்குத் தயாராவதற்காக ஒன்பது மணிக்கே ஆடை ஆபரணங்களை அணிந்து கொண்டாள்.

சாகிறபோது அவலட்சணமாக எதற்காகச் சாக வேண்டும்? நாலு பேர் வந்து பார்க்கிறவர்கள், "அடடா! இப்பேர்ப்பட்ட அழகியை மனைவியாகப் படைத்தும் இந்த ராகவனுக்கு அவளை வைத்துக் கொண்டு வாழக் கொடுத்து வைக்கவில்லையே?" என்று சொல்ல வேண்டாமா?

அதற்காகவே ஆடை ஆபரணங்களைப் பூண்டு அழகு செய்து கொண்டு வந்து எழுதுவதற்கு உட்கார்ந்தாள்.

வஸந்திக்கு முதலில் கடிதம் எழுதி வைக்க எண்ணினாள். ஆனால் குழந்தையை நினைத்துக் கொண்டதும் அழுகை அழுகையாக வந்தது. அவளைப் பார்க்காமல் செத்துப் போகிறோமே என்ற எண்ணத்தினால் நெஞ்சு பிளந்து விடும் போலிருந்தது. குழந்தைக்கு என்ன எழுதுவது? "உன் அப்பா என்னைக் கொன்றுவிட்டார்! அவரை நீ எனக்காகப் பழி வாங்கு" என்று எழுதலாமா? சீச்சீ! இது என்ன பைத்தியக்கார எண்ணம்?

முதலில் லலிதாவுக்குக் கடிதம் எழுதலாம் என்று ஆரம்பித்தாள். "என் ஆருயிர்த் தோழி லலிதாவுக்கு...." என்பதற்குமேல் ஒன்றும் எழுதத் தோன்றவில்லை. லலிதாவை நினைத்ததும் பழைய ஞாபகங்கள் எல்லாம் பொங்கிக் கொண்டு வந்தன. ஆகா! ராஜம்பேட்டையில் கல்யாணத்துக்கு முன்னால் லலிதாவும் தானும் கூடிக் குலாவி அந்தரங்கம் பேசிய நாட்கள் எவ்வளவு ஆனந்தமாயிருந்தன? அப்புறம் இவர் பெண் பார்க்க வந்தபோதும், லலிதாவுக்குப் பதிலாகத் தன்னை மணப்பேன் என்று சொன்ன போதும் தான் அடைந்த களிப்பு என்ன? இப்போது நான் அனுபவிக்கும் நரகவேதனை என்ன? தான் அப்போது லலிதாவுக்குச் செய்த துரோகந்தான் இப்போது தன்னை வந்து இப்படிப் பிடித்திருக்கிறதோ?

லலிதாவுக்கு என்ன எழுதுவது? "என்னை மன்னித்துவிடு!" என்று எழுதுவதா? அப்படி எழுதினால் அவளுக்கு அர்த்தமே ஆகாதே! எதற்காக



"மாநில சுயாட்சி தொடங்கும் ஆண்டினைக் குறிப்பிடுவதற்குமுன், மாவட்ட சுயாட்சிக்கு மாதத்தையும் வட்ட சுயாட்சிக்கு நாளையும் வீட்டு சுயாட்சிக்கு நேரத்தையும் குறித்துவிட வேண்டும் என ஆசைப்படுகிறேன்."

---

மன்னிப்பு என்று கேட்பாளே? தன்னுடைய துயரத்தைச் சொன்னால்கூட அவளுக்கு விளங்காது. அவள் ஆனந்தமான இல்வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறாள். சந்தோஷமாயிருக்கிறவர்களுக்குத் துக்கப்படுகிறவர்களின் துக்கத்தை அறிந்து கொள்ளக்கூட முடியாது. "என் புருஷன் என்னைக் கஷ்டப்படுத்துகிறான்!" என்றால், "வெறுமனே ஒரு புருஷன் கஷ்டப்படுத்துவானா? உன்னுடைய நடத்தையில் ஏதாவது கெடுதல் இருக்கும்!" என்று சொல்லுவார்கள். அதிலும் இல்வாழ்க்கையில் சந்தோஷமாயிருப்பவர்கள் அப்படித்தான் நினைப்பார்கள்.

லலிதாவுக்கு இப்போது என்ன எழுதி என்ன பிரயோஜனம்? சந்தோஷமாயிருக்கிறவளிடம் போய்த் தன்னுடைய துக்கத்தைச் சொல்லிக் கொள்வானேன்? அப்படிச் சொல்லிக் கொண்டு அவள் பரிதாபப்படுவதாக வைத்துக் கொள்ளலாம். அதனால், சாகப் போகிற தனக்கு என்ன உபயோகம் ஏற்படப் போகிறது?

இவருக்குக் கடிதம் எழுதலாம் என்றால், அதைப் பற்றி நினைக்கும்போதே அவளுடைய இதயம் வெடித்துவிடும் போலிருந்தது.

என்னத்தை எழுதுவது?

"இந்த உலகத்தில் தங்களைத் தவிர எனக்கு வேறு கதியில்லை. தாங்களே



"உருவாகப் போகிற சேலம் உருக்காலையில் எவர் சில்வர் உற்பத்தி செய்ய வேண்டுமென்று மத்திய அரசுக்கு ஐடியா தோன்றக் காரணம்; பதினோரு கோடி ரூபாய் பெறுமானமுள்ள கைத்தறித் துணி இங்கு தேங்கிக் கிடப்பதால் இருக்குமோ?"

---

என்னை வெறுத்து விட்டீர்கள். இனி இந்தப் பூமியில் இருந்துதான் என்ன பயன்?'' என்று எழுதலாமா?

'' ஓயாமல், 'தொலைந்து போ!' 'தொலைந்து போ!' என்று சொல்லிக் கொண்டிருந்தீர்களே? அதன்படி இதோ தொலைந்து போகிறேன்'' என்று எழுதி வைக்கலாமா?

இவ்விதம் எண்ணியதும் சீதாவின் கண்களிலிருந்து பொலபொலவென்று கண்ணீர் உதிர்ந்தது.

ராகவன் தன்னை எத்தனையோ விதத்தில் கொடுமைப்படுத்தியதெல்லாம் சீதாவின் மனத்தை அவ்வளவாகப் பாதிக்கவில்லை. ஆனால் 'தொலைந்து போ', 'தொலைந்து போ!' என்று சில காலமாக அவன் அடிக்கடி சொல்லி வந்தது அவளை எல்லையில்லாத் துன்பத்துக்கு ஆளாக்கியது. எங்கே தொலைந்து போகிறது? தன்னை அழைத்துக்கொள்ள யார் காத்துக் கொண்டிருக்கிறார்கள்? தாயில்லை; — தகப்பனைரைப் பற்றித் தகவல் இல்லை. வேறு எங்கே தொலைந்து போகிறது?

ஒரு வழியாகச் செத்துத் தொலைந்து போக வேண்டியதுதான்!

ஆகா! சீதையைப் பூமாதேவி அழைத்துக் கொண்டது போல் தன்னையும் அழைத்துக் கொள்ளக் கூடாதா? சகுந்தலையை அவள் தாயார் அழைத்துக் கொண்டு போனது போல் தன்னைத் தன்னுடைய தாயார் அழைத்துக் கொண்டு போகக் கூடாதா?

அப்படியெல்லாம் கதைகளிலேதான் நடக்கும். உண்மை வாழ்க்கையில் நடைபெறாது. தானே சுட்டுக்கொண்டு செத்துப் போனால்தான் போனது! நல்ல வேளையாக இவர் கைத்துப்பாக்கி வாங்கி வைத்திருக்கிறார்! அதற்காகத் தன் கணவருக்கு நன்றி செலுத்த வேண்டியதுதான். கடிதத்தில் அவ்விதம் நன்றி செலுத்துவதாக எழுதி வைக்கலாமா?

ஐயோ! இந்தக் கடிகாரத்துக்கு என்ன இத்தனை அவசரம்? ஏன் இவ்வளவு வேகமாக இது ஓடுகிறது? ஏன் இவ்வளவு துரிதமாக இருதயம் அடித்துக் கொள்கிறது!

இதோ மணி பன்னிரண்டுக்கு நெருங்கி வந்துவிட்டதே! இன்னும் சில நிமிஷங்கள்தானே பாக்கி இருக்கிறது?

**ப**ன்னிரண்டு மணி அடித்ததும் தன்னைத் தானே சுட்டுக் கொள்வதாகச் சீதா தீர்மானம் செய்திருந்தாள்.

பன்னிரண்டரை மணிக்கு அவர் வருவார். வருவதற்குள்ளே காரியம் முடிந்து போய்விட வேண்டும். அவர் வீட்டிலிருக்கும் போது இந்தக் காரியம் தான் செய்தால், வீணாக அவர் பேரில் பழி விழுந்தாலும் விழும். ''இருந்தும் கெடுத்தாள்; இறந்தும் கெடுத்தாள்'' என்ற அபகீர்த்தி தனக்கு ஏன் ஏற்பட வேண்டும்?

குழந்தை வஸந்தி தாயில்லாப் பெண்ணானாலும், தகப்பனாராவது அவளுக்கு இருக்க வேண்டாமா?

அந்த இரண்டு நிமிஷங்கள் ஆகிவிட்டன. கடிகாரம் டிங், டிங், டிங் என்று பன்னிரண்டு மணி அடித்தது.

மணியை மனத்தில் எண்ணிக் கொண்டே வந்த சீதா, பன்னிரண்டு மணி அடித்து முடிந்ததும் கைத் துப்பாக்கியைக் கையில் எடுக்க எண்ணினாள்.

அந்தச் சமயத்தில் அறையின் அருகில் யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டது.

சீதாவின் இதயத் துடிப்பு சட்டென்று நின்றது: அவளுடைய கை செயலற்றுப் போயிற்று.

வருகிறவர் யார்? அவர்தானா? சீக்கிரம் வந்துவிட்டாரா? மனத்துக்கு மனம் விஷயம் தெரிந்து போய்த் தன்னைக் காப்பாற்றுவதற்காக வருகிறாரா?

கைத் துப்பாக்கியைப் பார்த்ததும் தான் செய்ய எண்ணிய காரியத்தை ஊகித்து அறிந்து கொள்வாரா? தன்னுடைய மன வேதனையைத் தெரிந்து கொள்வாரா? தன்னிடம் பணிந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்வாரா?

(தொடரும்)

உங்கள் வேர்க்குருவைப் போக்கிய அதே நைஸில் தூவுங்கள்.




# சரும எரிச்சலைப் போக்க, ஆண்டு முழுவதும் நைஸில் உபயோகியுங்கள்.

* நைஸில் அரிப்பிலிருந்து இதமளிக்கிறது; உங்கள் சருமத்தைப் பாதுகாக்கிறது.
* நைஸில் வியர்வையையும் ஈரப் பசையையும் மிகவும் நன்றாக உறிஞ்சுகிறது. உடல் துர்நாற்றத்தை விளைவிக்கும் வேர்க்குரு, பூஞ்சண நோய்த்தொற்று மற்றும் கிருமிகளையும் தடுக்கிறது.
* நைஸில், கோடையில் மட்டும் உபயோகிக்கலாம் என்பதல்ல; சுகமுடன் நறுமணமுள்ள நைஸில் நாள்தோறும் உபயோகியுங்கள். எப்பொழுதும் உங்கள் சருமத்தை ஆரோக்கியமாக வைத்திருங்கள்.




# நைஸில்

அன்றாட சருமப் பராமரிப்பு தரும் நறுமணமுள்ள, மருந்து கலந்த பவுடர்

க்ளாக்ஸோ தயாரிப்பு.

ASP/GN-1

# ஜாங்கோ ஜக்கு

கதை: குட்டி கிருஷ்ணன்

சித்திரம்: ராமு

**4**

ஜக்குவைப் பொன் மொழி தொட்டாள். அவனுக்கு 'ஷாக்' அடித்தது. அவளை மின்னலே தாங்கியது! இருவரும் ஒருவரை ஒருவர் ......

'ஸார்! அதை யெல்லாம் படம் போடாதீங்க; வெட்கமாயிருக்கு' என்ற ஜக்குவின் கோரிக்கையை ஏற்கிறார் ஓவியர் ராமு.







... குபால்னு மேலே எழும்பி....



... காலை நீட்டிக்கிட்டு முன்னால் பாய்ஞ்சு ஓர் உதை....




.... எழுப்பி நிறுத்தி....




.... ஒரு ஜூடோ பிடி ....
ஹ ஹாம்


... ஒரு கராட்டே அடி ....
டிஷூம்


... அவ்வளவு தான்
அம்சபம் சொல்லிட்டு
ஓடியே பூட்டான்.
சந்தேகமிருந்தா
ஜிம்மியைக் கேளு!
மை ஹீரோ!


மஸில்ஸ்...
தொட்டுப்
பார்த்துக்கோ!
கத்தியை காட்டுபவன்
கோழை; வித்தையைக்
காட்டாதவன்
ஏழை!


ஆகா! பிரமாத பொன்மொழி
உதிர்த்தாய்! வித்தையைக்
காட்டிக்கொண்டு 2500 ரூபா
லாபம்! கப்பண்ணு
கொடுத்த பணத்தைப்
பயந்து போய் என்
காலடியில் சமர்ப்பிச்
சுட்டுப் போயிட்டான், பார்!


ஒண்டர்ஃபுல்! ...
சரி, நான் போய்
வரவா? ஜிம்மி! ஜிம்மி?
ஜிம்மி எங்கே?


இருவரும் தேடிப்பார்த்தசில்.

தொடரும்



தாய் போதிப்பது தத்துவம்.
தந்தை பேசுவது பழம்பெருமை.
இளைய பருவத்தினர் அலசுவது புதுமை.
ஆயினும் எல்லோரின் ஒருமித்த
கருத்து ஸிஸிஎம் பெருமை.

ஸிஸிஎம் தயாரிப்புகள்:
நியூ மிர்ராபோ ஃபுல்
வாயில் புடவைகள் •
ஸ்டேலாங்கர்,
ஸ்ட்ரேஞ்சர்
ஷர்ட்டிங்குகள் •
எலிகன்ஸா சூட்டிங் •
லவ்லின் ஷர்ட்டிங் •
சில்வாலேன், சில்வர்
கிங் வேஷ்டிகள் •
மல் • காடா.

# ஒருமித்த கருத்து!

நியூ மிர்ராபோ • லவ்லின் • எலிகன்ஸா
ஸ்டேலாங்கர் • ஸ்ட்ரேஞ்சர்

உங்கள் குடும்ப நண்பன்...CCM



**தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்**

மார்க்கெட்
செய்பவர்கள்:
வெங்கடேஷ்
வஸ்திராலயா

# 28. கண்டனூரில் கண்ட அதிசயம்!



## இளைஞர் சமுதாயம்

நகரத்தார் சமூகம் நம் நாட்டில் செய்திருக்கும் ஆலயத் திருப்பணிகள் எத்தனை எத்தனையோ! தென்னாட்டிலுள்ள பல பழம் பெரும் ஆலயங்களைப் புனர் நிர்மாணம் செய்திருக்கிறது அச்சமூகம்.

ராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த கண்டனூரில் உள்ள நகரத்தார் இளைஞர் வளர்ச்சிக் குழுவினரை நான் சந்திக்கச் சென்றபோது எனக்கு நகரத்தார் சமூகத்தின் சாதனைகள் நினைவுக்கு வந்தன. சங்கம் நடக்கும் இடம் செட்டி நாட்டுக்கே உரிய மிகப் பெரிய வீடு; ஒரே சமயத்தில் பல திருமணங்களைச் சௌகரியமாக நடத்தலாம். எழிலார்ந்த சித்திர வேலைப்பாடுகள் அமைந்த வாசல் கதவு நிலைகள் ஆலயத்தை நினைவுபடுத்தின. மிகப் பெரிய தேக்கு மரத் தூண்களைப் பார்த்ததும் சரித்திரப் படம் பார்ப்பதுபோல் இருந்தது.

நகரத்தார் சமூகத்தின் முற்கால மகோன்னத நிலையையும், தற்காலத்தில் அவர்கள் அடைந்திருக்கும் அவல வாழ்வையும் பற்றி அவ்வீட்டிலுள்ள மூதாட்டியின் வாயிலாகவே கேட்ட போது எனக்கு மிக வேதனையாயிருந்தது. தேவகோட்டை நகரத்தின் முனிசிபல் கவுன்சிலரும், கல்கி ஏஜண்டும் பிரபல பிரமுகருமான திரு மீனாட்சிசுந்தரம் நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவர். அச்சமூகம் இப்பொழுது அடைந்திருக்கும் இக்கட்டான நிலையைப் படம் பிடித்துக் காட்டுவதுபோல் முதலிலேயே விளக்கிவிட்டார். "நீங்கள் கண்டனூரில் உங்கள் பேட்டியை ஆரம்பிப்பதற்கு முன்பு எங்கள் சமூகத்தைப் பற்றித் தெரிந்துகொள்வது உபயோகமாயி க்கும்!" என்று அவர் கூறியது உண்மைதான்.

சிறிது நேரம் பேசி முடித்ததும் குழுவின் செயலாளர் அழ. பழநியப்பனைப் பார்த்து, "உங்கள் சங்கம் சிறப்பாக என்ன பொதுத் தொண்டு ஆற்றியிருக்கிறது?" என்று சென்ஸஸ் இலாகா ஊழியரைப் போல் கேட்டு என் பணியைத் தொடங்கினேன்.

"Charity begins at home என்னும் முதுமொழியைக் கேட்டிருப்பீர்களே? தனக்கு மிஞ்சித்தானே தானம்? ஆகவே, எங்கள் நகரத்தார் சமூகத்தின் வளர்ச்சிக்குப் பாடுபடுவதைத்தான் சிறப்புத் தொண்டாகக் கொண்டிருக்கிறோம். அதற்குப் பிறகுதான் பொதுத் தொண்டு. நாங்கள் அங்கத்தினர்கள் நூற்று ஒன்பது பேர்கள் இருக்கிறோம். எல்லாரும் இளைஞர்கள். பதினைந்திலிருந்து முப்பத்தைந்து வயதுக்குள் இருப்பவரைத்தான் அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளுவதென்ற குறிக்கோளை உறுதியாகக் கடைப்பிடித்து வருகிறோம்."

"நகரத்தார் சமூக வளர்ச்சியை இலட்சியமாகக் கொண்டிருப்பதாகக் கூறுகிறீர்கள். அச்சமூகம் இப்பொழுது ஒரு சங்கம் வைத்து வளர்க்கும் அளவுக்குப் பிற்போக்கடைந்து விட்டது என்று கூறுகிறீர்களா? செட்டி நாட்டுப் பிரமுகர்கள், நானறிந்த வரையில், மிகவும் முற்போக்கானவர்கள் ஆயிற்றே! தமிழ் நாட்டில் மிகப் பெரிய தொழில் நிறுவனங்களை நடத்துபவர்கள் அவர்கள் தான். பெரிய பாங்குகளை நிறுவி நடத்தி, புகழும் பொருளும் ஏராளமாக ஈட்டியவர்கள் அவர்கள்தான்.........!"

"ஸார், ஸார்! கொஞ்சம் நிறுத்திக் கொள்ளுகிறீர்களா? பர்மா, மலேஷியா, சிங்கப்பூர் முதலிய கடல் கடந்த நாடுகளுக்கு எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு சென்று திரை கடல் ஓடித் திரவியம் ஈட்டியவர்கள் நகரத்தார் சமூகத்தவர்கள்தான் என்றாலும் இன்றைக்கு அவையெல்லாம் பழங்கதைகள்! இப்பொழுதுள்ள நகரத்தார் சமூகம் நீங்கள் நினைப்பதுபோல் அவ்வளவு செழிப்பாயில்லை. அவர்கள் சிறப்பாகச் செய்து வந்த அயல்நாட்டு வர்த்தகம், சர்வதேச நிலைமையில் ஏற்பட்டுள்ள பல இன்றியமையாத மாறுதல்களினால் செல்லாக் காசாகிவிட்டது. 'எங்கள் மூதாதையர் கோட்டைபோல்

மேலே: பாங்க் ஆஃப் மதுரை சேர்மன் திரு எஸ். கிருஷ்ணனுக்கு வரவேற்பும் பாராட்டும்.
கீழே : அதே தினத்தில் சங்க அங்கத்தினர்கள் சேர்ந்து எடுத்துக்கொண்ட படம்.



வீட்டைக் கட்டிக் கொண்டு பெருவாழ்வு வாழ்ந்தவர்கள்' என்று பழம் பெருமை பேசுவதில் பயனில்லை. நகரத்தார் இளைஞர் சமூகம் இன்று அந்தப் பெருமைக்கு ஏற்ப வளர்ச்சியடைந்து நல்வாழ்வு வாழவில்லை.... இது பற்றி இன்னும் விளக்கம் தேவையென்றால் இரு மா. கண்ணப்பன் அவர்கள் பாடிய பாடல் ஒன்றைக் கூறுகிறேன். கேட்கிறீர்களா ?''

செயலாளரின் உணர்ச்சி வேகம் என்னை அயர்ந்து போகச் செய்திருந்தது. ''பாடலைச் சொல்லுங்கள். கேட்கிறேன்.....'' என்றேன். (அந்த இளைஞர் எழுந்து நின்று பேச ஆரம்பித்ததிலிருந்தே அவரை யாரும் தடுத்து நிறுத்த முடியாதென்பது எனக்குத் தெரிந்து விட்டது.)

செயலாளர் கணீரென்று பாட ஆரம்பித்தார் :

'' சீர்வரிசை பரப்புதற்குக்
கடைகள் தேடும்
சிறப்பார்ந்த நகரத்தார்
ஆச்சி மார்கள்
பேர்சொல்ல வாழ்ந்ததுவும்
அந்தக் காலம் !
பிழைப்பதற்கு ஒருவேலை
தேடித் தேடி
யார்தருவார் வேலையென்ன
செட்டி நாட்டு
யாமெல்லாம் அழுவதுவும்
இந்தக் காலம் !
ஊர்வாழக் கொடைசெய்த
இனத்தார் இன்று
உள்வீடு வாழவகை
இன்றி வாழ்வார் ''

இதே மாதிரி உள்ளத்தைத் தொடும் இன்னும் சில பாடல்களை அந்த இளைஞர் பாடினார். நான் 'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்னும் பழமொழிக்கு ஏற்ப ஒரே ஒரு பாடலை இங்கு தந்திருக்கிறேன். மேற்படி பாடல்களைக் கேட்ட பிறகு கண்டனூர் நகரத்தார் இளைஞர் வளர்ச்சிக் குழுவினரிடம் எனக்கு மதிப்பு உண்டாகிவிட்டது.

'' 'உங்கள் சங்கம் இன்னும் ஏதாவது உருப்படியான சேவை செய்திருக்கிறதா?' என்று நீங்கள் கேட்பீர்களே என்றுதான் ஓர் உருப்படியான சேவையை ஆரம்பித்திருக்கிறோம். 15—8—72 அன்று எங்கள் இளைஞர் குழு தொடங்கப்பட்டது. இப்பொழுது மூன்றாவது ஆண்டுவிழா நடக்கவிருக்கிறது. அதற்குள் இந்தப் புதிய திட்டத்தைச் செயலாக்க எண்ணி முயன்று வருகிறோம். அதாவது, நகரத்தார் வாழும் செட்டிநாடு முழுவதும் உள்ள அனைத்து இளைஞர் சங்கங்களையும் இணைத்து ஒரு கூட்டம் நடத்த உத்தேசித்திருக்கிறோம். அதனால் எங்கள் பணி இன்னும் சிறப்பாக நடைபெற வழி பிறக்கும். நகரத்தார் குடும்பங்களில் இன்னும் பழம் பெருமையைப் பறைசாற்றும் பழக்க வழக்கங்கள், சம்பிரதாயச் சடங்குகள் பல இருக்கின்றன. இப்பொழுது எங்கள் இனம் உள்ள நிலையில் அவைகளைக் கடைப்பிடிப்பதென்பது முற்றிலும் இயலாத காரியம். முக்கியமாகக் கூற வேண்டுமானால், வரதட்சிணைக் கொடுமை, கல்யாணத்துக்கு ஆகும் கண்மூடிச் செலவு, இறுதிச் சடங்குகளுக்கு ஆகும் எல்லையில்லாச் செலவு ஆகியவற்றைக் குறிப்பிடலாம். நாடும் ஏடும் போற்றிட, நல்லோர் பலரும் வாழ்த்திட நகரத்தார் முன்பு ஆற்றிய ஆலயத் திருப்பணி, சமூக சேவை ஆகியவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்ததுபோல், இன்று தங்கள் சமூகத்தைச் சேர்ந்த இளைஞர் சமுதாயத்தை வாழ வைக்கும் பணியையும் நகரத்தார் மேற்கொள்ள வேண்டும். இதுவே எங்கள் குழுவினரின் மனமார்ந்த வேண்டுகோள்.''

செயலாளரின் நீண்ட சொற்பொழிவு முடிந்ததும் என்னையும் அறியாமல் கைதட்டி விட்டேன்.

உடனே செயலாளர் சிரிப்பும் கோபமுமாக, ''ஸார், இது கைதட்டி மகிழக்கூடிய விஷயமல்ல; உங்கள் பத்திரிகை மூலம் எங்களுக்குக் கைகொடுத்து உதவ வேண்டிய விஷயம். கடைசியாக ஒன்று கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இன்றைய பேட்டியில் அதுதான் இன்றியமையாதது. 'நகரத்தார் நலனுக்காக நடக்கும் இச்சங்கம் ஏதேனும் பொதுத் தொண்டுகளில் ஈடுபட்டிருக்கிறதா' என்ற ஐயப்பாடு உங்கள் உள்ளத்தில் எழக் கூடும். அதற்குப் பதில் இதோ '' என்று கூறிச் சில தொண்டுகளைக் குறிப்பிட்டார்.

ஒரு நூல் நிலையம், ஒரு வாசக சாலை நடத்துகிறார்கள். இவ்வூரிலுள்ள படித்த மாணவர்கள் தாங்கள் படித்த புத்தகங்களை நூல் நிலையத்துக்குக் கொடுத்துவிட வேண்டும். சங்கம் அந்நூல்களை ஏழை மாணவர்களுக்குப் படிக்கக் கொடுத்து உதவும். இவ்விளைஞர் சங்கத்தின் அங்கத்தினர்கள் தங்கள் சொந்த முயற்சியில் கண்டனூருக்கு அருகில் உள்ள ஒரு கிராமத்துக்குச் சாலையே போட்டிருக்கிறார்கள் ! ஆண்டுதோறும் நகரத்தார் குடும்பத்தைச் சேர்ந்த ஓர் ஏழைப் பெண்ணின் திருமணத்துக்கு 101 ரூபாய் கொடுத்து வருகிறார்கள். இதே மாதிரி ஏழைக் குடும்பத்தினரின் இறுதிச் சடங்குக்கும் உதவுகிறார்கள். யாரிடமும் நன்கொடைக்கென்று போய் நிற்காமல் தங்கள் சந்தாத் தொகையைக் கொண்டும், தாங்களே நன்கொடை வழங்கியும் மேற்கூறிய நற்பணிகளை நிறைவேற்றி வருகிறார்கள். 'அங்கத்தினர்கள் சங்கத்துக்கு நன்கொடை அளிக்கலாம். ஆனால் பொது மக்களிடமோ, மற்றப் பிரமுகரிடமோ நன்கொடை பெறக் கூடாது' என்றே ஒரு விதி ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

எப்படியும் ஒரு கடைசிக் கேள்வி கேட்டு விட வேண்டுமென்ற துடிப்பில், ''பெரியவர்கள் உங்கள் முயற்சிக்கு ஆதரவு தருகிறார்களா ?'' என்று கேட்டேன்.

''ஆகா! ஆதரவு தருகிறார்கள் — தார்மிக ஆதரவு. நகரத்தார் சமூகம் முன்னேற வேண்டும் என்னும் ஆர்வம் அச்சமூகத்தார் அனைவருக்கும் இருக்கிறதே! அது போதுமே'' என்றார் செயலாளர்.

கேள்வி கேட்கும் வேலையை எனக்கு வைக்காமல் என் வேலையைச் சுலபமாக்கிவிட்ட கண்டனூர் நகரத்தார் இளைஞர் வளர்ச்சிக் குழு அங்கத்தினர்களுக்கு நன்றி கூறி மன நிறைவோடு விடைபெற்றுக் கொண்டேன்.

—லோமாஸ்

# நெடுஞ்சாலைகள் நல்லின்பப் பாதைகளாய் அமைய...



# கான்க்ரீட்டினால் அமைந்திட வேண்டும்.

காரணம், உயர்தரமான சாலைகளை அமைத்திட உதவுவது கான்க்ரீட். உயர்தரமான கான்க்ரீட் சாலைகளை அமைத்திட உதவுவது ஏஸிஸி.
அச் சாலைகள்...

- பளுவான வண்டிச் சுமைகளைத் தாக்குப் பிடிக்கும்.
- ஓட்டுவதற்குப் பாதுகாப்பானவை, வசதிமிக்கவை.
- பகலும் இரவும் பார்க்கத் தெளிவாகக் காட்சி தரும்.
- எல்லாப் பருவங்களிலும் இடையறாப் பணிபுரியும்.
- பராமரிப்புத் தேவையே வெகு சொற்பம். எனவே, உன்னதமான சிக்கனம்.

**ACC** தரத்தின் சிகரமான தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்.

தி அஸோஸியேடெட்
ஸிமெண்ட் கம்பெனீஸ் லிட்.
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கோ
ஆப் இந்தியா லிட்.

everest/208b/ACC TM

யக்கதை

ஒருவன் மனிதத் தன்மையுடன்
நடந்து கொள்வதற்கு முதலில்
பணத்தால்
கிட்டக்கூடிய பாதுகாப்பு
தேவைப்படுகிறது!

# கடற்கரையில் காங்

## ஆர்னல்ட் ஸ்வைக்

அந்தச் சிறிய விரிகுடாவின் ஓரமாக வெண்பிறையாக அமைந்திருந்த மணற் பரப்பில் ஓட்டமாக ஓடியபோதுதான் காங் முதன் முதலாகக் கடலைக் கண்டது. அளவுக்கு மீறிய உற்சாகத்துடன் உரக்கக் குரைத்தது. வெண் நீல நிற அலைகள் அதை நோக்கி மோதுவது போல் வந்து நீர்த் துளிகளைச் சிந்தின. ஆனால் அதனுள் பாயக் கூடாதென்று அதற்குத் தடையுத்தரவு போடப் பட்டிருந்தது! கம்பி கம்பியான அடர்ந்த பழுப்பு நிற ரோமங்களும் புசுபுசுவென்று முன்னங் கால்களும் உடைய டெர்ரியர் ஜாதி நாய்க்கு அது ஒரு தாட்சண்யமற்ற கடுமையான உத்தரவு தான். எனினும் அதனுடைய சின்னக் கடவுளான வில்லி அது நனைவதை அனுமதிக்க மாட்டானே. ஆயினும் அலை அடங்கி, ஈரம் காயாமல் அழுத்தமாக உள்ள மணல் மீது அது அதிகபட்ச வேகத்துடன் ஓடலாவது செய்யலாம்; வில்லி பலமாகக் கூச்சலிட்டுக் கொண்டு அதனைப் பின்தொடர்வான்.

இவர்களுக்குப் பின்னால் காலாற நடந்தான் இன்ஜினியர் க்ரால். நாயும், வெய்யிலில் பழுப்பேறிய உடலும் இலேசான நிறத்தில் தலைமயிரும் கொண்ட அதன் எட்டு வயது எஜமானனும் கடற்கரைக்கு வந்திருந்தவர்களின் — சாய்வு நாற்காலிகளிலும், கோலாகலமான வர்ணக் கோடுகள் கொண்ட கூடாரங்களிலும் இருந்தவர்களின்-கருத்தைக் கணிசமாகக் கவர்ந்திருப்பதைக் கவனித்தான். தலைக்கு மேலே பளிரென்று ஒளிர்ந்த நீலம், சந்தோஷத்தையும் விச்ராந்தியையும் ஒய்வாக இருந்த பட்டணத்து மக்களிடம் சொரிந்தது; விளையாடிக் கொண்டிருந்தவர்களிடம் புதுத் தெம்பைப் பொழிந்தது. இந்த வரிசை முடியுமிடத்தில் ஆகாயம் மங்கி எல்லையற்ற பெருவெளியில் அமிழ்ந்துவிடும் இடத்தின் அடியில் ஏதோ தர்க்கம் நடப்பது போல் தோன்றியது. மெலிந்தவனான வில்லி தனது நாயின் கழுத்துப் பட்டையைப் பிடித்தபடி அங்கு தலைநிமிர்ந்து, எதிர்க்கும் பாவனையில் நின்று கொண்டிருந்தான். க்ரால் அவசரமாக அங்கு சென்றான். குளிக்கும் உடை அணிந்து விட்டால் எல்லா மக்களும் ஏறத்தாழ ஒரே மாதிரிதான் இருக்கிறார்கள். சமூகத்தின் ஏற்றத் தாழ்வுகள், ஜாதி வித்தியாசங்கள் எல்லாம் அப்போது ஒன்று கலந்து விடுகின்றன. தலைகள் மட்டும் குண விசேஷங்

களைக் காட்டின, பாவங்களை வெளியிட்டன. தலைகளைச் சுமந்த உடல்கள் ஊளைச் சதையுடன் நிறமற்று இருந்தன. நீண்ட பனிக் காலத்தின்போது கனமான ஆடைகளுக்குள் இருட்டில் சிறைப்பட்டிருந்த அவை திறந்து கிடக்கும் நிலைக்கு இன்னும் பழகாததால் வெளிறியே தோன்றின.

நீல நிறக் கம்பங்கள் நட்டு அதன் மேல் ஆரஞ்சு நிறக் கோடுகளுடன் கூடிய துணி விரித்து அமைக்கப்பட்டிருந்த கூடாரத்தின் நிழலில் ஒரு பருமனான ஆசாமி அமர்ந்திருந்தான். கையில் சுருட்டுடன் அவன் இலேசாக முன்புறம் குனிந்தபடி இருந்தான்.

''அது உன்னுடைய நாயா?'' என்று அமைதியாகக் கேட்டான் அவன்.

பத்து வயது மதிக்கத்தக்க சிறுமி அவனுடன் இருந்தாள். அவள் அடி உதட்டைக் கடித்துக் கொண்டிருந்தாள். அந்தப் பையனையும் நாயையும் அவள் நோக்கிய



போது கண்ணீர் நிரம்பிய குறுகலான இமைகளுக்கிடையிலிருந்து வெறுப்பு பளிச்சிட்டது.

''இல்லை'' என்றான் க்ராஸ், இனிமையான குரலில். அது அவன் நெஞ்சின் அடிவாரத்திலிருந்து தொலைவில் கேட்கும் இடியோசை போல் எழுந்தது. ''நாய் அந்தப் பையனுக்குச் சொந்தம்; பையன் என்னுடையவன்.''

''வாரைப் பிடித்துக் கொள்ளாமல் நாயைத் தனியே விடக் கூடாதென்று உனக்குத் தெரியுமில்லையா?'' என்று அந்த அமைதியான குரல் தொடர்ந்தது. ''அது என் மகளைக் கொஞ்சம் பயமுறுத்தி விட்டது. அவள் அமைத்திருந்த கால்வாய்களைக் கலைத்து விட்டது. அவளுடைய மண்வெட்டி மேல் நின்று கொண்டிருக்கிறது.''

''வில்லி! அதைப் பின்னுக்கு இழுத்துக் கொள்!'' க்ராஸ் சிரித்தான். ''நீங்கள் சொல்வது ரொம்ப சரி. ஆனால் நாய் வாரை அறுத்துக்கொண்டு கிளம்பிவிட்டது. மேலும் விபரீதமாக ஏதும் நடந்து விடவில்லையே?''

வில்லி காங்கை அப்பால் தள்ளினான். மண்வெட்டியை எடுத்தான். இலேசாக வணங்கி அதை அந்தக் கோஷ்டி பக்கம் நீட்டினான். அந்தக் கோஷ்டியின் மூன்றாவது நபர் மெலியவாள். கண்ணைக் கவரும் அழகுடைய இள நங்கை. அந்தக் கூடாரத்தின் பின் பகுதியில் அமர்ந்திருந்தாள். 'இத்தனை இள வயதினளான அவள் அந்தச் சிறுமியின்

தாயாராய் இருக்க முடியாது; இத்தனை அழகுடையவளான அவள் அந்தப் பெண்ணின் தாதியாகவும் இருக்க முடியாது' என்று க்ரால் நினைத்தான். அவள் அவயவங்களின் அமைப்பு சிறப்பாக இருப்பதை எண்ணிப் பார்த்தான். பழுப்பு மஞ்சள் நிறத்தில் புருவங்களைக் கொண்டிருந்த அவள் ஐரிஷ் பெண்ணாகத் தோன்றினாள்.

நீண்ட பிடியுடன் கூடிய அந்த மண்வெட்டியைப் பையனிடமிருந்து யாரும் வாங்கிக் கொள்ளவில்லை. வில்லி முகம் சுளித்தபடியே சிறுமியின் எதிரே மணலில் அதைச் செருகினான்.

''அதற்கும் இதற்கும் சரியாய்ப் போச்சு இல்லையா? இத்தனை அழகான நாளைப் பாழாக்குவானேன்?'' என்ற க்ரால் புன்னகையுடன் குப்புறப் படுத்துக் கொண்டான். கால்கள் பின்னால் நீண்டு கிடந்தன. முழங்கைகள் மணலில் ஊன்றியிருந்தன. முகம் உள்ளங் கைகளில் பதிந்திருந்தது. எதிரிகளான மூவரையும் பார்த்தான். 'வில்லி நல்ல படியாகப் பணிவாக நடந்து கொண்டிருக்கிறான். காங்குடன் சேர்ந்திருக்கும்போது எத்தனை நன்றாக இருக்கிறது அவனைப் பார்க்க!' சமாதானம் செய்து கொள்ள நாய் இன்னும் தயாராகவில்லை போலும். அது இலேசாக உறுமியது. கழுத்தருகே ரோமங்கள் குத்திட்டன. பிறகு அது உட்கார்ந்தது.

''அவனுடைய நாயை நான் சுட்டுத் தள்ள வேண்டும் அப்பா!'' என்று அந்தச் சிறுமி திடீரென்று உறுதியான குரலில் கூறினாள். ''அது என்னை ரொம்பப் பயமுறுத்தி விட்டது!''

ரொம்பப் புராதனமான வேலைப்பாட்டுடன் கூடிய ஒரு தங்க வளையல் அவள் மணிக்கட்டில் இருப்பதைக் க்ரால் கவனித்தான். பசும் பொன்னாலான மூன்று சரங்கள் ஒரு பாம்பு போல் தோற்றமளிக்குமாறு பின்னப்பட்டிருந்தன... 'இந்த மக்களுக்கு ஒரு பாடம் தேவைதான்; கற்பிப்பேன்.'

சிறுவன் தன்னைப் புண்படுத்தியவர்களை அருவருப்பும் ஆத்திரமுமாக நோக்கியவாறு நாயைத் தன் அருகே இழுத்துக்கொண்டான். க்ரால் அவனைப் பார்த்துத் தைரியமூட்டும் விதமாகத் தலையசைத்தான்.

'இந்தப் பெண் அதிகாரம் பண்ணியே பழகி விட்டிருப்பதை வயதான மற்ற இருவரும் உணர்ந்திருக்கிறார்கள் போலும்' என்று க்ரால் தனக்குத் தானே எண்ணிக்கொண்டான்.

அவளுடைய 'இனிமை'யான உரையாடலின் எதிர் விளைவுக்காக அவன் பேசாமல் காத்திருந்தான். 'நன்னடத்தை என்றால் என்னவென்றே தெரியாத இந்தச் செல்வக் கண்மணியை அடக்க, உயர் ரகச் சுருட்டை ஏந்தியிருக்கும் அந்தக் கனவானுக்குத் துணிவு இல்லையென்றால் அப்புறம் நாம்தான் இருக்கிறோமே? பிடாரியைக் கவனித்துக்கொண்டால் போயிற்று!'

''என் நாயை யாரும் கடப்போவதில்லை!'' வில்லி தன் கரத்தை முஷ்டியாக்கிக் காட்டி அச்சுறுத்தினான். ஆனால் அவனைத் திரும்பிக் கூடப் பாராமல் அந்தப் பெண் தொடர்ந்தாள்: ''அவர்களிடமிருந்து நாயை வாங்கி விடு அப்பா! இதோ என்னுடைய செக் புத்தகம்!''

கூடாரத்தினுள்ளிருந்த ஒரு ஜிப் வைத்த பையிலிருந்து உண்மையாகவே அவர் செக் புத்தகத்தையும் தங்க மூடி போட்ட பேனாவையும் எடுத்தாள்.

''அதை எனக்காக நீ வாங்கவில்லையென்றால் இரவுச் சாப்பாட்டின் போது சூப் தட்டை மேஜையிலிருந்து விட்டெறிவேன். சொன்னபடி செய்து காட்டுவேன் என்பதும் உனக்குத் தெரியுமே அப்பா!'' ரகசியம் பேசுவது போல் கூறினாள் அவள். சூரிய ஒளி பட்டுப் பழுப்பேறிய உடல், புறந் தோளுக்குக் கீழே வெளுத்து விட்டது. கடலுக்கு அருகில் இருந்ததால் பசுமை ஒளி படர்ந்திருந்த அவளுடைய நீலக் கண்கள் பயமுறுத்திப் பளிச்சிட்டன.

அந்தக் கனவான் சொன்னார்: ''நாய்க்குப் பத்து பவுண்டு தருகிறேன்.''

க்ரால் எழுந்து மணலில் சம்மணம் போட்டு அமர்ந்தான். மேற்கொண்டு நடப்பனவற்றைக் காண ஓர் ஆவல் குறுகுறுப்புடன் காத்திருந்தான்.

''நாய் என்னுடையது அல்ல; என் பையனிடம் பேரம் பேச வேண்டும் நீங்கள். அவன்தான் அதைப் பழக்கி யிருக்கிறான்.''

''சிறுவர்களிடம் நான் பேரம் பேசுவதில்லை. பதினைந்து பவுண்டு தருகிறேன். அந்த உதவாக்கரை நாய்க்கு இது மிகப் பெரிய தொகை.''

க்ரால் தன் மூத்த மகனைப் பற்றி நன்றாக அறிந்து கொள்ள இது ஓர் அருமையான சந்தர்ப்பம் என உணர்ந்தான். ''வில்லி'' என்று ஆரம்பித்தான். ''இந்தக் கனவான் காங்கைச் சுட்டுத் தள்ளுவதற்காகப் பதினைந்து பவுண்டு உனக்குக் கொடுத்து அதை வாங்கத் தயாராய் இருக்கிறார். அந்தப் பணம் இருந்தால் நீ போன வருஷம் முதற்கொண்டே ஒரு சைக்கிள் வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறாயே, அதை வாங்கலாம். என்னால் உனக்கு இன்னும் நீண்ட காலத்துக்குச் சைக்கிள் வாங்கித் தர முடியாது. நாம் அவ்வளவு பணக்காரர்கள் அல்ல.''

வில்லி தன் தகப்பனாரைப் பார்த்தான். 'மனப்பூர்வமாகத்தான் இப்படிப் பேசுகிறாரா?' என்று அவன் கணிப்பது போலிருந்தது. ஆனால் அவன் நன்றாகப் பார்த்துப் பழக்கப்பட்டிருந்த அந்த முகத்தில் வேடிக்கைக்கான அறிகுறிகள் ஏதும் தென்படவில்லை. பதில் கூறும் முகமாக அவன் காங்கின் கழுத்தைத் தன் கரத்தால் சுற்றி வளைத்தான். க்ராலை நோக்கிப் புன்னகை புரிந்து சொன்னான்: ''உனக்குக் கூட இவனை விற்க மாட்டேன் அப்பா!''

இன்னும் பழுப்பேறாத வெளிறிய சருமத்தில் நீச்சல் உடை அணிந்திருந்த அந்தக் கனவான் க்ரால் பக்கம் திரும்பினார். இந்தத் தர்க்கம் அவருக்குச் சுவாரசியமாக இருப்பது தெளிவாயிற்று. ''அவனை வற்புறுத்துங்கள். இருபது பவுண்டு தருகிறேன்.''

''இருபது பவுண்டு!'' க்ரால் வில்லியிடம் சற்று வியப்போடு கூறினான்: ''சைக்கிளோடு இன்று காலை நீ ரொம்பவும் ரசித்தாயே, அந்தப் படகையும் வாங்கலாம், அந்தத்




தீபாவளி
விசேஷ விற்பனை!

**1972**
தீபாவளிக்கு
புதிய திருசுகள்!

புதிய கலர்கள்:
**ரமா • சுபா • வீணு • ராணி**

புதிய கட்டங்கள்:
**கேரவான், ஜூபிளி, கிருபா**

புதிய பார்டர்:
**லதா** - புதிய திருசு **வானவில்**

புதிய கோடு:
**பென்சில்**

பட்டுச் சேலைகள் - சோளி பீஸ்கள்
பாவாடை துண்டுகள்
மற்றும்
நூல் சேலைகள் & மில் ஜவுளிகள்

# நல்லி
## சில்க் எம்போரியம்

**பாண்டி பஜார்**
தியாகராய நகர் • போன்: 442567 • சென்னை-17

தீபாவளி வரை எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு!

A.K. GOPAL

லண்டனில் நாற்சந்திகளில் உள்ள ஆரஞ்சு, சிவப்பு, பச்சை விளக்குகளையெல்லாம் இனி போக்குவரத்துக்குத் தக்கபடி இரு கம்ப்யூட்டர்கள் கவனித்து இயக்கும். சுமார் ஒன்றரை மில்லியன் பவுண்டு செலவில் நிர்மாணிக்கப்பட்டுள்ள இந்த கம்ப்யூட்டர்கள் மார்ச் 1973க்குள் 300 நாற்சந்திகளில் உள்ள விளக்குகளை இயக்கும். 1976க்குள் லண்டனில் ஆயிரம் நாற்சந்திகளில் உள்ள போக்குவரத்தைக் கட்டுப்படுத்தும் விளக்குகளை கம்ப்யூட்டர்கள் இயக்கும்!



தொகைக்கு. நீருக்கு இரட்டைத் துடுப்புகளுடன் கூடிய பச்சை நிறப் படகு. நிலத்துக்கு நிக்கல் முலாம் பூசிய அழகான சைக்கிள்! முன்புறம் விளக்கு, டைனமோ, புதிய டயர்கள்! ஒரு கடிகாரம் வாங்கக் கூடக் காசு மிச்சமிருக்கலாம்! நீ செய்ய வேண்டியதெல்லாம் இந்தக் கிழ நாயை இவருக்குக் கொடுத்து விடுவதுதான். நீ பிடித்துக் கொண்டிருக்கும் வாரை இந்தக் கனவான் கைக்கு மாற்றிவிட்டால் போதும்.''

வில்லி அருவருப்புடன் பேசினான்: ''நான் பத்தடி தூரம் போவதற்குள் காங் அவரைக் கீழே தள்ளிவிட்டு என்னிடம் வேகமாக ஓடி வந்து விடும்!''

அந்த அழகான அசாதாரணமான இள நங்கை அப்போதுதான் முதல் தடவையாக வாய் திறந்தாள். ''அதனால் அப்படிச் செய்ய முடியாது'' என்றாள் தெளிவான, இனிமையான, பரிகசிக்கும் குரலில். சூடிகையான நங்கைதான் என்று எண்ணினான் க்ராஸ். தன் கைப் பையிலிருந்து அவள் ப்ரௌனிங் தயாரிப்பான ஒரு சிறு துப்பாக்கியை எடுத்தாள். நுண்ணிய வேலைப்பாடுகளுடன் கூடிய வெள்ளிக் கவசம் பூண்டிருந்தது அது!

''உன் நாய் கொஞ்சதூரம் போவதற்குள்ளேயே இது அதைத் தடுத்து நிறுத்தி விடும்!''

'மடத்தனமாக நடந்து கொண்டு விட்டாள்' என்று நினைத்தான் க்ராஸ். ''இதோ பாருங்கள் ஸார்! நாய் ரொம்ப உயர்ந்த ஜாதி; கலப்பே இல்லாதது: இதன் மூதாதையர் பற்றிய தஸ்தாவேஜுகள் உண்டு; பிரமாதமான முறையில் பழக்கப்படுத்தப்பட்டிருக்கிறது.''

''அதையெல்லாம் பார்த்தவுடனேயே தெரிந்து கொண்டு விட்டோம்.''

''அப்பா! ஐம்பது பவுண்டு தருவதாகச் சொல்லிக் காரியத்தை முடியுங்கள்!''

''ஐம்பது பவுண்டு!'' என்று திருப்பிச் சொன்னான் க்ராஸ். அவன் குரல் இலேசாக நடுங்கியது. 'இந்தப் பயணத்துக்கு ஆகும் செலவை ஈடுகட்டுவது மட்டுமின்றி இவனுக்குப் பதில் நான் பணத்தைக் கையாண்டால் இவன் தாயார் இழந்த தெம்பைத் திரும்பப் பெறுவதும் உறுதி. அவளை மருத்துவமனையில் சேர்ப்பதென்றால் செலவு கொஞ்சமாகவா ஆகும்? நமக்குக் கட்டி வராதே.'

''வில்லி! ஐம்பது பவுண்டு! சைக்கிள், கடிகாரம், கூடாரம் — ஞாபகம் இருக்கிறதா, பழுப்பு நிறத்தில்... கயிறுகள், குஞ்சலங்கள் இவற்றோடு கூடிய கூடாரம்! அப்புறமும் பாக்கி இருக்கும் பணம். அம்மாவை மருத்துவ மனையில் சேர்க்க எனக்கு நீ உதவலாம். எல்லாம் ஒரு நாய்க்குப் பிரதியாக நமக்குக் கிடைக்கும். யோசித்துப் பார்! பின்னால் நாம் பிராணிகள் நல சங்கத்துக்குப் போய் மூன்று ஷில்லிங் கொடுத்து இன்னொரு காங் வாங்கிக் கொள்ளலாம்.''

வில்லி மிருதுவான குரலில் கூறினான்: ''எனக்குத் தெரிந்து ஒரே ஒரு காங்தான் இருக்கிறது. அதை நான் விற்க மாட்டேன்.''

''நூறு பவுண்டு கொடுப்பதாகச் சொல்லுங்கள் அப்பா. எனக்கு அந்த நாயைச் சுட வேண்டும். இது போன்ற அவமரியாதைகளையெல்லாம் நான் தாங்க வேண்டிய நிலை ஏற்படக் கூடாது!''

பருமனான அந்தக் கனவான் ஒரு விநாடி தயங்கினார். பின்னர், ''நூறு பவுண்டு ஸார்!'' என்றார் கரகரத்த குரலில். ''அதிர்ஷ்டவசமாகக் கிடைக்கும் செல்வத்தை உதறிவிடும் அளவுக்குப் பணம் படைத்தவராகத் தோன்றவில்லையே உங்களைப் பார்த்தால்?''

''உதறி விடுவதா? எனக்கு அது சாத்தியமே இல்லை ஸார்!'' என்றான் க்ராஸ். பின்னர் வில்லியை நோக்கித் திரும்பினான். ''என் மகனே!'' என்று அழைத்துச் சிரத்தையுடன் தொடர்ந்தான்: ''நூறு பவுண்டை ஜாக்கிரதையாக முதலீடு செய்தால் பத்து வருஷங்களில் வட்டியுடன் சேர்ந்து அது உனக்குக் கல்லூரிப் படிப்பு பெற்றளிப்பது உறுதி. இல்லை, நீ விரும்பினால் பள்ளிக்கூடம் போக ஒரு சிறிய கார் வாங்கிக் கொள்ளலாம். மற்றப் பசங்களெல்லாம் எப்படி ஆசையோடு கண் கொட்டாமல் பார்ப்பார்கள்! மேலும்

அம்மாவைக் கடைத் தெருவுக்குக் காரில் அழைத்துப் போகலாம். கொஞ்ச நஞ்சமா? நூறு பவுண்டு! அவ்வளவும் கேவலம் ஒரு நாய்க்குப் பிரதியாக.''

அவன் குரலில் இருந்த சிரத்தையைக் கண்டு பயந்து போனான் வில்லி. அழத் தொடங்கி விடுவான் போல் அவன் முகம் சுருங்கியது. என்னதான் இருந்தாலும் அவன் எட்டு வயதுச் சிறுவன்தானே? அவனுக்கு ரொம்பப் பிரியமான நாயைக் கொடுத்து விடும்படி கேட்டுக் கொண்டால்? ''நான் காங்கிடம் ரொம்ப அன்பு வைத்திருக்கிறேன். காங் என்னிடம் ரொம்பப் பிரியமாய் இருக்கிறது.'' அவன் கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொள்ளப் போராடினான். ''எனக்குக் காங்கைக் கொடுக்க இஷ்டமில்லை!''

''நூறு பவுண்டு! தயவுசெய்து அவனை வற்புறுத்துங்கள் ஸார்! இல்லாவிட்டால் என் பெண் என் வாழ்க்கையையே நரகமாக்கி விடுவாள். உங்களுக்குத் தெரியாது''— அவன் நெடுமூச்செறிந்தான் — ''இவள் என்ன அட்டகாசம் செய்ய முடியுமென்று!''

'அவள் என் பெண்ணாயிருந்தால்....' என்று க்ரால் நினைத்தான். 'நல்ல பாடம் கற்பித்ததன் அறிகுறிகளை அவள் கன்னங்களில் விட்டு வைப்பேன்.' பின்னர், புருவங்களைச் சுருக்கிக் கண்ணீர் பெருகுவதைக் கட்டுப்படுத்தப் பெரு முயற்சி செய்து கொண்டிருக்கும் தன் மகனை ஓரக் கண்ணால் பார்த்து விட்டு, க்ரால் உரக்க, தெளிவாக, அமைதியாக அந்தச் சிறுமியின் கண்களைக் கண்டிப்புடன் நேருக்கு நேர் பார்த்துக் கூறினான்: ''இந்தச் சம்பவம் இத்துடன் முடிந்து போனதாகக் கருதுகிறேன்.''

அப்போது பெரு வியப்பில் ஆழ்த்தும் ஒரு விஷயம் நடந்தது. அந்தச் சிறுமி சிரிக்க ஆரம்பித்தாள்! உயரமான அந்தப் பழுப்பு நிற மனிதன் அவளுக்குத் திருப்தி அளித்தான் போலும்! குட்டி சீமாட்டி விரும்பிய ஒன்று கிடைக்காமல் போகுமாறு முகத்திலடித்தாற் போல் அவன் நடந்து கொள்ளத் துணிந்தான் என்ற எண்ணமே அதன் முரட்டுத் தன்மையால் அவளைக் கவர்ந்து மயக்கியது.

''சரி அப்பா!'' என்று அவள் கீச்சுக் குரலில் பேசினாள். ''அவன் நல்லபடியாக நடந்து கொண்டு விட்டான். செக் புத்தகத்தை நாம் திரும்பப் பைக்குள் வைத்து விடலாம். நான் தமாஷுக்காகத்தான் இப்படியெல்லாம் நடந்து கொண்டேன் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே!''

அந்தக் குண்டுக் கனவான் நிம்மதியுடன் புன்னகை செய்தான். ''ஆமாம். ஆமாம். எனக்குத் தெரியுமே!'' என்றான். ''விடுமுறை தினமே தமாஷுக்காக ஏற்பட்டதுதானே?''

'தமாஷாம் தமாஷ்!' அது குறித்து அவர்கள் கூறியவற்றில் க்ரால் ஒரு வார்த்தை கூட நம்பவில்லை. அவனுக்கு மனிதர்களைப் பற்றி நன்கு தெரியும்.

வில்லி இப்போது நிம்மதியாக மூச்சு விட்டான். மூக்கைச் சிந்துவது போன்ற பாவனையில், கோபத்துடன் பொங்கிய கண்ணீர்த் துளிகளையும் துடைத்துக் கொண்டான். காங்குக்குப் பக்கத்தில் மணலில் விழுந்தான். நாயைச் சந்தோஷத்துடன் தன் மீது புரட்டிக் கொண்டு மல்யுத்தம் புரிய ஆரம்பித்தான். புசுபுசுவென்றிருந்த நாயின் பழுப்பு நிறக் கால்களும் பையனின் மெலிந்த பழுப்பேறிய கரங்களும் குதூகலமான குழப்பமாக ஒன்று கலந்தன.

விநோதமான அந்தக் கனவான் அளித்த ஒரு சுருட்டை க்ரால் ஓரளவு வேண்டா வெறுப்புடன் ஏற்றுக் கொண்டான். அதை அவர் பற்ற வைத்ததும் பகைமை கலந்த நீல நிறக் கடலை மௌனமாகப் பார்த்தான். ஒளிச் சிதறலுடனும் நிழலுடனும் கூடிய, மடிப்புக்கள் விழுந்த பளபளக்கும் பட்டுத் துணி போன்று அவன் முன்னால் கடல் விரிந்து கிடந்தது. க்ரால் எண்ணினான்: 'பாவம் ஏழைகள்! இரண்டு வருஷங்களுக்கு முன்னால் இந்த நிகழ்ச்சி நடந்திருந்தால்? என்னுடைய புதிய கண்டுபிடிப்பு . அப்போது முற்றுப் பெறாத நிலை. ஈரக் கசிவு மிக்க வீட்டில் ஒண்டுக் குடித்தனம். இப்போது நமக்குள்ளது போன்ற தனி வீடு பற்றி அன்று கனவு கண்டு கொண்டிருந்தோம். பாவம் வில்லி! — இரண்டு ஆண்டுகளுக்கு முன் என்றால் இந்த வாக்குவாதத்தின் முடிவு வேறு விதமாகத்தான் இருந்திருக்கும். கேவலம் ஒரு நாய்க்காக எவ்வளவு போராட்டம்! ஒரு சிறுவனின் மனம், ஒரு நாயின் உள்ளம் — இவற்றில்தான் எத்தனை அன்பு, விசுவாசம், வீரம், தாராள மனப்பான்மை! ஆயினும் பொருளாதாரக் கண்ணோட்டத்தோடு பார்க்கும்போது ஒருவன் மனிதத் தன்மையுடன் நடந்து கொள்வதற்கு முதலில் பணத்தால் கிட்டக் கூடிய பாதுகாப்புத் தேவைப்படத்தான் செய்கிறது. அது இல்லாதபோது, இன்று எனக்கும் வில்லிக்கும் ஏற்பட்டதே இது போன்ற ஒரு பிரச்னையில் முடிவெடுக்குமாறு ஒருவனைக் கேட்டுக் கொள்ளவே கூடாது. அந்த அளவுக்காவது ஒவ்வொருவனுக்கும் பாதுகாப்பு வேண்டும். திரும்பிய பக்கமெல்லாம் ஆசைக்குத் தூபம் போடுகிற பளபளக்கும் பொருள்கள் நிரம்பிய இக் காலத்தில் இது ரொம்ப அவசியம்.'

மண்வெட்டியை வைத்துக் கொண்டிருந்த அந்தச் சிறுமி கூடாரத்துக்கு வெளியே மணலில் தன் அளவான, அழகான காலை எடுத்து வைத்தாள். வில்லியைக் கூப்பிட்டுச் சொன்னாள்: ''புதிய கால்வாய்களை அமைக்க எனக்கு உதவி செய்.'' ஆனால் அவன் கண்கள் க்ராலுக்குத்தான் அழைப்பு விடுத்தன. அவன் சம்மதத்தைப் பெறுவதற்காக அவள் சிரமப்பட்டுக் கொண்டிருந்தாள்.

பாழ்பட்டிருந்த கால்வாய்களை அவள் சுட்டிக் காட்டினாள். இதமான சூட்டை அனுபவித்தபடி வெய்யிலில் சோம்பேறித்தனமாக இறைக்க இறைக்கப் படுத்துக் கொண்டிருந்தது காங். அந்தத் திக்கு நோக்கி அவள் தலையைச் சொடுக்கி அதனைச் சுட்டினாள். மகிழ்ச்சியுடன் கூச்சலிட்டாள்: ''அது மீண்டும் இந்தக் கால்வாய்களைக் கலைத்து விடட்டும். எனக்குக் கவலை இல்லை!''

துறையை நெருங்கிக் கொண்டிருந்த நீராவிப் படகு ஒன்றின் விசில் சத்தம் கேட்டது.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்:
**கி. ராஜேந்திரன்**



இந்த ஆண்டின்
குமரன்
புதிய டிசைன்கள்
பிரியதர்சினி
ரஷ்மி • நவஜோதி
கதிரொளி
நவ நாகரீக நங்கைகள்
தேர்ந்தெடுப்பது
குமரன்
பட்டுப் புடவைகளே!
குமரன் சில்க்ஸ்
(பனகல் பார்க் எதிரில்)
தி. நகர், சென்னை. 17
போன்: 443544
தயாரிப்பு நிலையங்கள்:
காஞ்சீபுரம் & ஆரணி
Sarath-KS-1

# நாங்கள் பேக்கை மாற்றிவிட்டோம்...

சிவப்பும், பொன்னிறமும்
இணைந்த கவர்ச்சிமிகு
பேக்காக... உங்களுக்கு
கூடுதலான செலவின்றி
அதிக கவர்ச்சியான பேக்.




## ...ஆனால் நாங்கள் ஒருபோதும் பிஸ்கெட்டை மாற்றவே மாட்டோம்




போஷாக்கு மிகுந்த அதி
ருசியுள்ள பிஸ்கட்.
பின்வருவனவைகள் எப்பொழுதும்
அடங்கியது.
வைட்டமின்கள் ஏ..டி..பி1..பி2..
கால்ஷியம், ப்ரோட்டீன், பால்,
கோதுமை, சர்க்கரை, க்ளுகோஸ்.

# பார்லே க்ளுகோ

## இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கெட்டுகள்



everest/871 rd/PP TM

# ராஜாஜியின் ஜெயில் டைரி

## 1922 ஜனவரி, 4உ

**வை**த்தியசாலையில் ஒரு டாக்டர் இருக்கிறார். அவரைப் போல் மேலதிகாரிகளுக்குப் பயந்து நடப்பவரையும் காலப் போக்கை அறியாத கல் நெஞ்சரையும் நான் பார்த்ததேயில்லை. இதை எழுத எனக்கு வருத்தமாயிருக்கிறது. அந்த டாக்டர் சிறைத் தலைமை அதிகாரி கூறியபடி செய்தார். என்னுடைய பருக்களைக் குத்தி எடுத்துவிட்டு மருந்து நீர் கொண்டு கால்களைக் கழுவி, பாதரசம் சேர்ந்த களிம்பைத் தடவினார். தடுப்பு மருந்தைக் குத்தி வைக்கவும் செய்தார்.

இரவில் சுரம் வரவில்லை. அதனால் நன்றாகத் தூங்கியிருக்கலாம். ஆனால் முதல் நாளைவிட இன்று இரவு மூட்டைப் பூச்சிகள் அதிகமாக என்னைத் தாக்க ஆரம்பித்து விட்டன. நான் வந்திருப்பதை அறிந்துகொள்ள அவைகளுக்கு ஒரு நாள் அவகாசம் வேண்டியிருந்ததுபோல் தோன்றுகிறது! இந்தப் பயங்கரமான பகைவர்களுடன் போர் புரிவதிலேயே இரவு முழுதும் கழிந்து போயிற்று.

கடப்பையிலிருந்து சுப்பாராவ் என்ற பெயருடைய ஒத்துழையாமைக்காரர் ஒருவர் வந்திருந்தார். உதவி அதிகாரி தம்மை ஏசியதாக அவர் தலைமை அதிகாரியிடம் முறையிட்டார். சாட்சிகள் உண்டா என்று கேட்கவே, ஏசியதைக் கேட்டுக் கொண்டிருந்த மூன்று கைதிகளைக் கூறினார். அவர்கள் சுப்பாராவ் கூறியது உண்மை என்று சொன்னார்கள். இதன் பயன் என்ன தெரியுமா? சிறைச்சாலையிலுள்ள அதிகாரிகளுக்கு விரோதமாகச் சாட்சி கூறிய குற்றத்துக்காக அந்த மூவரில் முக்கியஸ்தராக இருந்தவருக்குக் காலிலும் கையிலும் விலங்கிட்டு வைத்தார்கள். சுப்பாராவால் இதைக் கண்டு எப்படிச் சகித்திருக்க முடியும்? மேற்படி கைதி கஷ்டப்படுவதற்குத் தாம் தானே காரணம் என்று எண்ணி இந்த அநியாயத்துக்குக் காரணமாயிருந்ததற்காக உண்ணாவிரதம் இருக்கப் போவதாகச் சிறைத் தலைமை அதிகாரிக்குக் கடிதம் எழுதினார். இது தலைமை அதிகாரியைப் பயமுறுத்துவதாகுமல்லவா என்று கூறி உடனே அவருக்குத் தனிக் கொட்டடி தண்டனையை அளித்தார்கள்.

திங்கட்கிழமைதோறும் சிறையின் தலைமை அதிகாரி கைதிகளைப் பார்வையிட வருவாரல்லவா? அப்படி அவர் வரும்பொழுது வெங்கடராவ் என்பவர் கைகளை மார்பில் கட்டிக் கொண்டு நின்றாராம். அது மரியாதைக் குறைவும் எதிர்க்கும் மனப்பான்மையும் ஆகுமாம். அதற்காக அவரையும் தனிக் கொட்டடிக்கு அனுப்பினார்கள். மார்பில் கையைக் கட்டிக் கொண்டு நிற்பதில் மரியாதைக் குறைவோ, எதிர்க்கும் மனப்பான்மையோ கிடையாது என்பதை ஐரோப்பியர்கள் அறிந்துகொள்ளவில்லை.

சகல சிறைகளிலும் இப்போது காணப்படும் சூழ்நிலை என்ன என்பதை நேற்று ஒரு தச்சர் கூறினார்.

தச்சர் : இதெல்லாம் எப்பொழுது முடிவடையும், ஐயா?

நான்: சீக்கிரத்தில். ஆனால் அவசரப்படக் கூடாது. எப்பொழுது முடிவடையும் என்று கேட்கிறீரே, எதைக் கேட்கிறீர்?

தச்சர்: ஏதோ சுயராஜ்யம் வரப் போவதாக எல்லோரும் கூறுகிறார்களே. அதைத்தான் எப்பொழுது வரும் என்று கேட்டேன். தினந்தோறும் எங்களிடம் மூன்று ரூபாய் வேலை வாங்கிக் கொண்டு அரை வயிற்றுக்குக்கூடக் காணாத அளவு வெந்ததும் வேகாததுமாகப் பருப்பும் சோறும் உப்புப் போடாமல் கொடுக்கிறார்களே, இதெல்லாம் எப்பொழுது ஒழியும் சாமி?

இங்கே ஓர் அருவருக்கத்தக்க முறை நடந்து வருகிறது. மற்றச் சிறைகளிலும் இப்படித்தான் என்கிறார்கள். துவரையை உடைக்காமல் நீரில் ஊற வைத்து ஊறியபின் அரைகுறையாக அரைத்துப்



போட்டுக் குழம்பு வைக்கிறார்கள். இந்தக் கஷாயத்தைக் கைதிகள் எல்லோரும் வெறுக்கிறார்கள். இங்கே காணப்படும் வயிற்று நோவுகளுக்கும் இதுதான் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஹீராசிங்கிடம் அவருடைய விருத்தாந்தங்களைக் கூறும்படி கேட்டேன். எவ்வளவு கேட்டாலும் அவர் கூறுவதாயில்லை. இறுதியில் மற்றவர்களிடமிருந்து அறிந்து கொண்டேன். அவர் நான்கு லக்ஷம் ரூபாய் ஆஸ்திக்கு அதிபதியாயிருந்தார். அது முழுவதையும் அரசாங்கத்தார் பறிமுதல் செய்து கொண்டார்கள். அதைப் பற்றிக் கேட்டால் அவர் ''டோண்ட் கேர்'' (அதைப் பற்றிக் கவலையில்லை) என்று சீனர்கள் பேசும் அரைகுறை ஆங்கிலத்தில் பதில் கூறுகிறார். அவர் ஹாங்காங் என்னும் சீனத் துறைமுகப் பட்டினத்தில் சிறு வயது முதல் வியாபாரம் செய்துகொண்டிருந்தார். யுத்தம் ஆரம்பமானதும் அவரை அங்கே இருக்கக் கூடாது என்று உத்தரவிட்டார்கள். அவர் பாங்காக் பட்டினம் சென்று அங்கிருந்து சிங்கப்பூருக்கு ஓடிப் போய், அதன் பிறகு பஞ்சாபிலுள்ள தம்முடைய கிராமத்துக்கு வந்து சேர்ந்தார். அவரை உடனே அரசாங்கத்துக்கு விரோதமாகச் சதி செய்ததாகக் கூறி, கைது செய்து ஆயுள் தண்டனை விதித்தார்கள். அவர் ஹாஸரிபாக் சிறையிலிருந்து தப்பி ஓடினார். அவரை மறுபடியும் கைது செய்து இங்கு அனுப்பி விட்டார்கள். அவருக்கு இடுப்பில் ஒரு நோவு, உட்கார முடியாது. வைத்திய சாலையில் இருக்கிறார்.

''நான் ஹாஸரிபாக் சிறையில் ஆறு வருஷ காலம் இருந்தேன். அந்தக் காலத்தில் நான் சூரியனை ஒரு முறை கூடக் கண்ணால் கண்டதேயில்லை. என்னைத் தனிக் கொட்டடியில் அடைத்து வைத்திருந்தார்கள். அதிலேயேதான் மாவரைத்தேன், உண்டேன், உறங்கினேன், சகலமும் செய்தேன். அதனால் என் மூளையானது அநேகமாகக் கலங்கி விட்டதென்றே கூற வேண்டும்'' என்று அவர் கூறினார்.

இப்பொழுது உலாவ அனுமதி கொடுத்திருக்கிறார்கள். அது அவருக்கு ஒரு வரப்பிரசாதம்போல் இருக்கிறது. அவர் சந்தோஷமாயும் தைரியமாயும் இருக்கிறார்.



''சிறைச்சாலை என் வீடு; எது பிரியமில்லையோ அதைச் செய்வதில்லை. தண்டனை கொடுத்தால் ஏற்றுக் கொள்கிறேன். அவ்வளவுதான்'' என்றும் கூறுகிறார்.

''ஆயுத பலத்தை உபயோகியாமல் எந்த நாடும் சுதந்திரம் அடைந்ததில்லை. சீன தேசத்திலும் அவ்விதமேதான். அஹிம்சா முறையை அனுஷ்டிக்க எத்தகைய தியாகங்கள் புரிய வேண்டுமோ, அத்தகைய தியாகங்கள் புரியுமாறு நீங்கள் ஜனங்களைச் செய்ய முடியாது'' என்று வாதித்தார்.

''ஆயுத பலம் உபயோகிப்பதற்கு வேண்டிய தகுதி நம்மிடமில்லை. அஹிம்சா முறையில் அரசாங்கத்தை எதிர்க்க முடிந்தாலன்றி சுயராஜ்ய ஆட்சியை நிர்வகிப்பதற்கு வேண்டிய ஆற்றல் நமக்கு உண்டாகாது. ஆயுத பலத்தை உபயோகித்து அந்நிய ஆட்சியினின்று விடுதலை பெறுவது சாத்தியமானாலும் அப்படி ஆயுத பலம் உபயோகித்தவர்களேதான் ஆட்சி புரிய ஆரம்பித்து விடுவார்கள். சுயராஜ்யமானது அஹிம்சாப் புரட்சி மூலம் சித்தியானால்தான் இந்திய மக்களுக்கு வேண்டிய உண்மையான சுயராஜ்யம் கிடைக்கும்'' என்று அவருக்குப் பலவாறு விளக்கிக் கூறினேன்.

மொழிபெயர்த்துக் கூறிய மகமது ஹுசேன் சாயபுக்கு உடம்பு சுகமில்லை. சிலுசிலுப்பு வந்து விட்டது. அதனால் நாங்கள் பேச்சை நீடிக்காமல் உறங்கப் போனோம். ராகவய்யாவும் நான்கு தெலுங்கு கைதி வார்டர்களும் இன்று இந்தச் சிறையிலிருந்து வேறு சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். ஒத்துழையாமைக்காரர்களுக்கு உதவி செய்தார்கள் என்ற சந்தேகத்தின்பேரில்தான், கைதி வார்டர்களையும் கொண்டு போனார்கள் என்று தோன்றுகிறது. ராகவய்யாவை அழைத்துக் கொண்டு போனதன் காரணம் தெரியவில்லை. வேறு சிறைக்கு மாற்ற எண்ணிக் கொண்டு போனார்களா அல்லது புதிதாகக் குற்றம் சாட்டி விசாரணை நடத்துவதற்காக அழைத்துக் கொண்டு போனார்களா, எதுவும் தெரியவில்லை.



குமாரி எஸ். ஜயந்தி
(பி.ஏ. இறுதி ஆண்டு
எத்திராஜ் கல்லூரி, சென்னை)

கூட்டுக் கல்வி வேண்டாம் என்று நான் கூறும்பொழுது இங்குள்ள சூழ்நிலையையும், நமது பழக்க வழக்கங்களையும் கருத்தில் கொண்டே கூறுகிறேன். 'கூட்டுக் கல்வி' என்பது வெறுத்து ஒதுக்கிவிட வேண்டியது என்பதல்ல. மேலைநாடுகளில் இது சகஜம். பெண்கள் பள்ளியில் படித்து விட்டுப் புகுமுக வகுப்பில் திடீரென்று ஆண்களோடு சேர்ந்து கல்வி பயிலும் நிலை ஏற்பட்டால், ஆண்களோடு எப்படிப் பழகுவது என்று தெரியாமல் விழிக்க நேரிடும். பெரும்பாலான பெண்களின் நிலை இதுதானே? ஆண்களைச் சரிவரப் புரிந்து கொள்ளாத நிலையில் மாணவிகள் மாணவர்களுடன் பழகும்போது சில தவறுகள் செய்து விடக்கூடும்.

தொடக்கப் பள்ளியிலிருந்தே கூட்டுக் கல்வி அமுலிலிருந்தால் நிலைமை சகஜமாக இருக்கும். உயர்நிலைப்பள்ளி மட்டத்தில் ஆண்களும் பெண்களும் தனித் தனியே பயின்றுவிட்டு, கல்லூரிக்கு வரும்போது சேர்ந்து படிக்கும் நிலை விரும்பத் தக்கதன்று. ஆண்களுக்கும் சரி, பெண்களுக்கும் சரி, அந்தப் பருவம் பல்வேறு மனநிலைகளைத் தோற்றுவிக்கக் கூடியது. தன்னையே சரிவரப் புரிந்து கொள்ளாத நிலை. இருபாலாருக்கும் குறும்பும் சேஷ்டைகளும் தோன்றக் கூடிய வயது. மேலை நாடுகளில் சேர்ந்து படிக்கும் பழக்கம் இருப்பதால் இங்கும் அது இருக்கலாம் என்று கூறுவது பொருந்தாது. 'டேட்டிங்' (Dating) என்பது மேலை நாட்டில் சகஜம். அந்தப் பழக்கத்தை இங்கு மேற்கொள்ள ஆரம்பித்தால் விளைவு விபரீதந்தான்.

ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஒரே கல்லூரியில் பயிலும்போது இருபாலாரும் ஒருவர் கவனத்தை இன்னொருவர் ஈர்க்க முயலுவார்கள். வயதுக்கோளாறு காரணமாக இது தவிர்க்க முடியாததே. படிப்பில் கவனம் குறைந்துவிடும். மேலை நாடுகளில் மாணவப் பருவத்திலேயே பலர் பல்வேறு ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுப் பல சாதனைகள் புரிகின்றனர். ஆனால், மேலை நாட்டு மாணவர்களைப் போல் நீண்ட முடி வளர்ப்பது, ஆடை அணிவது, ஏன் — ஹஷிஷ் போன்ற போதைப் பொருட்களை உபயோகிப்பது இவற்றிலெல்லாம் அவர்களைக் 'காப்பி' அடிக்கிற நிலைமை இங்கு பரவலாக இருப்பதைப் பார்க்கிறோம். மேலை நாட்டு மாணவர்களின் சாதனைகளை நாம் முன்மாதிரியாகக் கொண்டு முன்னேறுவ தில்லையே?

# கூட்டுக் கல்வி கூடாதா? — விவாத அரங்கு

பி. எஸ்ஸி. முடித்து ஐ. ஐ. டி.யில் சேரும் வரை நானும் கூட்டுக் கல்வி கூடாது என்று தான் எண்ணிக் கொண்டிருந்தேன். இங்கு மகளிர் பலர் — சுமார் இருநூறுபேர் முதுநிலைக் கல்வி பயின்று வருகின்றனர். என்போன்ற பல மாணவர்கள் இதற்கு முன்பு ஆண்கள் கல்லூரியில் படித்தவர்களே. இங்குள்ள சூழ்நிலை கூட்டுக் கல்விக்குச் சாதகமாகவே உள்ளது என்பது ஒருபுறம் இருக்க, எந்தச் சூழ்நிலையையும் உகந்த முறையில் மாற்றிக் கொள்ளும் ஆற்றல் நமக்கு இல்லையா என்ன? பெண்கள் கெட்டுப் போய்விடுவார்கள் என்ற வாதம் ஏற்றுக் கொள்ள முடியாதது. கெட்டுப்போகிறவர்கள் எங்கும் எத்தகைய சூழ்நிலையிலும் கெட்டுப் போவார்கள்.

ஒரு வகுப்பில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிக்கும்பொழுது ஒரு பெண் முதல் 'ராங்க்' பெற்றால் நன்றாகப் படிக்கும் மாணவர்கள் என்ன நினைப்பார்கள்? 'பெண்ணுக்கு ஆண் குறைவாகப் போகலாமா? நாமும் நன்றாக முயற்சி செய்தால் அடுத்த பரீட்சையில் முதல் 'ராங்க்' ஏன் வாங்க முடியாது?' என்ற உணர்ச்சி எழும். போட்டி மனப்பான்மையால் தோன்றும் இந்த உணர்ச்சி மாணவ—மாணவிகளிடையே மங்கிப் போயிருக்கும் ஆற்றலைத் தூண்டி விடும். இது ஓர் ஆரோக்கியமான போட்டி அல்லவா?

கூட்டுக் கல்வி இருக்கிற கல்லூரிகளில் அநேகமாக 'ஸ்ட்ரைக்' நடைபெறுவதில்லை. பெண்கள் உடன் இருப்பதே ஆண்களை நிதானத்துடன் செயல்பட வைக்கும். ஆண்களின் பொறுப்புணர்ச்சி வளரவும் இது துணை புரிகிறது. பெண்களை அடிமைகளாக நினைக்கும் மனப்பான்மை ஆண்கள் பலரிடம் இன்றும் காணப்படுகிறது. கோ—எஜுகேஷனல் கல்லூரிகளில் படித்த ஆண்களிடம் இத்தகைய உணர்வு இராது. 'ஈவ்-டீஸிங்' (Eve teasing) அதாவது யுவதிகளை ஆண்கள் சீண்டுவது, தொல்லை கொடுப்பது பற்றிப் பல புகார்கள் அவ்வப்போது கிளம்புகின்றன. ஆனால், ஆண்—பெண் இருபாலாரும் சேர்ந்து படிக்கும் கல்லூரிகளில் இந்த அசம்பாவிதம் நடைபெறுவதில்லை. கூட்டுக் கல்வியினால் மாணவ சமுதாயத்தின் பண்பும் பொறுப்புணர்ச்சியும் வளருமே ஒழியக் குலையாது.

பேட்டி : 'பாணன்'

டி. எஸ். ராமானுஜம்
(எம்.எஸ்ஸி. முதல் ஆண்டு
ஐ. ஐ. டி., சென்னை.)






# அதி நவீன போஷாக்கு பானம்!

விவா போஷாக்கு செறிந்தது. விவா சுவை நிறைந்தது உடனடியாக கரைகிறது. அதிக சக்தி அளிக்கிறது. பெரியவர்களுக்குப் பிடித்தமானது. குழந்தைகள் விரும்புவது—விவா. ஏனெனில், விவா தூய பாலாடைக் கலவையோடு இன்னும் பல நல்ல பொருட்கள் அடங்கியது. விவாவில் உள்ள ப்ரோட்டீன் உங்களுக்கு வலிமை அளிக்கிறது. விவாவில் உள்ள கார்போஹைட்ரேட் உங்களுக்குப் புத்துணர்ச்சியைத் தருகிறது. விவாவில் மால்ட் செய்யப்பட்ட பார்லியும், கோதுமையும் நிறைந்துள்ளது.

எனவே விவா எல்லாவற்றையும் விட சுவைமிகுந்த போஷாக்கு பானமாகத் திகழ்கிறது.

விவா அதிநவீன தொழில்நுட்ப முறையில் உருவானது. எனவே அதன் பூரண போஷாக்கு தன்மை கெடாது நிலைத்து நிற்கிறது. மேலும் உடனடியாக கரைகிறது.

இன்றே உங்கள் குடும்பத்துக்கு ஒரு பாட்டில் விவா வாங்கிச் செல்வீர்—புதிய வலிமையும் புத்துணர்ச்சியும் பெறுவீர்!

**சிறந்த சுவைக்கும், செறிந்த சக்திக்கும் நவீன விவா**

ULKA-VSL-TAM

# சத்திய வெள்ளம்

நா. பார்த்தசாரதி

## பதினேழாவது அத்தியாயம்

மல்லிகைப்பந்தலிலிருந்து மதுரைக்குச் செல்லும் மலைப் பகுதிச் சாலையில் மண் சரிந்து மூடியதன் காரணமாகப் பிரயாணம் தடைப்பட்டதில் நாயினாவுக்கு எவ்வளவு ஏமாற்றமாக இருந்ததோ அவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தது கண்ணுக்கினியாளுக்கு. எப்படியாவது அந்தப் பிரயாணம் நின்றுபோய் விடவேண்டும் என்றுதான் அவள் தவித்தாள். அவளுடைய தவிப்பும், ஏக்கமும் வீணாகவில்லை. பாண்டியனைப் பார்த்துச் சொல்லி விடைபெற்றுக் கொள்ள முடியாமல் அவன் ஆஸ்பத்திரியில் இருக்கும்போது, தான் மட்டும் நவராத்திரி மகிழ்ச்சியை நாடித் தந்தையோடு ஊருக்குப் போவதில் அவளுக்கு மனமேயில்லை. பிரயாணம் நின்று போகும்படி இருபத்தேழாவது மைலில் ஆடு காத்தான் பாறைக்குப் பக்கத்தில் சரிந்த மலையை வாழ்த்தியது அவள் உள்ளம்.

அவர்கள் பஸ் நிலையத்துக்குச் செல்லும்போது இருந்ததை விட இப்போது மழை மேலும் அதிகமாகியிருந்தது. காற்று வேறு சுழித்துச் சுழித்து வீசவே குடை பிடித்துக் கொண்டு நடந்தாலும் நனைந்துவிடும் போலிருந்தது. பிரயாணம் இல்லை என்று ஆனாலும் கூட மழை ஓரளவு குறைந்த பின்பே பஸ் நிலையத்திலிருந்து திரும்ப முடியும் என்று ஆகிவிட்டது. காற்றும் மழையும் அவ்வளவு கடுமையாகியிருந்தன.

பஸ் நிலையத்தில் பிரயாணிகள் தங்குவதற்காகப் போடப்பட்டிருந்த நீண்ட தகரக் கொட்டகையில் கூட ஓரங்களில் மழைச்சாரல் அடித்து நனைத்துக் கொண்டிருந்தது. கலைந்து போக முடியாமல் மழையினால் அங்கே தங்க நேர்ந்து விட்டவர்கள் நெருக்கியடித்துக்கொண்டு நின்றார்கள். அண்ணாச்சி அங்கே தென்பட்ட தமக்குத் தெரிந்த ஒவ்வொருவருக்கும் நாயினாவை அறிமுகப்படுத்தி வைத்துப் பேசிக் கொண்டிருந்தார். கண்ணுக்கினியாளோ தன் மனத்தின் அந்தரங்கமான மகிழ்ச்சியைப் பிறரோடு பகிர்ந்து கொள்ளவும் முடியாமல் தனக்குள்ளேயே அடக்கிக்கொள்ளவும் முடியாமல் உடன் இருந்த வகுப்புத் தோழியோடு ஏதேதோ பேசிக் கொண்டிருந்தாள்:

''இந்த ஊரில் பலர் மழைக் காலத்தை வெறுக்கிறார்கள். ஆனால் எனக்கென்னவோ இந்த ஊரின் கோடைக் காலத்தை விட மழைக்காலம்தான் பிடித்திருக்கிறது. அறையிலேயே அடைத்துக் கொண்டு நமக்கு விருப்பமான ஆசிரியர்களின் நாவல்களை ஒவ்வொன்றாகப் படித்துத் தீர்க்க ஏற்ற காலம் இதுதான்!''

''அது மட்டுமில்லை, கண்ணுக்கினியாள்! மழைக் காலத்துக்கும் காதலுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாக நம் இலக்கியங்கள் எல்லாம் சொல்லுகின்றன!'' என்று அவள் மனநிலையைப் புரிந்து கொண்டு கண்ணைச் சிமிட்டியபடி குறும்பாகப் பதில் சொன்னாள் வகுப்புத்தோழி. அவள் தன்னைச் சரியாகக் கண்டுபிடித்து விட்டாள் என்பது கண்ணுக்கினியாளுக்குப் புரியவும் நாணம் வந்து கவ்விக் கொண்டது.

''சிவகாமீ! காதலைப் பற்றி நீ ஏதாவது 'தீஸிஸ்' எழுதப் போகிறாயா என்ன? ரொம்பத்தான் அதைப் பற்றி ஆராய்ச்சிகள் செய்து வைத்திருக்கிறாய் போலிருக்கிறதே...?''

''அப்படி ஏதாவது எழுதினால் அதில் அநுபவம் உள்ளவளான உன்னைக் கேட்காமலா செய்வேன்?''

''ஏதேது வாய்க் கொழுப்பு அதிகமாகிறாற் போலிருக்கிறதே? விவரம் தெரியாமல் 'நம்ம சிவா' ரொம்ப சாது என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களே உன் சிநேகிதிகள்?''

''அண்ணாச்சி கடையில் கைவளைகளைக் கழற்றி எறிந்து 'தேர்தல் மனுவில் கையெழுத்துப் போடத் துணிவு இல்லாவிட்டால் இந்த வளைகளை அணிந்து கொண்டு ஓடுங்கள்' என்று யாரிடம் அன்றைக்குச் சவால் விட்டாயோ அவரையே நினைந்து உருகும் பரம சாதுவாக நீதான் இன்று மாறி விட்டாய்.''

கண்ணுக்கினியாள் தன் தோழியின் இந்த நளினமான அன்புக் குற்றச்சாட்டுக்கு மறுமொழி ஏதும் சொல்ல முடியாமல் நாணித் தலை குனிந்தாள். மழை நீரின் கனத்தால் தலை கவிழும் ஒரு மெல்லிய பூவின் நிலையில் அப்போது அவள் இருந்தாள்.

அவளே சில விநாடி மௌனத்துக்குப் பின் தோழி சிவகாமியிடம், "ஊருக்குப் புறப்பட்டுப் போவதற்குள் எப்படியாவது அவரை ஒரு முறை பார்த்துப் பேசிவிட வேண்டுமடீ சிவகாமீ! 'தற்கொலை முயற்சி' என்று உண்ணாவிரதம் இருந்த எல்லாரையும் கைது செய்ததுதான் செய்தார்கள். மாணவிகளாகிய நம்மை மட்டும் ஏன் உடனே விடுதலை செய்து தொலைத்தார்கள்? கைதாகி ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்ளா விட்டாலும் ஒரே இடத்தில் இருக்கிறோம் என்ற திருப்தி மட்டுமாவது இருந்தது...இப்போது அந்த நிம்மதியும் இல்லாமல் தவிக்கிறேன்..." என்றாள்.

"பின்னென்ன? காதல் என்பதே பரஸ்பரம் தவிப்பதுதானே? மனமும் உணர்வுகளும் தவிப்பதை விடப் பெரிய காதல் எங்கே இருக்கப் போகிறது?"

"நீ சொல்வதைப் பார்த்தால் அவரும் அங்கே ஆஸ்பத்திரிக் கட்டிலில் என்னை நினைத்துத் தவித்துக் கொண்டிருப்பார் என்று ஆகிறது. எனக்கென்னவோ அப்படித் தோன்றவில்லை சிவகாமீ! ஆண்கள் எல்லாருமே கல் நெஞ்சுக்காரர்கள்! பல வேளைகளில் தங்களுக்காகத் தவித்து உருகும் பேதைகளை அவர்கள் சுலபமாகவும், வசதியாகவும் மறந்து விடுகிறார்கள்."

"ஆனாலும் அந்தக் கல் நெஞ்சுக்காரர்களை நாம் மறக்க முடிவதில்லை. நம்மை மறந்து விடுபவர்களையும் நாம் மறக்காமல் எண்ணி உருகும் கலப்பில்லாத அன்பைச் சகுந்தலை காலத்திலிருந்து நாம் போற்றி வருகிறோம்."

"அப்படிப் போற்றி வருவதனால் தான் தலைமுறை தலைமுறையாகப் பல துஷ்யந்தர்கள் ஆணினத்தில் உருவாகி வருகிறார்கள். பெண்ணினத்தின் பேதைமைக்குச் சகுந்தலையும் ஆணினத்தின் சோர்வுக்குத் துஷ்யந்தனும் நிலையான உருவகங்கள்."

"பயப்படாதே கண்ணுக்கினியாள்! பாண்டியன் அப்பழுக்கில்லாதவர். அவர் ஒரு நாளும் துஷ்யந்தன் ஆகிவிட மாட்டார். நீ பாக்கியசாலி. இந்தப் பல்கலைக் கழகத்தில் காதலிக்கிற எத்தனையோ மாணவிகளுக்கு எத்தனையோ அழகான மாணவர்கள் கிடைப்பார்கள். காதலும் நிகழும். அது பெரிய காரியமில்லை. ஆனால் நீயோ மாணவர்கள் பல்லாயிரம் பேருக்குத் தலைவராகிற ஒரு தன்மானம் மிக்க மாணவரை உன் தலைவனாக்கிக் கொண்டிருக்கிறாய். நீ ஒரு மாணவரின் அன்புச் சிநேகிதி மட்டும் இல்லை. ஒரு தலைவனின் அன்புத் தோழி என்பது பெருமைக் குரியது."

**வ**குப்புத் தோழி சிவகாமி இப்படிக் கூறிக் கொண்டிருந்தபோது வெளியே பெய்து கொண்டிருந்த மழை தணியத் தொடங்கி யிருந்தது. அதற்குப் பதில் கண்ணுக்கினியாளின் உள்ளத்தில் ஆனந்த மழை பெய்யத் தொடங்கியிருந்தது. அவள் இதயம் உடனே ஓடிச் சென்று பாண்டியனைக் காணத் துடித்தது. ஏற்கெனவே அண்ணாச்சியிடம் எழுதிக் கொடுத்திருந்த கடிதத்தைத் திருப்பி வாங்கி இன்னும் விரிவாக எழுதிக் கொடுத்துவிட விரும்பினாள் அவள். அவர்கள் பஸ் ஸ்டாண்டிலிருந்து திரும்பும்போது நன்றாக இருட்டி விட்டது. மஞ்சு மூட்டத்தில் தெரு விளக்குகள் மங்கலாக மினுக்கத் தொடங்கியிருந்தன. 'பிளவர்ஸ் கார்னரி'லும் ஏரியை ஒட்டிய சாலைகளிலும் இருளோடு இருளாகக் குடைகள் நகர்ந்து கொண்டிருந்தன. மஞ்சு மூட்டத்தில் ஆட்கள் தெரியாமல் குடைகளே நடப்பது போல் தோன்றிய காட்சி வேடிக்கையாக இருந்தது. ஏரியிலே 'போட்' கிளப் கட்டிடமும், படகுத் துறைகளும் வெறிச்சோடிக் கிடந்தன. பல்கலைக் கழக காம்பஸுக்குள் இருந்த ஏரியை விட நாலைந்து மடங்கு பெரிய இந்த ஏரி நகரத்தின் நடு மையமாகக் கண்ணாடி பதித்தது போல் அமைந்திருந்தது. கடைத் தெருக்கள், தியேட்டர்கள், பெரிய பூங்காக்கள், நகரசபை அலுவலகம், டவுன் ஹால் முதலிய எல்லாம் இந்த ஏரியின் நான்கு புறத்து வீதிகளிலுமே அமைந் திருந்தன. ஏரியைச் சுற்றி நான்கு புறமும் மரங்களடர்ந்த பகுதியில் மேட்டிலும் சரிவுகளிலுமாக அமைந்திருந்த குடியிருப்பு வீடுகளின் விளக்கு ஒளிகள் ஏரி நீர்ப் பரப்பில் பிரதிபலித்த காட்சி மிக மிக அழகாயிருந்தது.

பஸ் நிலையத்திலிருந்து திரும்பும்போது கண்ணுக்கினியாளின் தந்தை நாயுடுவையும் தங்கள் வீட்டிலேயே வந்து தங்குமாறு அன்புடன் வேண்டினாள் சிவகாமி. நாயுடு அதற்கு இணங்காமல் அண்ணாச்சியோடு தங்கிக் கொள்வதாகச் சொல்லி விட்டார்.

"நீ உன் சிநேகிதியோட போய்த் தங்கிக்க தங்கச்சி! நாயினாவை நான்

பார்த்துக்கறேன். உல்லன் கோட் கம்பளி எல்லாம் குடுத்து இந்தக் குளிரை அவரே மறக்கும்படி செஞ்சிடறேன்'' என்று தந்தையைப் பற்றி மகளிடம் உறுதிமொழி கொடுத்து அனுப்பினார் அண்ணாச்சி. புறப்படு முன் அண்ணாச்சியிடம் அந்தக் கடிதத்தை நினைவாகக் கேட்டுத் திருப்பி வாங்கிக் கொண்டாள் அவள். வேறொரு விரிவான கடிதம் எழுதி மறுநாள் அவரிடம் கொடுப்பதாகவும் அதை அவர் எப்படியும் பாண்டியனிடம் சேர்த்து விட வேண்டும் என்றும் குறிப்பாகப் புலப்படுத்தி யிருந்தாள். ஏரிக் கரைப் பூங்கா அருகிலேயே அவர்கள் பிரிந்து விட்டார்கள். அப்போதே மழை மீண்டும் மெல்லத் தொடங்கி யிருந்தது.

கடைக்குத் திரும்பியதும் பையனை அனுப்பிச் சூடாக இட்டிலி வாங்கிவரச் செய்து நாயுடுவும் அண்ணாச்சியும் இரவு உணவை முடித்துக் கொண்டார்கள். கடை முகப்பை ஒட்டிப் பின்புறம் இருந்த அறையில் ஒரு கட்டிலில் மெத்தை கம்பளி விரிப்புகளோடு நாயுடுவைக் குளிருக்கு அடக்கமாகப் படுக்க வைத்து விட்டுப் பையன்களோடு உட்கார்ந்து கடை வரவு செலவைக் கவனிக்கத் தொடங்கினார் அண்ணாச்சி. கடைப் பையன்களில் ஒருவன் நாயுடுவின் கட்டிலருகே அங்கிருந்த பெஞ்சுகளில் இரண்டை இணைத்துப் போட்டு விரிப்பு கம்பளி யெல்லாம் போர்த்தி அண்ணாச்சிக்காக ஒரு படுக்கை ஆயத்தம் செய்து கொண்டிருந்தான். வெளியே மழை வலுத்திருந்தது. அலுப்பு அதிகமாக இருந்ததாலோ அல்லது தள்ளாமை காரணமாகவோ நாயுடு படுத்த உடனேயே இழுத்துப் போர்த்திக் கொண்டு தூங்கி விட்டார். மழை நிற்கும் என்று அதிக நேரம் எதிர்பார்த்தும் நிற்காத காரணத்தால் கடைப் பையன்கள் மழைக் கோட்டுகளை அணிந்து கொண்டு குடையோடு புறப்பட்டுப் போய் விட்டார்கள். பையன்கள்



போனதும் உள்ளே இருந்தபடியே கடை முகப்பை அடைக்கும் இரும்பு ஷட்டரை இறக்கிவிட்டு விட்டு விளக்கை அணைப்பதற்காகச் சென்ற அண்ணாச்சி வெளிப்புறம் இரும்பு அடைப்புத் தட்டப்படுவதைக் கேட்டு ஸ்விட்சை 'ஆஃப்' செய்யாமலே மறுபடி ஷட்டரைத் தூக்கினார். வெளியே மழைக் கோட்டும் குடையுமாக அண்ணாச்சிக்கு மிகவும் வேண்டியவரான போலீஸ் கான்ஸ்டேபிள் ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவர் அப்போது போலீஸ் உடையில் இல்லை. ஆனால் அவசரமாகவும், பரபரப்பாகவும் காணப்பட்டார். ''வாங்க தம்பீ! ஏது இந்த அடை மழையிலே...? இந்நேரத்துக்கு இந்தப் பக்கமா வந்தீங்க...?'' என்று அண்ணாச்சி அவரை வரவேற்றார். அவர் உள்ளே வந்து கொண்டு, ''முதல்லே ஷட்டரைப் போடுங்க.... அப்பறம் பேசலாம். ரொம்ப முக்கியமான காரியமாத்தான் வந்தேன்... உங்க காதிலே போட ஒரு விஷயம் இருக்கு...அவங்க பண்ற அக்கிரமம் என் மனசு பொறுக்கலே... நான் வந்து சொன்னேனின்னு மட்டும் வெளியிலே வரப்படாது. ஆனா விஷயம் உடனே உங்களுக்குத் தெரியணும்.''

''என்ன விஷயம் சொல்லுங்க தம்பீ! பையங்க சமாசாரம்தானே?''

''ஆமாங்க அண்ணாச்சி! செக்ஷன் இரீ நாட் நயன்லே பிடிச்ச ஆறு பையன்களிலே ரெண்டு பேரைக் கொஞ்ச நேரத்துக்கு முன்னே விடுதலை பண்ணிட்டாங்க. ஆனா மாணவர் யூனியன் தலைவன், காரியதரிசி, உப தலைவன், உப காரியதரிசின்னு முக்கியமான போஸ்டுகளிலே இருக்கிற பையன்க நாலு பேர் மேலேயும் 'கிரிமினல் கான்ஸ்பிரஸி'ன்னு சார்ஜ் பிரேம் பண்ணி ஆஸ்பத்திரியிலேருந்து ஜெயிலுக்கு மாத்திட்டாங்க. அந்தப் பையன் பாண்டியனோட ஹாஸ்டல் அறையிலே வெடி மருந்துச் சாதனங்களும், நாட்டு வெடிகுண்டு தயார் செய்யற இட்டமும் இருந்ததைக் கண்டுபிடிச்சாங்களாம். மோகன்தாஸ் ரூமிலே வைஸ்சான்ஸலரையும் ரிஜிஸ்திராரையும் கொலை செய்ய வேண்டுமென்று பல மாணவர்கள் கூடி இரத்தத்திலே கையெழுத் திட்ட கடிதாக போலீஸ் 'செர்ச்'சிலே கிடைச்சதாம். மத்த ரெண்டு பேர் அறையிலே யூனிவர்ஸிடி 'டவர் கிளாக்'கை வெடி வைச்சுத் தகர்க்கிறது சம்பந்தமாக் கடிதாக கிடைச்சிருக்காம்....''

''இதெல்லாம் என்ன கதை தம்பீ? யாரைக் கவிழ்த்து விட இந்த மோசடி வேலை பண்றாங்க...?''

''கதைதான் அண்ணே! யூனிவர்ஸிடி யூனியன் எலெக்சன்லே இந்தப் பையங்க ஜெயிச்சது அவங்களுக்குப் பிடிக்கலே. ஜெயிச்சவங்களை எதிலியாவது மாட்டி வைக்கணும். இவங்க ரூம்களிலே அவங்களா எதை எதையோ கொண்டு போய்ப் போட்டு வேணும்னே வம்புலே மாட்டி வைக்கிறாங்க. இதுக்கு வி.ஸி., ரிஜிஸ்திரார், ஆர்.டி.ஓ போலீஸ் எல்லாம் உடந்தை... எனக்கு மனசு கேட்கலே... உங்க காதிலே போட்டுட்டுப் போகலாம்னு மழையோட மழையா ஓடியாந்தேன்...''

''வேண்டியவங்க செய்கிற தீமைகளைப் பாதுகாக்கவும், வேண்டாதவங்க செய்கிற நன்மைகளை ஒடுக்கவுமே அதிகாரங்கள் பயன்படுத்தப்படுகிறவரையில் அதிகாரங்களை எதிர்க்கிற மனப்பான்மை தவிர்க்க முடியாத ஒரு பொதுச் சக்தியாக இங்கே இருந்தே தீரும்... நீ வந்து சொன்னதுக்கு ரொம்ப நன்றி தம்பீ!... மேலே ஆக வேண்டியதை நாங்க கவனிக்கிறோம்... உன்னை நான் காமிச்சுக் கொடுக்க மாட்டேன். அந்தப் பதினெட்டாம் படிக் கருப்பன் மேல் சத்தியம். இனிமே நீ கிளம்பிப் போகலாம்... யாராவது பார்த்திடாமே புறப்படு'' என்று அந்தக் கான்ஸ்டேபிளுக்கு விடைகொடுத்தார் அண்ணாச்சி.

கான்ஸ்டேபிள் புறப்பட்டுப் போன பின் தூங்கிக்கொண்டிருந்த நாயுடுவை எழுப்பி, ''நாயினா! நான் வெளியிலே பூட்டிக்கிட்டு ஒரு முக்கிய வேலையாப் போறேன். நீங்க நிம்மதியாத் தூங்குங்க. நான் திரும்பி வர்றதுக்கு நடு ராத்திரி ஆவும். கதவைத் தட்டி உங்க தூக்கத்தைக் கெடுக்காம இருக்கணும்னு தான் வெளிலே பூட்டிக்கிறேன்னு சொல்றேன். பிளாஸ்கிலே வெந்நீர் இருக்கு. பாத் ரூம் லைட்டு ஸ்விட்சு உங்க கட்டிலுக்கு மேலே சுவர்லே இருக்கு'' என்று அவருக்கு விவரம் கூறிய பின் வெளியேறி ஷட்டரைத் தள்ளிப் பூட்டிக் கொண்டு புறப்பட்டார் அண்ணாச்சி. மழைக்குப் பாதுகாப்பாக ரெயின் கோட், குடை, டார்ச் லைட், ஆளுயரக் கிளுவைக் கம்பு சகிதம் புறப்பட்டிருந்தார் அவர். லேக் ரோடு சந்திப்பில் போய் அங்கிருந்த பெரிய தபால் கந்தி ஆபீஸ் பொது டெலிபோன் பூத்திலிருந்து வீட்டில் ஃபோன் வசதி உள்ள உள்ளூர் மாணவர்கள் சிலருக்கு ஃபோன் செய்து உடனே தேசிய இளைஞர் சங்கக் கட்டிடத்துக்கு அவர்களை வரச்சொன்னார். ஆளும் கட்சியைத் தவிர மற்ற எல்லா அரசியல் கட்சிகளையும் சேர்ந்த உள்ளூர்த் தலைவர்களுக்கும் ஃபோன் செய்தார். தொழிற் சங்கப்

# தலையாய கேச ஸ்டைல் கலைஞர்களின் சிபாரிசு:

# ட்ரூ-டோன்

## ஹேர் டைய்

**ஆண் பெண்களுக்கென, உலகில் உன்னத விற்பனை உடைய கேசச் சாயத்தைத் தயாரிப்போரின் படைப்பு.**



"எத்தனையோ கேசச் சாய முறைகளை நோட்டம் பார்த்து விட்டோம். கேசத்திற்கு இயற்கை மெருகும் பளபளப்பும் அளித்து எளிதில் இளமைக் களையினை மீட்பது ட்ரூ-டோன். எங்கள் வாடிக்கையாளர்களுக்கு நாங்கள் சிபாரிசு செய்வது ட்ரூ-டோன் அன்றி வேறில்லை. இத்தகைய அருமையான தயாரிப்பு ஒன்று உருவாக்கிய உங்களுக்கு நன்றி."

(அஸ்பி)
லேகன் ஹேர் ஸ்டைலிஸ்ட்,
123 மவுண்டு ரோடு, சென்னை-6.

ட்ரூ-டோன் உங்கள் கேசத்திற்கு உயிர்த் துடிப்புள்ள இளமைப் பொலிவூட்டுகிறது ☐ ஒருசீராகப் பரவியமைகிறது, உடனடியாகச் செயல்படுகிறது ☐ இயற்கை மெருகும் பளபளப்பும் அளிக்கிறது ☐ அடிக்கடி கழுவினாலும் மங்கவோ நிறம் மாறவோ செய்யாது







தயாரிப்போர்:
ஜே.கே.ஹெலன் கர்ட்டிஸ் லிட்,
பம்பாய்-1

**ஹெலன் கர்ட்டிஸ்**
லண்டன் • பாரிஸ் • நியூ யார்க்

தவிரவும் கிடைப்பவை: ஹேர் டைய் உபயோகிப்போருக்கென, தனித்திறமுடன் தயாரிக்கப்பட்ட ட்ரூ-டோன் ஸ்டெயின் ரிமூவர், ட்ரூ-டோன் ஷாம்பூ

ARMS-HC 4472.80.D TM

பிரமுகர்களையும் வரச் சொன்னார். அண்ணாச்சியின் பெரு முயற்சியால் அந்த அடை மழையில் நள்ளிரவில் பல்கலைக் கழக மாணவர்களின் பிரச்னை சம்பந்தமாகத் தேசிய இளைஞர் சங்க மாடியில் ஒரு கூட்டம் நடைபெற்றது. மாணவர்கள் மீது சுமத்தப்பட்டுள்ள பொய்க் குற்றச்சாட்டுக்களையும், பொய் வழக்குகளையும் எதிர்த்துப் போராடவும், நடவடிக்கை எடுக்கவும், சர்வ கட்சியினரும் அடங்கிய 'செயற் குழு' ஒன்று அமைக்கப்பட்டது. அந்தச் செயற் குழு மறுநாள் காலையிலேயே துணைவேந்தரையும், ஆர்.டி.ஓ.வையும் தனித் தனியே சந்தித்துப் பேசுவதென்றும் முடிவாயிற்று.

எல்லா முடிவுகளையும் செய்துவிட்டு அவர்கள் கலையும்போது இரவு ஒரு மணிக்கு மேல் ஆகிவிட்டது. தக்க சமயத்தில் எல்லாருக்கும் தகவல் தெரிவித்து ஒன்று சேர்த்துப் பேச வைத்ததற்காக அண்ணாச்சியை அனைவரும் பாராட்டினார்கள்.

மறு நாள் காலையில் முதல் நாளிரவு கான்ஸ்டபிள் மூலம் இரகசியமாகத் தெரிந்த எல்லாக் குற்றச்சாட்டுகளுமே பத்திரிகையில் வந்துவிட்டன. மாணவர்கள் அத்தகைய குற்றங்களில் ஈடுபட்டிருப்பார்கள் என்பதை யாருமே நம்பத் தயாராக இல்லை. அந்தக் குற்றச்சாட்டுக்களும், நடவடிக்கைகளும் திட்டமிட்ட பழி வாங்கல் வேலை என்பது எல்லாருக்கும் புரிந்தது.

காலையில் செய்தியைப் பத்திரிகைகளில் படித்துவிட்டுக் கண்ணுக்கினியாளும், சிவகாமியும் அண்ணாச்சியின் கடைக்கு ஓடி வந்தார்கள். அண்ணாச்சி அவர்களுக்குத் தைரியம் கூறினார். விஷயத்தைக் கேள்விப்பட்டுப் பத்திரிகையிலும் படித்துவிட்டு, ''இதென்னப்பா ? இரணியன் ராஜ்யத்திலேகூட இப்பிடி எல்லாம் நடந்திருக்காதே? மகா கொடுமையாவல்ல இருக்கு?'' என்று வருத்தப்பட்டார் நாயுடு.

''நாயினா ! இதைவிட இரணியன் ராஜ்யம் ஒருவிதத்திலே நல்லாக்கூட இருந்திருக்கும் ! ஏன்னா இரணியன் ராஜ்யத்திலே இரணியன் ஒருத்தன் தான் இரணியனா இருந்திருப்பான். இப்ப, அதிகாரிகள், சர்க்கார், போலீஸ் நிர்வாகம், கட்சியாட்கள்னு நூற்றுக் கணக்கான இரணியனுகளை ஒரே சமயத்திலே எதிர்கொள்ள வேண்டியிருக்கு. அதுதான் வித்தியாசம்'' என்றார் அண்ணாச்சி.

சிறைக்குப் போய்க் காலையில் பாண்டியனையும் மற்ற மூன்று மாணவர்களையும் சந்திப்பதற்காக அண்ணாச்சியும் கண்ணுக்கினியாளும் சிவகாமியும் சென்றார்கள். நாயினாவும் வருவதாகச் சொன்னார்.

''மழையா இருக்கு ! நீங்க ஏன் சிரமப்படணும் ? நீங்க இங்கேயே இருங்க'' என்று அவரைத் தடுத்துவிட்டார் அண்ணாச்சி. மழையோடு மழையாக மாணவர்களைச் சந்திக்கச் சிறைச்சாலைக்குச் சென்றார்கள் அவர்கள். மாணவர்களுக்குக் கொடுப்பதற்காகப் பிஸ்கெட் பொட்டலங்கள், ஆப்பிள், ஹார்லிக்ஸ் என்று ஏதேதோ வாங்கிக் கொண்டாள் கண்ணுக்கினியாள். இரவெல்லாம் கண் விழித்துப் பாண்டியனிடம் சேர்ப்பதற்காக அவள் எழுதிய கடிதம் வேறு இருந்தது. அந்தக் கடிதத்தை எழுதியபோது இருந்த உற்சாகம் இப்போது அவளிடம் இல்லை. ஆஸ்பத்திரியில் கொடுக்கலாம் என்று எழுதிய கடிதத்தைச் சிறைச்சாலையில் கொடுக்க நேரிடும் என்று அவள் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அப்போது அவள் ஒரு நிலைக்கு மேல் தாங்கிக் கொள்ள முடியாமல் அழுதேவிட்டாள். சிவகாமிக்கும், அண்ணாச்சிக்கும் அவளை அழுகையிலிருந்து தவிர்த்துச் சகஜ நிலைக்குக் கொண்டு வருவதற்குள் பெரும்பாடு ஆகிவிட்டது.

''நேற்றே பூதலிங்கம் சார் ஜாடையாகச் சொல்லியது பலித்து விட்டது அண்ணாச்சி! 'ஜெயித்த மாணவர்கள் மேல் என்னென்னவோ பொய்க் குற்றச்சாட்டுக்களை யெல்லாம் சுமத்துவதற்கு ஏற்பாடு நடக்கிறது. இதெல்லாம் எங்கே போய் நிற்கும் என்றே தெரியவில்லையம்மா' என்று அவர் நேற்றுச் சொன்னது இன்று நடந்து விட்டதே?'' என்று புலம்பிக் கண்ணீர் உகுத்தாள் கண்ணுக்கினியாள்.



## சத்திய வெள்ளம்

**வேண்டியவர்கள் செய்கிற தீமைகளைப் பாதுகாக்கவும், வேண்டாதவர்கள் செய்கிற நன்மைகளை ஒடுக்கவுமே அதிகாரங்கள் பயன்படுத்தப்படுகிற வரையில் அதிகாரங்களை எதிர்க்கிற மனப்பான்மை என்பது தவிர்க்க முடியாத ஒரு பொதுச் சக்தியாக இங்கே இருந்தே தீரும்.**




**நோ பார்க்கிங்!**

புது தில்லியில் ஐம்பத்தைந்து லட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்டுள்ள நான்கு மாடி 'கார் - ஸ்கூட்டர் பார்க்' இரண்டரை ஆண்டு காலமாக உபயோகிக்கப்படாமல் கிடக்கிறது.

- ஹிந்துஸ்தான் டைம்ஸ் - பாலி

---

சிறைச்சாலையில் அவர்கள் மாணவர்களைச் சந்திக்கக் கால் மணி நேரம் அநுமதி தரப்பட்டிருந்தது. பாண்டியனைப் பார்த்ததும் கண்ணுக்கினியாள் மறுபடியும் அழத் தொடங்கிவிட்டாள்.

சிறைக் கம்பிகளுக்கு வெளியே கையை நீட்டி அவள் கண்ணீரைத் துடைத்தபடி பாண்டியன் சொன்னான்: "அசடே! இதற்காகவே அழுதுவிட்டால் இதைவிடப் பெரிய கொடுமைகளைத் தாங்கும் சக்தியை நீ பெற முடியாது. நியாயமான கோபத்தோடு வருகிறவர்களிடம் அமைதியையும் சாந்தத்தையும் பற்றிப் பேசுவதும், சாந்தமாகவும், அமைதியாகவும் வருகிறவர்களிடம் அதிகார மிடுக்கோடு கோபப்படுவதுமாக ஓர் ஆட்சி இங்கே நடக்கிறது. கெஞ்சினால் மிஞ்சுவது. மிஞ்சினால் கெஞ்சுவது. பணிந்தால் அதிகாரம் செய்வது. அதிகாரத்தை மதிக்காவிட்டால் பணிவது. இதுதான் இன்றைய நடை முறை. இதில் பயப்படுகிறவர்களும், அழுகிறவர்களும் ஜெயிக்க முடியாது. மன உறுதியோடு போராட வேண்டும். அந்த மன உறுதி எங்களுக்கு இருக்கிறது. உனக்கும் இருக்க வேண்டும் என்று நான் எதிர்பார்க்கிறேன்."

இதைக் கேட்டு அவள் மனம் தேறியது. பிஸ்கட் பொட்டலங்களையும், பழங்களையும் கொடுத்துவிட்டு "இந்த விவரமெல்லாம் தெரியுமுன் நான் உங்களுக்கு நேற்றிரவு எழுதிய கடிதம் இது! ஆஸ்பத்திரியில் இருப்பீர்கள் என்றெண்ணி எழுதினது. முடிந்தால் படியுங்கள். என்னென்னவோ என் மன வேதனைகளை எழுதியிருக்கிறேன்..... ஒரு வேளை கிறுக்குத்தனமாகக்கூட உங்களுக்குத் தோன்றலாம்" என்று அந்தக் கடிதத்தையும் அவனிடம் எடுத்துக் கொடுத்தாள். அந்தச் சமயத்தில் உடன் வந்திருந்த சிவகாமியும், அண்ணாச்சியும் மற்ற மாணவர்களைப் பார்க்கப் போயிருந்தார்கள். ஏதோ மாபெரும் கிரிமினல் குற்றவாளிகளை அடைப்பது போல் அங்கே மாணவர்களைத் தனித்தனியே அடைத்திருந்தார்கள். அண்ணாச்சியும், சிவகாமியும் பாண்டியன் இருந்த சிறைக்கு வந்த பின் கண்ணுக்கினியாள் போய் மற்ற மூன்று மாணவர்களையும் தனித் தனியே பார்த்து அவர்களுக்காக வாங்கி வந்த பொருள்களைக் கொடுத்து ஆறுதலாகப் பேசிவிட்டு வந்தாள்.

அவள் எவ்வளவோ மறைக்க முயன்றும் மோகன்தாஸ், "உங்களுக்கு ரொம்ப மனக் கஷ்டமாக இருக்கும். அதிகம் அழுதிருக்கிறீர்கள். முகம் வாடியிருக்கிறது. கண்கள் சிவந்திருக்கின்றன. இத்தகைய கோலத்தில் உங்களை நான் சந்தித்ததே இல்லையே?" என்று கேட்டு விட்டான். இந்தக் கேள்வி மறுபடியும் அவளை அழச் செய்துவிடும் போல் இருந்தது.

"குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கப் போகிற நாங்களே குற்றவாளிகளாக்கப்பட்டுப் பொய்க் குற்றங்களால் ஜோடிக்கப்பட்டிருக்கிறோம். ஆனால் நிஜக் குற்றவாளிகளின் முகமூடி விரைவில் கிழிபடும். அப்போது வெற்றி மாலைகளோடு நாங்கள் வெளிவருவோம்" என்றான் மற்றொரு சிறைப்பட்ட மாணவன்.

அதற்குள் சிறையில் காவலிருந்த போலீஸ் ஆள் வந்து, 'நேரமாகிவிட்டது' என்று விரட்டவே மீண்டும் பாண்டியன் அருகே வந்து கண்களில் நீர் மல்க அவனைப் பார்த்தாள் கண்ணுக்கினியாள். அவள் பார்த்தபோது அவன் அவளுடைய கடிதத்தைப் படித்து முகம் மலர்ந்து கொண்டிருந்தான். எதிரே நிழல் படர்ந்தாற்போல் தெரியவே நிமிர்ந்து பார்த்து, "அழாதே. ஒரு புன்னகையோடு போய் வா... உன் கண்ணீர் எனக்கு நினைவிருப்பதைவிடப் புன்னகை நினைவிருப்பதுதான் தெம்பூட்டும்" என்றான் அவன். அவன் விருப்பப்படி புன்னகை செய்ய முயன்றாள் அவள். அவன் வலது கையை அந்தக் கடிதத்தோடு உயர்த்தி ஆட்டி அவளுக்கு விடை கொடுத்தான். அண்ணாச்சி முதல் நாளிரவு தாம் ஏற்பாடு செய்த செயற்குழு பற்றிய விவரங்களைப் பாண்டியனிடம் சுருக்கமாகச் சொல்லிவிட்டு விடை பெற்றார்.

சிறைவாசலுக்கு வந்தவுடன் கண்ணுக்கினியாளுக்கு அழுகை வெடித்துக் கொண்டு வந்தது. சிவகாமி அவளை ஆதரவாகத் தாங்கிக் கொண்டாள். "வெளியே மாணவ மாணவிகளை ஒன்று

இரட்டிப் போராட வேண்டிய சமயத்தில் நாம் புலம்பிக் கொண்டிருக்கக் கூடாது கண்ணுக்கினியாள்! இனிமேல் தான் நமக்கு அதிகமான பொறுப்பும் கடமைகளும் காத்திருக்கின்றன" என்று அவள் காதருகே சொன்னாள் சிவகாமி. தோழி கூறியதைக் கேட்டதும் தன் செயலால் தானே கூச்சப்பட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டு தன் உணர்வுகளைக் கட்டுப்படச் செய்தவளாய் அவர்களோடு நிமிர்ந்து நடந்தாள், கண்ணுக்கினியாள். சாலைகளில் உள்ளூர் மாணவர்கள் கூட்டம் கூட்டமாக எதிர்ப்பட்டார்கள். இவர்கள் மூவரும் அப்படி எதிர்ப்பட்டவர்களிடம் எல்லாம் நின்று பேசி எல்லா விவரங்களையும் தெரிவித்துக் கொண்டு போனார்கள்.

(தொடரும்)

# மாணவ மணிகளின் மகத்தான சாதனைகள்

A மின்சாரக் கார்

மெரினா கடற்கரை எதிரிலுள்ள பல்கலைக்கழகத் தேர்வு மண்டபத்துக்குள் மாணவர்கள் தேர்வு எழுதும் பொருட்டு நுழையும் போது அவர்கள் முகத்தில் தேங்கி நிற்கும் பித்தனையும் கவலையும் பயமும் பார்க்கப் பரிதாபமாக இருக்கும்! ஆனால் இம்மாதம் 15, 16, 17 தேதிகளில் அம் மண்டபத்தினுள் சென்று வந்த மாணவ — மாணவியரின் முகங்களில் பொங்கி வழிந்த உற்சாகமும் குதூகலமும் நம்மை வியப்பில் ஆழ்த்தின. என்ன விஷயம் நாமும் பார்ப்போமே என்று உள்ளே நுழைந்தபோது மாணவர் குலம் மதிநுட்பத்துடன் உருவாக்கியிருந்த விஞ்ஞானக் கண்காட்சியைக் கண்டோம். மனங்கள் குளிர்ந்தன.

முன்புற வாயிலில் மேல் மூடியில்லாத ஒரு பழைய பாணி 'ஊர்வல மாடல்' கார் நம்மை வரவேற்றது. 'மாடல்' என்னவோ பழசுதான். ஆனால் அதன் இயக்கம் முற்றிலும் புதிதாயிற்றே? மின்சக்தியால் இயங்கும் கார் அது. பெட்ரோல் தேவையில்லை. ஆறு வோல்ட் பேட்டரிகள் நான்கு இந்த மோட்டாரை இயக்குகின்றன. ஒன்றரை ரூபாய்ச் செலவில் அறுபது கிலோமீட்டர் தூரம் ஓடுமாம். காரின் அடக்க விலை மற்ற கார்களின் விலையைவிடக் குறைவு என்று சொல்ல முடியாதுதான். ஆனால் கட்டிக் காத்துத் 'தீனி' போடும் செலவு மிக மிகக் குறைவே! டீசல், பெட்ரோல் புகையினால் நாம் சுவாசிக்கும் காற்று விஷமாகிவிடுகிறது என்ற உண்மையின் அடிப்படையிற் பார்க்கும்போது வி. தம்புராஜ், அருள்பந்த் (ஐ.ஐ.டி.) உருவாக்கிய இப்படைப்புக்கு வருங்காலத்தில் நல்ல வரவேற்பு இருக்கக்கூடுமல்லவா?

V இருவர் ஓட்டும் சைக்கிள்

நகரிலுள்ள நாற்பது கல்வி நிறுவனங்கள் பங்குபெற்று உருவாக்கிய இக்காட்சியில் இருநூறு படைப்புக்கள் இடம் பெற்றிருந்தன. உயிரினப் பிரிவு, பொறியியல் பிரிவு, பௌதிக இரசாயனப் பிரிவு, புதுமுக வகுப்பு — பள்ளி மாணவர்களின் படைப்புக்கள் என்று நான்கு பகுதிகளாக இவற்றைப் பிரித்து வகைப்படுத்தியிருந்தனர். மாணவர்களின் மதிநுட்பம், ஊக்கம், செயல்திறன் இவற்றினை இந்த விஞ்ஞானப் படைப்புக்கள் வெளிப்படுத்தின.

'ஸிட்ரோனெல்லா' எனப்படும் தாவர எண்ணெய்க்குக் கொசுவை விரட்டியடிக்கும் தன்மையுள்ளது என்பதைப் பௌதிகத் தராசுக்கு எண்ணெய் போடுகையில் தற்செயலாகக் கண்டறிந்த விவேகானந்தா கல்லூரி மாணவர்கள் (என். பார்த்தசாரதி, எஸ். விசுவநாதன், எம். ரவி, என். சிவராமகிருஷ்ணன்) இந்த எண்ணெயைப் பயன்படுத்திக் கொசு மருந்து தயாரிப்பதில் வெற்றி கண்டுள்ளனர். இந்த எண்ணெயை உடம்பில் பூசிக் கொண்டால் ஆவியாகி விடும். எனவே, எட்டு

V [illegible]

## சினிமாக் கதை



"இரண்டாவது நாவலுக்கு 'பிளாட்' எப்படிக் கிடைத்தது?" என்று ஒரு கதாசிரியரைக் கேட்டதற்கு அவர் சொன்ன பதில்:
"என்னுடைய முதல் கதையின் சினிமாவைப் பார்த்தேன்!" - ஃபிலிம் ஃபேர் - பாலி

மணி நேரம் இதன் வாடை உடலில் தங்கியிருக்கும்படி இதனுடன் பாரஃபின், இளசரின் சேர்த்து ஒரு களிம்பாகத் தயாரித்துள்ளனர். எட்டு மணி நேரத்துக்கு மேல் தூங்கும் பழக்கமுள்ளவர்களுக்கு நமது அநுதாபம்!

சாதாரண சைக்கிளில் இருவர் சவாரி செய்தால் போலீசார் பிடித்துக் கொண்டு போய் விடுவார்களே — டாண்டம் (Tandom) சைக்கிளில் இருவர் சவாரி செய்தால் போலீசார், பாவம்! சும்மா பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்! பொறியியற் கல்லூரி மாணவர்கள் வி. சுவாமி, எம். சுந்தரபாபு உருவாக்கிய இந்தச் சைக்கிளில் ஒருவர்பின் ஒருவராக அமர்ந்து இருவர் சவாரி செய்யலாம். நீண்ட தூரப் பயணத்துக்கு மிகவும் உகந்தது. கல்லூரி 'ஓர்க்ஷாப்'பிலேயே இதனைத் தயாரித்துள்ளனர்.

தொழிற்சாலைகளில் தயாராகி வெளிப்படும் பொருள்களின் எண்ணிக்கையைக் கணிக்க டாகோ மீட்டர் எனும் கருவி பயன்படுத்தப்படுகிறது. இதன் விலை ரூபாய் ஆயிரத்து ஐந்நூறு வரை ஆகிறது. எம்.ஐ.டி. கல்லூரி மாணவர்கள் ஏ. எம். குசாலா, ஆர். பவானி சங்கர் உருவாக்கியுள்ள டாக்கோ மீட்டர் தொள்ளாயிரம் ரூபாய்க்குள் அடங்குகிறது. மிகவும் நுட்பமாகக் கணிக்கும் ஆற்றலுள்ள கருவி.

விவேகாநந்தா கல்லூரி மாணவர் பி. ரகுநாத் பல் சக்கரத்தில் இயங்கும் ஒரு புதிய ஸ்டீரியோ ரெக்கார்ட் பிளேயர் — ரேடியோவைப் பெரும்பாலும் நம் நாட்டில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டே உருவாக்கியுள்ளார்! 'பிக்-அப் ஆர்ம்' மட்டுமே வெளிநாட்டு உறுப்பு. இதன் விலை கொள்ளை மலிவு! நூற்றி எண்பது ரூபாய்தான்!..

குடிநீர்க் குழாயடியில் ஒரு டம்ளரை வைத்தால் டம்ளர் நிரம்பியவுடன் குழாய் தானே நின்று விடுகிறது! வைஷ்ணவா கல்லூரி மாணவர் பி. ஆர். சந்திரசேகரின் கண்டுபிடிப்பு இந்த ஆட்டோமாடிக் குழாய்!

க்ளோரோக்வின் என்ற மருந்து இதுவரை மலேரியாவுக்குக் கைகண்ட மருந்தாகப் பயன்பட்டு வந்துள்ளது. ஓர் உடலிலிருந்து ஓர் உறுப்பினை இன்னோர் உடலுக்குள் பொருத்தும் (Transplantation) சஸ்திர சிகிச்சைக்கு இம்மருந்து பயன்படும் என மருத்துவக் கல்லூரி மாணவர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

பள்ளி மாணவர்களின் கண்டுபிடிப்புக்களும் பாராட்டுக்குரியவை. 'ஹேர்' கருவி (Hare's Apparatus) மூலம் ஒரு திரவப் பொருளின் அடர்த்தி எண்ணைக் (Relative Density) கண்டு பிடிக்கலாம். ஒரே சமயத்தில் மூன்று, நான்கு திரவங்களின் அடர்த்தி எண்களைக் கண்டு உணரக் கூடிய கருவி யொன்றை தில்நகர் கேந்திரீய வித்யாலயா மாணவிகள் குமாரி கே. எஸ். பிரபா கே. எஸ். உஷா ஆகியோர் உருவாக்கியுள்ளனர்.

சமையலறை வேலையில் ஈடுபட்டு அலுத்துக் களைத்துப் போயிருக்கும் தாய்மார்களுக்கு உற்சாகமூட்டும் கண்டுபிடிப்பு ஒன்றினை ஐ.ஐ.டி. உயர்நிலைப் பள்ளி மாணவர் டி. வி. ஆர். சேஷாத்திரி உருவாக்கி யிருக்கிறார். காலையில் குறிப்பிட்ட நேரத்துக்கு இல்லத்தரசியின் காதருகே அலாரம் மணியோசை கேட்கிறது. கூடவே சமையல் அறையில் தானியங்குமுறையில் வேலைகள் நடக்கின்றன, இல்லத்தரசி அவ்வறையில் அடி எடுத்து வைக்கு முன்னரே! முதல்நாள் இரவு ஒரு பாத்திரத்தில் அரைத்த இட்லி மாவைப் போட்டு மூடி வைத்தால் அந்த மாவு இட்லித் தட்டில் உள்ள நான்கு குழிகளிலும் தானே வந்து விழுந்து, சில நிமிடங்களில் சூடான இட்லியாக வெந்து தயாராகி விடுகிறது. அதே சமயத்தில் 'டோஸ்ட்' செய்த ரொட்டித் துண்டுகளும் தயார்! இதெல்லாம் தயாராகு முன்னர் இல்லானின் ஸ்நானத்துக்கு வெந்நீர் தயாராக இருக்கிறது! அருகிலேயே, தானே இயங்கி காப்பி தயாரிக்கும் இயந்திரமும் உள்ளது!

இரசாயனப் பொருட்களில் தோய்த்து எடுத்த காகிதத்தில் ஒரு பேனா எதையோ எழுதுகிறது. பேனாவில் மசிக்குப் பதில் தண்ணீரைத்தான் நிரப்பியுள்ளார் கண்டுபிடிப்பாளர் பி. சீனுவாசன். இக்காகிதத்தில் மின்சாரத்தைப் பாய்ச்சிய மறு கணம் திடீரென்று எழுத்துக்கள் தென்படுகின்றனவே! கடந்த தேர்தல் காலத்தில் இம்மாதிரியான பேச்சுக்கள் காதில் விழுந்தது உங்கள் நினைவுக்கு வருகிறதோ!

நமது பொறியியல், விஞ்ஞானக் கல்வி மேலை நாட்டுக் கல்வி முறையோடு ஒப்பிடும் போது எவ்வளவோ பின்தங்கியுள்ளது என்பது உலகப் பிரசித்தம். தேர்வு முறையோ— கேட்கவே வேண்டாம்! கல்வித் தரம், பாட போதனை முறைகள், மாணவனின் திறமையைச் சோதிக்கும் முறைகள் இவை எல்லாவற்றிலும் அபிவிருத்திக்கு நிறைய இடம் இருக்கிறது. ஆயின் எம்மொழியில் பாடங்களைப் போதிப்பது என்ற அடிப்படை சர்ச்சையிலிருந்தே நாம் இன்னும் விடுபடவில்லை! கல்வித் துறையில் அரசியல்வாதிகளின் குறுக்கீடு வேறு! இவ்வளவு தடைகளையும் தொல்லைகளையும் மீறி நமது இளைஞர்கள் இவ்வாறெல்லாம் சாதனைகள் புரிவதை எவ்வளவு பாராட்டினாலும் தகும். —ரா. பா.

"பாய்ராட்! இடம் மாறினால் உங்களுக்கு நல்லது" என்று நான் சொன்னேன்.

"உனக்கு அப்படித் தோன்றுகிறதா?"

"ஆம்." என் நண்பர் புன்னகை புரிந்தார் : "அட? அப்படியானால் எல்லாம் ஏற்பாடு ஆகிவிட்டதா?"

"வருகிறீர்களா?"

"என்னை எங்கே அழைத்துப் போகத் திட்டம் போட்டிருக்கிறாய்?"

"பிரைடன். உண்மை என்ன தெரியுமா? எனது நண்பர் ஒருவர் எனக்கு நல்ல வருமானம் கிடைக்க வழி செய்தார்; பழமொழி சொல்வார்களே, அது போல், எரிப்பதற்கு ஏராளமான பணம் என்னிடம் இருக்கிறது. கிராண்ட் மெட்ரோபாலிடனில் வார இறுதியை ஆனந்தமாய்க் கழிக்கலாம் என்று நினைக்கிறேன்."

"தாங்க்ஸ். நன்றியோடு ஒப்புக் கொள்கிறேன். ஒரு கிழவனின் நலம் பற்றி அக்கறை கொள்ளும் நல்ல மனம் உனக்கு இருக்கிறது: அறிவாற்றலைவிட நல்ல மனம் மதிப்புமிக்கது. ஆம், ஆம், உன்னோடு பேசுகிற நான் அதைச் சிலசமயம் மறந்து விடுகிறேன்."

அவர் கூறியதன் உட்பொருள் எனக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை. பாய்ராட் என் மன ஆற்றலைச் சில சமயம் குறைவாக மதிப்பிடுவார் என்று எண்ணுகிறேன். அவர் என் பிரயாணத் திட்டத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றதால், என்னுடைய சிறு அதிருப்தியை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.

"சரி, பிரயாணம் முடிவாகிவிட்டது" என்றேன் வேகமாய்.....

சனிக்கிழமை மாலை நாங்கள் கிராண்ட் மெட்ரோபாலிடனில் உணவு அருந்திக் கொண்டிருந்தோம்.

உலகத்துச் செல்வந்தர்கள் அனைவரும் தங்கள் மனைவியரோடு பிரைட்டனில் கூடியிருப்பதாய்த் தோன்றியது. அற்புதமான வண்ண ஆடைகள்; நேர்த்தியான நகைகள், அழகுக்கு அழகு செய்யும் நோக்குடன் மட்டும் பெண்கள் நகைகள் அணிந்ததாய்த் தெரியவில்லை. பகட்டான காட்சிப் பொருள்களாகவும் அவற்றைப் பயன்படுத்தியிருந்தார்கள். எங்கே பார்த்தாலும் கூட்டம், உல்லாசம், கேளிக்கை!

பாய்ராட் முணுமுணுத்தார்: "ஓ, என்ன காட்சி! இது கொள்ளை லாபக்காரர்களுக்கு ஏற்ற இடம்; இல்லையா, ஹேஸ்டிங்ஸ்?"

"இருக்கலாம். ஆனால், எல்லாவற்றிலும் கொள்ளை லாபக்காரர்களின் கைவண்ணம் இருக்காது என்று நம்புவோம்!" என்று பதில் கூறினேன்.

பாய்ராட் சுற்றிலும் கூர்ந்து பார்த்தார்.

**அட்டைப்படக் கதை**



# முத்து மாலை

ஆங்கிலம்: **அகதா க்ரிஸ்டி**

தமிழ்: **எம். வி. வி.**

'' இந்த நகைகளின் குவியலைப் பார்த்தால் கொள்ளையடிக்கும் தொழிலில் என் மூளையைச் செலுத்தாமல், களவைக் கண்டுபிடிக்கும் தொழிலில் ஏன் ஈடுபட்டோம் என்று தோன்றுகிறது. திறமையுள்ள திருடர்களுக்கு அருமையான வாய்ப்பு. ஹேஸ்டிங்ஸ், — தூணுக்கு அருகில் உள்ள அந்தப் பருத்த ஸ்திரீயைப் பார்; மணி மாணிக்கங்களில் மறைந்து கிடக்கிறாள்.''

அவருடைய கண்களைப் பின்பற்றினேன்.

''அட, மிஸஸ் ஒபல்சன்!''

''உனக்கு அவளைத் தெரியுமா?''

''கொஞ்சம் தெரியும்'' என்றேன். ''அவளுடைய கணவர் பெரிய ஸ்டாக் புரோக்கர். சமீபத்தில் எண்ணெய் விலை ஏறியதல்லவா? அதிலே, இவருக்குக் கொழுத்த பணம்.''

சாப்பாட்டுக்குப் பிறகு ஓய்வறையில் நாங்கள் ஒபல்சன் தம்பதிகளைச் சந்தித்தோம். பைரட்டை நான் அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தேன். சில நிமிடங்கள் பேசிக் கொண்டிருந்தபின், எல்லோரும் சேர்ந்து காப்பி குடித்தோம்.

மிஸஸ் ஒபல்சன் பரந்த மார்பில் அணிந்திருந்த விலையுயர்ந்த வைரங்களைப் பைரட் பாராட்டிப் பேசியதைக் கேட்டு அவளுடைய முகம் பிரகாசித்தது.

'' எனக்கு இது பொழுதுபோக்கு, மிஸ்டர் பாய்ராட்! நகைகள் என்றால் எனக்கு மோகம். என் கணவருக்கு எனது இந்தப் பலவீனம் தெரியும். அவருக்கு வர்த்தகத்தில் வெற்றி கிட்டும்போதெல்லாம் எனக்காகப் புதிதாய் ஏதாவது வாங்கி வந்து



தருவார். விலை உயர்ந்த கற்கள் உங்களுக்கும் பிடிக்குமா ?''

'' அவ்வப்போது அவற்றோடு பழக எனக்கு வாய்ப்புக் கிட்டியிருக்கிறது. உலகப் புகழ்பெற்ற சில நகைகளோடு என் தொழில் காரணமாகத் தொடர்பு ஏற்பட்டுள்ளது.''

மிகவும் நாசூக்காக உண்மைப் பெயர்களை மறைத்து, ஓர் அரச குடும்பத்தின் வரலாற்றுப் புகழ் படைத்த சில நகைகளைப் பற்றிப் பைரட் விவரித்தார்; மிஸஸ் ஒபல்சன் மூச்சு விடவும் மறந்தவளாய் அதைக் கேட்டாள்.

அவர் முடித்ததும், '' ஒரு நாடகம் போலவே இருக்கிறதே ? என்னிடம் சில முத்துக்கள் இருக்கின்றன. அவைகளுக்கு ஒரு வரலாறு உண்டு. உலகத்தில் உள்ள மிகச் சிறந்த முத்துமாலைகளில் அது ஒன்று என்று கூறுகிறார்கள்; தூய நிறமும், பாந்தமான இணைப்பும் அதன் பெருமைகள்; ஓடிப் போய்க் கொண்டு வருகிறேன்'' என்றாள் மிஸஸ் ஒபல்சன்.

'' வேண்டாம், மாடம், வீண் சிரமம் எதற்கு? நீங்கள் என்னிடம் மிகவும் அன்பு காட்டுகிறீர்கள்'' என்றார் பாய்ராட்.

'' நீங்கள் அதைப் பார்க்க வேண்டும்.''

அந்தக் கனமான சீமாட்டி மிகச் சுறுசுறுப்பாக லிப்டுக்கு விரைந்தாள். என்னோடு பேசிக் கொண்டிருந்த அவளுடைய கணவர், பாய்ராட்டைக் கேள்விக் குறியோடு பார்த்தார்.

''மாடமுக்கு என்னிடம் மிகவும் பிரியம் உண்டாகி விட்டது; அவளுடைய முத்து மாலையை என்னிடம் காட்ட வேண்டும் என்று ஆசைப்படுகிறாள்'' என்று பாய்ராட் விளக்கினார்.

''முத்துக்களா?'' என்று ஒபல்சன் திருப்தியுடன் புன்னகை செய்தார். ''அவை பார்க்கத் தக்கவைதாம். நிறையப் பணம் விழுங்கின ; ஆனால் போட்ட பணத்துக்கு மோசமில்லை; எப்போது வேண்டுமானாலும் அதைப் பணமாக்க முடியும் — லாபத்தோடு விற்கலாம். இப்போதுள்ள பொருளாதார நிலைமை நீடித்தால் அதை விற்க நேர்ந்தாலும் நேரலாம். வாரிலே அவ்வளவு பண நெருக்கடி.'' — அவர் பொருளாதாரப் பரிபாஷையில் பேசிக் கொண்டே போனார். எனக்குப் புரியவில்லை.

ஒரு வேலைக்காரப் பையன் அவருடைய பேச்சில் குறுக்கிட்டு, அவர் காதுகளில் ஏதோ கூறினான்.

''அட, என்னது? நான் உடனே வருகிறேன். அவள் உடம்புக்கு ஒன்றும் இல்லையே?.... எக்ஸ்கியூஸ் மீ'' என்று எங்களிடம் சொல்லிக் கொண்டே அவர் எழுந்து சென்று விட்டார்.

பாய்ராட் பின்னால் சாய்ந்து கொண்டு, தம்முடைய சிறிய சிகரெட்டுகளில் ஒன்றைப் பற்ற வைத்தார். பிறகு அவர் ஓர் அலட்சிய பாவத்துடன் காப்பிக் கிண்ணங்களை வரிசையாக அடுக்கினார்; அந்த வரிசையைப் பார்த்து மகிழ்ந்து கொண்டார்.

நிமிடங்கள் போயின. ஒபல்சன்கள் திரும்பி வரவில்லை.

''எப்போது வரப் போகிறார்களோ?'' என்றேன் கடைசியில்.

பாய்ராட் கருள் கருளாக மேலேறும் புகையைப் பார்த்தவாறு, யோசனையில் ஆழ்ந்தவராய்க் கூறினார் : '' அவர்கள் வரமாட்டார்கள்.''

''ஏன்?''

''ஏனென்றால், ஏதோ நடந்திருக்கிறது.''

''என்ன நடந்திருக்கும் ? உங்களுக்கு எப்படித் தெரியும்?'' — என்றேன் ஆர்வத்தோடு.

பாய்ராட் புன்னகை புரிந்தார்.

''சில விநாடிகளுக்கு முன்னால் மானேஜர் அவசரம் அவசரமாய்த் தம் ஆபீசிலிருந்து வெளியே வந்து மாடிக்கு ஓடினார். அவர் ஒரே பரபரப்பாக இருந்தார். லிப்ட் பையன், ஒரு வேலைக்காரப் பையனுடன் மெய்ம்மறந்து பேசுகிறான்; லிப்ட் மணி மூன்று தடவைகள் ஒலித்ததுகூட அவன் காதில் விழவில்லை. மூன்றாவதாக வெய்டர்கள்கூட நிலைகுலைந்திருக்கிறார்கள். வெய்டர்களே நிலைகுலைந்திருக்கிறார் என்றால்...?'' பாய்ராட் தீர்மானமாய்த் தலை அசைத்துக் கூறினார்: ''பெரிய விவகாரமாகத்தான் இருக்க வேண்டும்... நான் சொன்னது சரிதான்... போலீஸ்காரர்கள் வருகிறார்கள்.''

இரண்டு பேர் அப்போதுதான் ஹோட்டலில் நுழைந்திருந்தார்கள்; ஒருவன் போலீஸ் உடுப்பிலும், மற்றவன் சாதா உடுப்பிலும். அவர்கள் ஒரு வேலைக்காரனோடு பேசினார்கள். உடனே லிப்டில் மாடிக்குச் சென்றார்கள்.

சில நிமிடங்களில் முன்பு வந்த அதே பையன் எங்களிடம் வந்தான்.

''மிஸ்டர் ஒபல்சன் உங்களை மாடிக்கு வரும்படி கேட்டுக் கொள்கிறார்.''

பாய்ராட் துள்ளி எழுந்தார், அழைப்புக்காகக் காத்திருந்தவர்போல். நானும் அவரைத் தொடர்ந்தேன்.

ஒபல்சனின் அறைகள் முதல் மாடியில் இருந்தன. கதவைத் தட்டிவிட்டுப் பணியாள் போய் விட்டான். ''உள்ளே வாருங்கள் !'' என்ற குரலுக்கு நாங்கள் பணிந்தோம்.

உள்ளே ஒரு விசித்திரமான காட்சியைக் கண்டோம். அது மிஸஸ் ஒபல்சனின் படுக்கை அறை ; அதன் நடுவில் இருந்த சாய்வு நாற்காலியில் அந்தச் சீமாட்டி பலமாய் அழுதவாறு கிடந்தாள். அவளுடைய முகத்தின் அழுமான பவுடர் மெருகைக் கண்ணீர் கோடு கோடாய்க் கலைத்திருந்தது.

ஒபல்சன் சினமாய் இங்குமங்கும் நடந்து கொண்டிருந்தார். இரண்டு போலீஸ்காரர்களும் அறை நடுவில் நின்றார்கள்; ஒருவன் கையில் ஒரு நோட்டுப் புத்தகம் இருந்தது.

ஹோட்டல் பணிப்பெண் ஒருத்தி கணப்பு அருகில் திகிலடித்து நின்றாள். மறு பக்கம், ஒரு பிரஞ்சுக்காரி; மிஸஸ் ஒபல்சனின் வேலைக்காரி என்று பார்த்ததும் தெரிந்தது: அழுது கொண்டும், கைகளை முறுக்கிக் கொண்டும் நின்றாள். அவளுடைய வருத்தத்தை எஜமானியின் வருத்தத்துக்குத்தான் ஈடாகச் சொல்ல முடியும்.

இந்தக் குழப்பத்தில் அடி வைத்தார் பாய்ராட். உடனே, இந்தப் பருமனில் இவ்வளவு வேகம் சாத்தியமா என்று வியக்கும்படியாக, மிஸஸ் ஒபல்சன் நாற்காலியிலிருந்து தாவி எழுந்தாள்.

# சுட்ட புண்கள்! வெட்டுக் காயங்கள்! விரைவில் இட்டுப் பாருங்கள் பர்னல்

## குளுமையுடன் இதமளிக்கும் நிவாரணி



பர்னல் பட்டவுடனே
சட்டென ஆற்றும்



ஆற்றும் போதே இதம்



வீடு என்றால் விபத்துக்கள் நேரத்தான் செய்யும். அடிக்கடி களிக்கும் குழந்தைக்கு அடிக்கடி அடிபடுவது சகஜம். சமையலறையிலோ எந்தநேரத்திலும் கொதி எண்ணெய் தெறிக்கலாம்; காய்கறி நறுக்கும்போது விரலிலே பட்டு விடலாம். எனவே எப்போதும் கைவசம் இருக்கட்டும் பர்னல்! குளுமையுடன் இதமளிக்கும் பர்னல், தீப்புண், வெட்டு, சிராய்ப்பு, கட்டி மற்றும் காயங்களை ஆற்றும் பலபயன் நிவாரணி. இட்டவுடன் இதமளித்து ஆற்றுவது பர்னல்.

**பர்னல் 40 ஆண்டுகளுக்கும் மேலாக கணக்கற்ற இல்லங்களில் காயமாற்றிவரும் நம்பகமான நிவாரணி**






ASP/B/B-15 TM

# பாலங்கள், கட்டிடங்கள்
# சாலைகள், அணைகள்
# வலிவும் நல்ல வடிவமும் பெற






# செட்டிநாடு
# பிராண்ட் போர்ட்லண்டு
# சிமெண்ட்

தயாரிப்பாளர்கள் :

**செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பரேஷன் லிமிடெட்**

பதிவு அலுவலகம் : 6, அரண்மனைக்காரன் தெரு, சென்னை-1.
தந்தி: "BESTCEMENT". போன் : 25356

தொழிற்சாலை : குமாரராஜா முத்தையா நகர்,
புலியூர் (கரூர்), திருச்சி ஜில்லா. தந்தி: 'CEMENT'. போன் : 144




சேல்ஸ் டிப்போக்கள் : 3, 1வது மெயின் ரோடு, காந்திநகர்
பெங்களூர்-9. போன் : 71715

18-C, கமியாக் லேன், கல்கத்தா-1. போன் : 22-4986




chari

'' ஆகா ! எட். என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும்'' என்று தன் கணவனைக் குறித்துச் சொன்னவள், தொடர்ந்து, ''எனக்கு அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை இருக்கிறது. இன்று மாலே நான் உங்களை இந்த மாதிரி சந்திக்க வேண்டும் என்று விதி. என்னுடைய முத்துக்களை நீங்கள் மீட்டுக் தர முடியவில்லை என்றால், வேறு யாராலும் முடியாது'' என்றாள் பாய்ராடை நோக்கி.

''மாடம்! அமைதியாயிருங்கள்'' என்று பாய்ராட் அவளுடைய கையை ஆறுதலாய்த் தட்டிக் கொடுத்தார்: ''கவலேப்படாதீர்கள். எல்லாம் சரியாகும்.''

ஓபல்சன் போலீஸ் இன்ஸ்பெக்டரின் பக்கமாகத் திரும்பினார்.

''இந்தக் கனவான் இருப்பதைப் பற்றி...ம் ...இம்... உங்களுக்கு ஆட்சேபம் இல்லேயே?''

''ஒன்றும் இல்லே, சார்'' என்றார் இன்ஸ்பெக்டர் பணிவாக. கூடவே அலட்சியமாக, ''மிஸஸ் ஓபல்சன் இப்போது விவரங்களைச் சொல்லும் நிலைமையில் இருக்கிறார் என்று நம்புகிறேன்'' என்றார்.

மிஸஸ் ஓபல்சன், உதவி வேண்டுகிறவள் போல் பாய்ராடை நோக்கினாள். அவர் அவளே நாற்காலிக்கே திரும்பவும் அழைத்துச் சென்றார்.

'' உட்காருங்கள், மாடம். நடந்ததை முழுதும் படபடப்பு இல்லாமல் நிதானமாய்ச் சொல்லுங்கள்.''

இவ்வாறு தேற்றப்பட்டதும் அவள் விறு விறுப்பாய்க் கண்களைத் துடைத்துக் கொண்டு தொடங்கினாள்:

'' சாப்பிட்ட பிறகு, மிஸ்டர் பாய்ராட்டுக்கு முத்துக்களைக் காட்ட விரும்பிய நான் மாடிக்கு வந்தேன். அறை வேலேக்காரியும், செலஸ்டினும் வழக்கப்படி இங்கே இருந்தார்கள்......''

''எக்ஸ்க்யூஸ் மீ, மாடம். 'வழக்கப்படி' என்கிறீர்களே, அதற்கு என்ன அர்த்தம்?''

ஓபல்சன் விளக்கினார்:

''நம் வேலேக்காரி செலஸ்டின் இல்லாத போது, அறைக்குள் வேறு யாரும் வரக் கூடாது என்று நான் ஒரு 'ரூல்' வைத்திருக்கிறேன். செலஸ்டின் இருக்கும் போதுதான் ஹோட்டல் வேலேக்காரி காலேயில் அறையைச் சுத்தம் செய்வாள். பிற்பகலில் படுக்கைகளை மாற்றிப் போடும்போதும் அப்படித்தான். செலஸ்டின் இல்லாவிட்டால் அவள் அறையில் நுழையவே மாட்டாள்.''

''ஆம்'' என்று மிஸஸ் ஓபல்சன் தொடர்ந்தாள். ''நான் மாடிக்கு வந்ததாய்ச் சொன்னேனா ? நான் இதோ, இந்த டிராயருக்குப் போனேன்'' என்று அவள் அலங்கார மேஜையின் வலது பக்கத்து அடி டிராயரைக் காட்டினாள். '' நகைப் பெட்டியை எடுத்துப் பூட்டைத் திறந்தேன். அது என்னவோ வழக்கம் போலவே இருப்பதாய்த் தோன்றியது. ஆனால் முத்துக்கள் அதில் இல்லே!''

இன்ஸ்பெக்டர் நோட்டில் வேகமாக எழுதிக் கொண்டிருந்தார்.

''கடைசியாக அவைகளை எப்போது பார்த்தீர்கள்?'' என்று அவர் கேட்டார்.

''நான் சாப்பிடப் போனபோது அவை அதில் இருந்தன.''










'' நிச்சயமாய் உங்களுக்குத் தெரியுமா?''

'' தெரியும். முத்துக்களை அணியலாமா வேண்டாமா என்று யோசித்தேன். கடைசியில் மரகதங்களை அணிவதென்று முடிவு செய்தேன். முத்துக்களை மறுபடியும் பெட்டியில் வைத்தேன்.''

''நகைப்பெட்டியை யார் பூட்டினீர்கள்?''

''நான் பூட்டினேன். கழுத்தில் உள்ள செயினில் சாவியைக் கோத்துக் கொள்வது என் வழக்கம்'' என்னும்போது அவள் செயினைத் தூக்கிக் காட்டினாள்.

அதைச் சோதித்த இன்ஸ்பெக்டர் தோள்களைக் குலுக்கினார்.

''திருடனிடம் மறு சாவி இருந்திருக்க வேண்டும். கஷ்டமான வேலை இல்லை. சாதாரணப் பூட்டு. நகைப் பெட்டியைப் பூட்டிய பிறகு என்ன செய்தீர்கள்?''

''அதைக் கீழ் டிராயரில் வைத்தேன். எப்போதும் அங்கே வைப்பது வழக்கம்.''

''டிராயரைப் பூட்டவில்லையா?''

''இல்லை; பூட்டும் வழக்கம் இல்லை. என் வேலைக்காரி நான் வரும் வரையில் அறையிலேயே இருப்பாள். ஆகையால், பூட்டத் தேவை இல்லை.''

இன்ஸ்பெக்டரின் முக பாவம் ஆழ்ந்தது.

''சாப்பிடுவதற்காக நீங்கள் கீழே போனபோது முத்துக்கள் இங்கே இருந்தன. அதற்குப் பிறகு வேலைக்காரி அறையை விட்டு வெளியே போகவில்லை என்று சொல்கிறீர்கள், இல்லையா ?''

தன்னுடைய பயங்கரமான நிலைமையை அப்போதுதான் உணர்ந்தவள்போல், செலஸ்டின் வீறிட்டு அலறினாள். பாய்ராட்டின் தோள்களைப் பற்றிக்கொண்டு பிரஞ்சு மொழியில் ஏதோ பொழிந்து தள்ளினாள். அதன் சாரம்சம் இதுதான் :

அவள் எஜமானியிடம் திருடியதாய்ச் சந்தேகப்படுவது மகா கேவலம் ! போலீஸ்காரர்கள் நம்ப முடியாத முட்டாள்தனத்துக்காகப் புகழ் பெற்றவர்கள்! ஆனால் இவர் (பாய்ராட்) ஒரு பிரஞ்சுக்காரராக இருப்பதால்....

''பெல்ஜியன்'' என்று பாய்ராட் திருத்தியதை செலஸ்டின் கவனிக்கவில்லை.

இந்தப் பிரஞ்சுக்காரர் அவள் மீது பொய்யாகக் குற்றம் சுமத்தப்படுவதையும், மற்ற வேலைக்காரி எளிதாகத் தப்புவதையும் பார்த்துக் கொண்டு பேசாமல் இருக்கக் கூடாது. அவள், அந்தச் சிவப்பு 'முகரக் கட்டை'யை ஒரு நாளும் நம்பியதில்லை. அந்த வேலைக்காரி பிறவித் திருடி. அவளை நாணயம் இல்லாதவள் என்று செலஸ்டினுக்கு ஆரம்பத்திலிருந்தே தெரியும். அதனால் அவள் அறையில் வேலை செய்யும்பொழுது அவள் மேல் செலஸ்டின் ஒரு கண் வைத்திருப்பாள். போலீஸ் முட்டாள்கள் அவளைச் சோதனை போட்டால், எஜமானியின் நகை கட்டாயம் கிடைக்கும் !

வேகமும் விறுவிறுப்பும் நிறைந்த பிரஞ்சுக் கொச்சையில் செலஸ்டின் சொல்மாரி பெய்தாலும், கைகால்களை ஆட்டியும் ஜாடை காட்டியும் அவள் அதை எல்லோருக்கும் விளங்கும்படி செய்து விட்டாள். அறை வேலைக்காரிக்கு முழுதும் புரியாவிட்டாலும், புரிய வேண்டிய அளவு புரிந்துவிட்டது. அவள் முகம் சினத்தால் சிவந்தது.

''அந்த வெளிநாட்டுக்காரி நான் முத்துக்களை எடுத்தேன் என்று சொல்கிறாள்? அது சுத்தப் பொய்!'' என்றாள் அவள் கொதிப்புடன். ''நான் அவற்றைப் பார்த்தது கூட இல்லை !''

''அவளைச் சோதனை செய்யுங்கள்!'' என்று கத்தினாள் மற்றவள். ''நான் சொல்வது போல் அவளிடமே நகை இருக்கும் !''

''நீ ஒரு மோசக்காரி! பூனை கேட்கிறதா?'' என்றவாறு அறைப் பணிப் பெண் முன் நகர்ந்தாள். ''நீயே திருடிவிட்டு என் மேல் பழி போடுகிறாயா? அம்மா வருவதற்கு முன்னாலே நான் மூன்று நிமிடங்கள்தான் அறையில் இருந்தேன். நீ இந்த இடத்தைவிட்டு அசையவில்லை. பூனை எலியைப் பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டுதானே இருந்தாய்?''

இன்ஸ்பெக்டர் செலஸ்டினைச் சந்தேகத்தோடு பார்த்தார். ''மெய்தானா? அறையை விட்டு நீ வெளியே போகவில்லையா?''

''நான் அவளைத் தனியாக விட்டு விட்டுப் போகவில்லை'' என்றாள் செலஸ்டின், அரை மனத்துடன். ''ஆனால் இந்தக் கதவு வழியாக இரண்டு தடவைகள் என் அறைக்குப் போனேன். பஞ்சுச் சுருள் கொண்டு வருவதற்காக ஒரு தடவை; கத்திரிக்கோலுக்காக இன்னொரு தடவை. அந்தச் சமயத்தில் அவள் எடுத்திருக்க வேண்டும்.''

அறை வேலைக்காரி ஆத்திரத்துடன் மறுமொழி கூறினாள்: ''நீ ஒரு நிமிடம்கூட உள்ளே இருக்கவில்லை. அந்தப் பக்கம் தலை நீட்டி விட்டு உடனே திரும்பி விட்டாய். போலீஸ் என்னைச் சோதனை செய்யட்டும்; தாராளமாய்ச் செய்யட்டும். எனக்குப் பயம் இல்லை.''

இச்சமயம் யாரோ கதவைத் தட்டினார்கள். இன்ஸ்பெக்டர் அங்கே போனார். யார் என்று பார்த்ததும் அவருடைய முகம் ஒளி கொண்டது.

''நல்ல வேளை! நம் பெண் சோதனையாள் ஒருத்தியை அனுப்பச் சொன்னேன். அவள் வந்திருக்கிறாள். பக்கத்து அறைக்குள் போகிறாயா ?'' என்று அவர் அறை வேலைக்காரியை நோக்கினார்.

அவள் தலையைச் சற்றுக் குலுக்கிவிட்டுப் பக்கத்து அறைக்குள் போனாள், சோதனைக்காரி பின்தொடர.

பிரஞ்சுப் பெண் தேம்பியவாறு ஒரு நாற்காலியில் விழுந்துவிட்டாள்.

பாய்ராட் அறை அமைப்பைக் கண்ணோட்டம் விட்டுக் கொண்டிருந்தார். அதை ஒரு வரை படமாகக் கீழே தருகிறேன்:

*அலங்கார மேஜை

*ஆடை அலமாரி

படுக்கை

செலஸ்டின் அறை

நடை பாதை

இன்றைய முன்னணி பிரபல

## பழனி டாக்டர் எஸ். காளிமுத்து

R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

### அவர்களின் விஜயம்



**சந்திக்கும் விலாசங்கள்**

1-க் தேதி திருநெல்வேலி: நெல்லை லாட்ஜ் காலை 8 மணி முதல் 12 மணி வரை.

1-க் தேதி நாகர்கோவில்: உடுப்பி ஸ்ரீகிருஷ்ண பவன், மாலை 2 மணி முதல் 4 மணி வரை.

2-க் தேதி மதுரை: மணீஸ் கபே, காலை 8 மணி முதல் மாலை 2 மணி வரை.

2-க் தேதி புதுக்கோட்டை: வஸந்தா லாட்ஜ் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை.

3-க் தேதி காரைக்குடி: AVM. PL. ரெஸ்ட் ஹவுஸ், காலை 8 மணிமுதல் 11 மணிவரை.

3-க் தேதி அறந்தாங்கி: கோகுலம் லாட்ஜ் பகல் 12 மணி முதல் 1 மணி வரை.

3-க் தேதி பட்டுக்கோட்டை: அசோகாலாட்ஜ் பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை.

3-க் தேதி மன்னார்குடி: மன்னை லாட்ஜ் மாலை 4-30 மணி முதல் 6 மணி வரை.

4-க் தேதி திருச்சி: ஹோட்டல் அஜந்தா காலை 8 மணி முதல் 2 மணி வரை.

4-க் தேதி கரூர்: பெரியார் உணவு விடுதி மாலை 3-30 முதல் மாலை 5 மணி வரை.

5-க் தேதி தஞ்சை: ராஜா ரெஸ்ட் ஹவுஸ் காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.

5-க் தேதி திருவாரூர்: அபூபக்கர் பில்டிங் மாலை 2 மணி முதல் 4 மணி வரை.

5-க் தேதி நாகை: தினகர விலாஸ், மாலை 5 மணி முதல் 7 மணி வரை.

6-க் தேதி காரைக்கால்: அசோக் லாட்ஜ் காலை 8 மணி முதல் 10 மணி வரை.

6-க் தேதி கும்பகோணம்: தாஜ்மஹால் லாட்ஜ், காலை 11 முதல் 2 மணி வரை.

6-க் தேதி மாயவரம்: காளியாகுடி லாட்ஜ் பகல் 3 மணி முதல் 4-30 மணி வரை.

6-க் தேதி கடலூர் N. T.: ஹோட்டல் பிருந்தாவனம், இரவு 7 மணி முதல் 8-30 மணி வரை.

7-க் தேதி பாண்டிச்சேரி: அருணா லாட்ஜ் காலை 8 மணி முதல் 10 மணி வரை.

**பழனி சித்தர் வைத்தியசாலை**

போன்: 316] பழனி [தந்தி: சித்தர்

# சிந்தால் வாக்குறுதி...

மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

புதுமை குன்றாத நறுமணம்

துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு

**...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது**




ஜி-11 அடங்கிய ஒரே சோப் சிந்தால். இந்த அற்புத கிருமி நாசினி உடல் துர்நாற்றத்திற்கும் சருமக்களங்கத்திற்கும் காரணமாக விளங்கும் கிருமிகளை அழித்து விடுகிறது. இவ்வாறு சிந்தால் உங்கள் மேனியெழிலை அப்பழுக்கின்றி வைத்திருப்பதுடன், உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைத்திருக்கிறது.

Interpub/GSC/5/72R Tam

''அந்தக் கதவு எங்கே போகிறது?'' என்று பாய்ராட் ஜன்னலருகில் இருந்த கதவைச் சுட்டிக்காட்டினார்.

''அடுத்த அறைக்கு என்று நினைக்கிறேன்'' என்றார் இன்ஸ்பெக்டர். ''ஆனால், இந்தப் பக்கம் தாழிடப்பட்டிருக்கிறது.''

பாய்ராட் அதன் அருகில் போனார். தாழை இழுத்துத் தள்ளிச் சோதித்துப் பார்த்தார்.

'' அந்தப் பக்கமும் தாழிடப்பட்டிருக்கிறது. சரி, அது இல்லை என்றாகிவிட்டது.''

அவர் ஜன்னல்கள் ஒவ்வொன்றையும் சோதனை செய்தார். ''இங்கும் ஒன்றுமில்லை. வெளிப் பக்கம் ஒரு பால்கனிகூட இல்லை.''

'' இருந்தாலும் என்ன? வேலைக்காரி அறையை விட்டு வெளியே போகவே இல்லையே?'' என்றார் இன்ஸ்பெக்டர் பொறுமை இழந்து.

பாய்ராட் சிறிதும் தயங்கவில்லை. ''அறையை விட்டு வெளியே போகவில்லை என்று இந்தப் பெண் உறுதியாகச் சொல்வதால்...''

அவர் முடிக்குமுன் அறை வேலைக்காரியும் பெண் போலீஸ் சோதனைக்காரியும் திரும்பி விட்டார்கள்.

''ஒன்றுமில்லை'' என்றாள் போலீஸ்காரி, சுருக்கமாக.

''எப்படி இருக்கும்?'' என்றாள் வேலைக்காரி நிதானமாக. ''ஒரு நாணயமான பெண்ணின் பெயரைக் கெடுத்த பிரஞ்சுப் பெண் தலை குனிய வேண்டும்!''

''சரி, சரி, நிறுத்து!'' என்றார் இன்ஸ்பெக்டர். ''யாருக்கும் உன் மேல் சந்தேகம் இல்லை. நீ போய் உன் வேலையைக் கவனி.''

அறை வேலைக்காரி மனமின்றிப் போனாள்.

''அவளைச் சோதிக்க வேண்டுமா?'' என்று பெண் போலீஸ் செலஸ்டினைக் காட்டினாள்.

''ஆம், ஆம்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

செலஸ்டின் போலீஸ் அதிகாரியோடு சிறு அறைக்குள் போனாள். அவளிடமும் ஒன்றும் காணப்படவில்லை.

இன்ஸ்பெக்டரின் முகம் கடுமை பெற்றது. ''நீ என்னோடு வரவேண்டியதுதான் மிஸ்'' என்றார். பின்னர், மிஸஸ் ஓபல்சனைப் பார்த்தார்: ''சாட்சியங்கள் எல்லாம் அப்படி இருக்கின்றன. அவள் நகையைத் தன் உடலில் ஒளித்து வைக்கவில்லை என்றால் அறையில் எங்காவது பதுக்கியிருப்பாள்.''

செலஸ்டின் மீண்டும் வீறிட்டு அலறினாள். பாய்ராட்டின் கையைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டாள். அவள் காதில் அவர் மெல்ல ஏதோ கூறினார். அவள் நிமிர்ந்து அவரை ஐயத்துடன் பார்த்தாள்.

அவளிடம், ''குழந்தாய்! எதிர்க்காமல் இருப்பதே நல்லது'' என்ற பைராட் இன்ஸ்பெக்டரிடம், ''ஒரு சின்ன சோதனை; என் திருப்திக்காக. அனுமதிப்பீர்களா?'' என்று கேட்டார்.

''என்ன செய்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது அது'' என்றார் போலீஸ் அதிகாரி, பட்டுக் கொள்ளாமல்.

பாய்ராட் செலஸ்டின் பக்கம் திரும்பினார்.

''செலஸ்டின்! பஞ்சுக் சுருள் கொண்டு வருவதற்காக, உன் அறைக்குள் போனதாகச் சொன்னாய். அது எங்கே இருந்தது?''

''அடுக்குடிராயர்பெட்டிக்கு மேலே சார்!''

''கத்திரிக்கோல்?''

''அதுவும்.''

''அதே வேலைகளை மறுபடியும் இப்போது செய்யச் சொன்னால், தொந்தரவாக நினைக்க மாட்டாயே? நீ இங்கேதானே உட்கார்ந்திருந்ததாகச் சொன்னாய்?''

செலஸ்டின் உட்கார்ந்தாள். பாய்ராட் ஜாடை காட்டியதும், பக்கத்து அறைக்குப் போய், அடுக்கு டிராயர் பெட்டியின் மீது இருந்த ஒரு பொருளை எடுத்துக் கொண்டு திரும்பினாள்.

அவளுடைய நடையையும், தம் உள்ளங் கையில் இருந்த பெரிய கடிகாரத்தையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தார் பாய்ராட்.

''இன்னொரு முறை, செலஸ்டின்!''

இரண்டாவது முறை அவள் அவ்வாறு செய்து முடித்த பிறகு, தம் பாக்கெட் நோட்டில் அவர் ஏதோ குறித்துக் கொண்டார். கடிகாரத்தைத் தம் பையில் திரும்பவும் வைத்துக் கொண்டார்.

''தாங்க்ஸ், செலஸ்டின்.... எனக்குக் காட்டிய மரியாதைக்காக உங்களுக்கும் நன்றி!'' என்றார் இன்ஸ்பெக்டரை நோக்கி.

இந்த அதிகப்படி வினயம் இன்ஸ்பெக்டருக்கு வேடிக்கையாக இருந்தது. கண்ணீர் வெள்ளத்துக்கிடையில் செலஸ்டின் போலீஸ்காரியுடனும், சாதா உடுப்புப் போலீஸ்காரரோடும் புறப்பட்டாள்.

அப்பால் மிஸஸ் ஓபல்சனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு இன்ஸ்பெக்டர் அறை முழுவதையும் ஆறையாடி விட்டார். டிராயர்களை வெளியே இழுத்தார். கப்போர்டுகளைத் திறந்து போட்டார். படுக்கைகளைக் கலைத்தார். தரையெல்லாம் தட்டிப் பார்த்தார். ஓபல்சன் சந்தேகத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார்.

''அவை கிடைக்கும் என்று நிசமாய் நீங்கள் நினைக்கிறீர்களா?''

''ஆம். அதுதான் அறிவுக்குப் பொருத்தமான யோசனை. அறைக்கு வெளியே அவைகளை எடுத்துக் கொண்டு போக அவளுக்கு நேரம் இல்லை. மிஸஸ் ஓபல்சன் இவ்வளவு சீக்கிரம் அவை காணாமல் போனதைக் கண்டு பிடிப்பாள் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. அவளுடைய திட்டம் குலைந்துவிட்டது. அவை கட்டாயம் இங்கேயே இருக்க வேண்டும். இரண்டு பேரில் ஒருவர் அவைகளை மறைத்து வைத்திருக்க வேண்டும் — அறை வேலைக்காரி செய்திருப்பாள் என்று தோன்றவில்லை.''

''தோன்றவில்லை என்ன, முடியவே முடியாத காரியம்!'' என்றார் பாய்ராட் அமைதியாக.

''உம்?'' என்று இன்ஸ்பெக்டர் விழித்தார்.

பாய்ராட் அடக்கமாய்ப் புன்னகை செய்தார்.

'' நான் செய்து காட்டுகிறேன். ஹேஸ்டிங்ஸ், என் நல்ல நண்பா, என் கடிகாரத்தைக் கையில் வைத்துக் கொள். ஜாக்கிரதையாக வைத்துக் கொள். இது பரம்பரை ஞாபகச் சின்னம்! கொஞ்ச நேரத்

# இது தற்செயலாக நிகழ்வதில்லை... அவை அவ்வாறு தயாரிக்கப்படுகின்றன.

'டெரீன்'® வாங்கும்போது, மிகச்சிறந்த துணி உங்களுக்குக் கிடைக்கிறதென்ற உறுதியுடன் நீங்கள் வாங்கலாம். கசங்காத் தன்மை, மிடுக்கான அமைப்பு, சாயம்போகாத்தன்மை, சுருங்காத் தன்மை ஆகிய எல்லாப் பண்புகளையும் சரிபார்ப்பதற்கென நாங்கள் இத் துணிகளைக் கடுமையான சோதனைகளுக்கு உள்ளாக்குகிறோம். இந்தச் சோதனைகளையெல்லாம் இத்துணிகள் வெற்றிகரமாகக் கடந்துவிட்டன என்பதே அவற்றின்மீது காணப்படும் 'டெரீன்' என்னும் டிரேட் மார்க்கின் பொருள். ஒரு டிரேட் மார்க்கில் இவ்வளவு அர்த்தம் தொனிப்பதே, அதை நாடி துணி வாங்கப் போதுமானதல்லவா?

இப்பொழுது நாங்கள் இன்னும் ஒரு படி மேலே சென்றுள்ளோம். தமது துறையில், 'டெரீன்' போலவே, முதன்மையில் உள்ள, தரத்தில் நாட்டமுடைய, தேர்ந்தெடுத்த மில்களோடு இணைந்து செயல்படுகிறோம். இப்பொழுது மேலும் கடுமையான தரநிர்ணயங்களுக்கேற்ப அமைந்த துணிகள் உங்களுக்குக் கிடைக்கும். எனவே, 'டெரீன்' விஷயத்தில் இன்னும் அதிக மேம்பாடுகளை எதிர்பார்த்து, நீங்கள் அவற்றைப் பெற்று மகிழவும் செய்யலாம்.

TERENE

'டெரீன்'—
சிறந்த மில்களுடன்...
சிறந்த துணிவகைகளின் மீது.

® 'டெரீன்' என்பது கெமிகல்ஸ் அண்ட் ஃபைபர்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்டின் ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும்.

CHAITRA-CAFI-50 TAM



''அமீனா வீட்டைக் காலி பண்ணச் சொல்வார்; இந்த அமீனா நாட்டையே காலி பண்ணச் சொல்கிறாரே!''

துக்கு முந்தி, நான் செலஸ்டினுடைய நடமாட்டத்தின் நேரத்தைக் கணித்தேன். முதலில் அவள் அறைக்கு வெளியே பன்னிரண்டு விநாடிகள் இருந்தாள். இரண்டாவது தடவை பதினைந்து விநாடிகள் இருந்தாள். இப்போது நான் செய்வதைக் கவனியுங்கள். மிஸஸ் ஓபல்சன்! தயவுசெய்து உங்கள் நகைப்பெட்டியின் சாவியைத் தருகிறீர்களா ? சரி, தாங்க்ஸ். என் நண்பன் ஹேஸ்டிங்க்ஸ், அன்பு கூர்ந்து 'போ' என்று சொல்வான்.''

''போ'' என்றேன் நான்.

நம்ப முடியாத வேகத்துடன் பாய்ராட் அலங்கார மேஜை டிராயரை இழுத்துத் திறந்தார், நகைப்பெட்டியை எடுத்தார், சாவியைப் பூட்டில் இட்டார், ஒரு நகையை எடுத்துக் கொண்டார், பெட்டியை மூடிப் பூட்டினார், அதை மீண்டும் டிராயரில் வைத்தார், டிராயரை முன்போல் உள்ளே தள்ளிவிட்டார். மின்னல் வேகத்தில் எல்லாம் நடந்தன.

''என்னது, நண்பா'' என்றார் அவர், மூச்சு விடாமல்.

''நாற்பத்தாறு வினாடிகள்'' என்று பதில் சொன்னேன்.

''பார்த்தீர்களா?'' என்று அவர் சுற்றிலும் பார்த்தார். ''அறை வேலைக்காரிக்கு நெக்லேஸை எடுக்கவே நேரம் இல்லை. ஒளிக்க எங்கே போவாள் ?''

''ஆக, செலஸ்டின்தான் செய்திருக்கவேண்டும் என்றாகிறது'' என்ற இன்ஸ்பெக்டர் திருப்தியுடன் தம் தேட்டத்தைத் தொடர்ந்தார். அவர் அடுத்திருந்த செலஸ்டினின் படுக்கை அறைக்குப் போனார்.

பாய்ராட் யோசனையில் ஆழ்ந்திருந்தார். திடீரென்று ஓபல்சனை நோக்கி ஒரு கேள்வியை எய்தார்.

''இந்த நெக்லேஸ் சந்தேகமின்றி இன்ஷ்யூர் செய்யப்பட்டதுதானே?''

இந்தக் கேள்வி கேட்டு ஓபல்சன் சற்று வியப்புற்றார்.

தயக்கத்துடன், ''ஆமாம்'' என்றார்.

''ஆனால், அதனால் என்ன பயன்?'' என்று குறுக்கிட்டாள் மிஸஸ். ஓபல்சன், கண்ணீருடன். ''எனக்கு என் நெக்லேஸ்தான் வேண்டும். அது அற்புதமானது. எவ்வளவு பணம் கொட்டினாலும் அதற்கு ஈடாகாது!''

''எனக்குப் புரிகிறது, மாடம். எனக்கு நன்றாகப் புரிகிறது. பெண்களுக்கு உணர்ச்சி பிரதானம், இல்லையா? ஆனால் மிஸ்டர் ஓபல்சனுக்கு நஷ்டஈடு கிடைக்கும் என்பதால் கொஞ்சம் ஆறுதல் உண்டாகும்.''

''உண்மை, உண்மை, ஆயினும்...'' என்று ஓபல்சன் இழுத்தார்.

அப்போது இன்ஸ்பெக்டரின் வெற்றி முழக்கம் கேட்டது. விரல்களுக்கு இடையில் ஏதோ தொங்க விட்டுக் கொண்டு அவர் வந்தார்.

கீச்சிட்டவாறு மிஸஸ் ஓபல்சன் நாற்காலியிலிருந்து தாவினாள். அவள் முற்றிலும் புதியவளாக மாறிவிட்டாள்.

''ஓ! என் நெக்லேஸ்!''

அதை இரண்டு கைகளிலும் ஏந்தி மார்போடு அணைத்துக் கொண்டாள். நாங்கள் அவளைச் சுற்றிக் கொண்டோம்.

''இது எங்கே இருந்தது?'' என்று கேட்டார் ஓபல்சன்.

''செலஸ்டினின் படுக்கையில். ஸ்பிரிங் கம்பிகளுக்கு இடையில். அறை வேலைக்காரி வருமுன்பே அவள் அதைத் திருடி அங்கே ஒளித்து வைத்திருக்க வேண்டும்.''

''கொஞ்சம் அனுமதிக்கிறீர்களா மாடம்?'' என்று மௌனமாகக் கூறிய பாய்ராட் அவளுடைய கையிலிருந்த நெக்லேஸை வாங்கி, கூர்ந்து பார்த்துவிட்டுப் பணிவாய்க் குனிந்து அவளிடம் திருப்பித் தந்தார்.

''இப்போதைக்கு இதை நீங்கள் எங்களிடமே கொடுத்துவிட வேண்டும். குற்றம் சாட்ட இது தேவைப்படும். ஆனால் விரைவில் திருப்பிக் கொடுத்து விடுகிறோம்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

ஓபல்சன் சற்றுப் பொறுமை இழந்து, ''அது அவசியம்தானா?'' என்றார்.

''ஆம், சார்; அது விதிமுறை.''

''எட், அவரே அதை எடுத்துக் கொள்ளட்டும். அது பத்திரமாக இருக்கிறது என்று எனக்கு நம்பிக்கை உண்டாகும்'' என்று கத்தினாள் மிஸஸ் ஓபல்ஸன். ''மறுபடியும் யாராவது அதைத் திருட முயல்வார்களோ என்ற அச்சத்தில் எனக்குத் தூக்கமே வராது. அந்தப் பாவிப் பெண்! அவள் இப்படிச் செய்வாள் என்று நான் கனவில்கூட நினைக்கவில்லை!''

என் கையை மெல்ல அழுத்தினார் பாய்ராட்.

''நாம் நழுவுவோமா, நண்பா? நம் சேவை இனி இங்கே தேவையில்லை.''

ஆயினும் வெளியே வந்ததும் அவர் தயங்கினார். பிறகு நான் வியப்புற அவர் கூறினார்:

''பக்கத்து அறையை நான் பார்க்க விரும்புகிறேன்.''

அந்த அறைக் கதவு பூட்டியிராததால் நாங்கள் உள்ளே நுழைந்தோம். அது ஒரு பெரிய 'டபிள்' அறை; அங்கே யாருமில்லை. எங்கும் ஒரே தூசிமயமாய் இருந்தது. ஜன்னலுக்கு அருகில் இருந்த ஒரு மேஜை மேலிருந்த ஒரு சதுரமான குறியைச் சுற்றித் தூசிலிய விரல்களால் தொடும்போது தொட்டாற் சுருங்கியான என் நண்பரின் முகம் கோணியது.

''இங்கே சேவை தேவை'' என்றார் அவர்.

அவர் யோசனையில் ஆழ்ந்தவராய் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்தார்.

''நாம் இங்கே ஏன் வந்தோம்?'' என்றேன் பொறுமை இழந்து.

அவர் துணுக்குற்றார்.

''நண்பா! மன்னிக்க வேண்டும். இந்தப் பக்கமும் கதவு உண்மையாகத் தாழிடப் பட்டிருந்ததா என்று பார்க்க விரும்பினேன்.''

''உம்'' என்று நான் அப்போதுதான் நாங்கள் வெளிவந்த அறையோடு சம்பந்தப் பட்ட கதவைப் பார்த்தேன். ''இது தாழிடப்பட்டிருக்கிறதே!''

பாய்ராட் தலையசைத்தார். அவர் இன்னும் யோசித்தபடி இருந்தார்.

''எப்படி இருந்தால் என்ன? கேஸ் முடிந்து விட்டது. உங்களுக்கு இதைவிட அதிக வாய்ப்புக் கிடைத்திருக்க வேண்டும், உங்கள் ஆற்றலைக் காட்ட. ஆனால் இது ஒரு சிறிய கேஸ்; அந்த வடிகட்டின முட்டாள் இன்ஸ்பெக்டர்கூடச் சுலபமாக முடிவு கண்டு விட்டார்.''

பாய்ராட் தலை ஆட்டினார்.

''கேஸ் இன்னும் முடியவில்லை நண்பா. முத்துக்களை யார் களவாடினார்கள் என்று நாம் கண்டு பிடிக்கும்வரையில் அது முடியவும் முடியாது.''

''வேலைக்காரி செலஸ்டின்தான் திருடினாள் என்றாகி விட்டதே.''

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''ஏன்? முத்துமாலை அவளுடைய கட்டிலில் கண்டுபிடிக்கப்பட்டதே!''

''அடா, டா, டா'' என்றார் பாய்ராட் பொறுமை இழந்து: ''அவை முத்துக்கள் அல்ல.''

''என்னது?''

''போலி! இமிடேஷன் நண்பா!''

அதைக் கேட்டதும் எனக்கு மூச்சு நின்று விடும்போல் இருந்தது. பாய்ராட் அமைதியாகப் புன்னகை செய்து கொண்டிருந்தார்.

''அந்த அப்பாவி இன்ஸ்பெக்டருக்கு நகைகளைப் பற்றி ஒன்றும் தெரியாது என்பது தெளிவு. ஆனால் இப்போது ஒரு ரகளை நடக்கப் போகிறது, பார்.''

''வாருங்கள்!'' என்று அவர் கையைப் பிடித்து இழுத்தேன்.

''எங்கே?''

''ஒபல்சன் தம்பதிகளிடம் நாம் உடனே அதைச் சொல்ல வேண்டும்.''

''நான் வேண்டாம் என்று நினைக்கிறேன்.''

''ஆனால் பாவம், மிஸஸ் ஒபல்சன்...''

''நகை பத்திரமாக இருக்கிறது என்ற எண்ணத்தில் அமைதியாகத் தூங்குவாள்.''

''ஆனால், திருடியவன் நகையோடு தப்பி விட்டால்?''

''நண்பா! வழக்கம் போல் யோசனை இல்லாமல் பேசுகிறாய். மிஸஸ் ஒபல்சன் இன்று மாலை மிகவும் ஜாக்கிரதையாகப் பூட்டி வைத்த முத்துக்கள் போலி முத்துக்கள் அல்ல என்று உனக்கு எப்படித் தெரியும்? உண்மையான திருட்டு ஏற்கனவே நடக்கவில்லை என்று உனக்கு எப்படித் தெரியும்?''

''ஓ!'' — என்றேன் பிரமிப்புடன்.

''ரைட்!''—என்றார் பாய்ராட் முகம் ஒளிர. ''நடந்ததை அடியிலிருந்து ஆராய்வோம்.''

அறையிலிருந்து வெளியே வந்தோம். யோசிப்பவர் போல் அவர் சிறிது நின்றார். பிறகு நடைபாதையின் ஒரு மூலைக்குப் போனார். ஒவ்வொரு பகுதியிலும் பணியாற்றும் அறை வேலைக்காரிகளும் வேலையாட்களும் கூடுகின்ற அறைக்கு வெளியே நின்றார். மிஸஸ் ஒபல்சனின் அறை வேலைக்காரி அங்கே ஒரு சிறிய சபையே கூட்டியிருந்தாள்; தன்னுடைய சமீபத்து அனுபவத்தை அவள் விவரிக்க, மற்றவர்கள் சுவாரசியமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவள் ஒரு வாக்கியத்துக்கு இடையில் நிறுத்தினாள். பாய்ராட் வழக்கப்படி பணிவாய்க் குனிந்தார்.

''தொந்தரவு செய்வதற்காக மன்னிக்க வேண்டும். ஆனால் மிஸ்டர் ஒபல்சன் அறையை எனக்குத் திறந்து விட்டால் மிகவும் நன்றி உள்ளவனாய் இருப்பேன்.''

அவள் உடனே எழுந்தாள். அவளோடு மறுபடியும் வந்த வழியே நடந்தோம்.

ஒபல்சனின் அறை நடை பாதைக்கு மறுபுறம் இருந்தது. அதன் கதவு அவருடைய மனைவியின் அறையை நோக்கி இருந்தது. அறை வேலைக்காரி தன்னிடமிருந்த பொதுச் சாவியை எடுத்து அதைத் திறந்தாள். நாங்கள் உள்ளே போனோம்.

அவள் வெளியே புறப்பட்டபோது பாய்ராட் அவளைத் தடுத்தார்.

''ஒரு விநாடி. மிஸ்டர் ஒபல்சனின் சாமான்களுக்கு இடையில் இது மாதிரி ஒரு கார்டு பார்த்திருக்கிறாயா?''

அவர் ஒரு சாதா வெள்ளைக் கார்டை அவளிடம் நீட்டினார். நல்ல கிளேஸ் உள்ள கார்டு; பார்ப்பதற்கும் சாதாரணமாக இல்லை.

''இல்லை சார்; பார்த்ததாக எனக்கு நினைவில்லை. ஆனால் வேலைக்காரன்தான் ஆடவர்களின் அறைகளைக் கவனிப்பது வழக்கம்.''

''அப்படியா? தாங்க்ஸ்.''

பாய்ராட் கார்டை வாங்கிக் கொண்டார். அவள் போய்விட்டாள். பாய்ராட் சற்று நேரம் யோசித்தார். பிறகு தலையை மெல்ல அசைத்தார்.

''ஹேஸ்டிங்ஸ்! தயவு செய்து மணி அடி. மூன்று முறை — வேலைக்காரனைக் கூப்பிட.''

நான் மூன்று முறை மணி அடித்தேன். ஆவல் மீதூற.—அதற்குள் பாய்ராட் தரையில் இருந்த குப்பைக் கூடையைக் கவிழ்த்துக் கொட்டி அதிலிருந்தவற்றை வேகமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார்.

சில விநாடிகளில் வேலைக்காரன் வந்து சேர்ந்தான். அவனிடமும் கார்டு தந்து அதே கேள்வியைக் கேட்டார். ஒபல்சனின் சாமான்களுக்கு இடையில் இம்மாதிரிக் கார்டு பார்த்ததில்லை என்று அவனும் சொன்னான். பாய்ராட் நன்றி செலுத்தினார். அவன் போய் விட்டான்.

கவிழ்த்திருந்த குப்பைக் கூடையையும், கீழே கிடந்த குப்பைகளையும் தயக்கத்துடன் பார்த்தவாறு மனமில்லாமல் அவன் வெளியேறினான். வெளியேறும்போது பாய்ராட்

**நீச்சல் மன்னர்**
**நகைச்சுவை மன்னரைச் சந்தித்தபோது...**



“நீச்சலடிப்பதில் முக்கியமான விஷயம் என்ன?” என்று பாப்ஹோப் கேட்டபோது ஒலிம்பிக்கில் நீச்சல் போட்டிகளில் ஏழு தங்க மெடல்கள் வாங்கிய ஸ்பிட்ஸ் அளித்த பதில்: “நீரில் எப்படி முழுகாமலிருப்பது.”

டைம் - 'பாலி'

---

கூறிய சொற்களை அவன் கேட்காமல் இருந்திருக்க முடியாது.

“நெக்லேஸ் பெரிய தொகைக்கு இன்ஷ்யூர் செய்யப் பட்டிருந்தது...”

“பாய்ராட்! எனக்குத் தெரியும்!” என்று நான் கத்தினேன்.

“நண்பா, உனக்கு ஒன்றும் தெரியாது” என்றார் பாய்ராட்: “வழக்கம்போல் ஒன்றுமே தெரியாது — நம்பவே முடியவில்லை — ஆனால் நடந்திருக்கிறது. வா, நம் அறைக்குத் திரும்பலாம்.”

மௌனமாய்த் திரும்பினோம். அங்கே போனதும் பாய்ராட் மிக விரைவாக உடை மாற்றிக் கொண்டதைக் காண எனக்கு வியப்பாக இருந்தது.

“லண்டனுக்குப் போகிறேன்; மிக அவசரம்” என்றார் அவர்.

“ஏன்?”

“அவசியம் போக வேண்டும். உண்மையான வேலை - மூளையின் வேலை - முடிந்து விட்டது. முடிவு அது சரிதானா என்று உறுதி செய்து கொள்ள வேண்டும்; நெக்லேஸ் கட்டாயம் கிடைக்கும்! ஹெர்க்யூல் பாய்ராடை ஏமாற்ற முடியாது!”

அவருடைய அகம்பாவத்தால் சற்று அலுப்புற்ற நான், “உங்களுக்கு ஒரு நாள் பைத்தியம் பிடிக்கப் போகிறது!” என்றேன்.

“நண்பா! கோபித்துக் கொள்ளாதே. நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். நண்பனை உன்னையே நம்பியிருக்கிறேன்.”

“என்ன செய்ய வேண்டும்?” என்றேன் ஆவலுடன்.

“என் கோட்டின் — நான் இப்போது கழற்றின கோட்டின் கைகளைத் தூசுபோக 'பிரஷ்' செய்கிறாயா? பார், வெள்ளைப் பொடி அதில் கொஞ்சம் ஒட்டிக்கொண்டிருக்கிறது. அலங்கார மேஜையின் டிராயரை விரல்களால் துழாவினேனே, பார்த்தாயல்லவா?”

“இல்லை.”

“என் செய்கைகளை நீ கவனிக்க வேண்டும், நண்பா! என் விரலில் பொடி ஒட்டிக்கொண்டது அதனால்தான். கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டு அதைக் கோட் கையில் துடைத்து விட்டேன். ஒழுங்கு தவறிய வேலை. அப்படிச் செய்ததற்காக வருந்துகிறேன். சாதாரணமாக நான் அப்படி நிதானம் இழப்பதில்லை.”

“என்ன பொடி அது?” என்று கேட்டேன் பரபரப்புடன்.

“விஷம் அல்ல” என்றார் பாய்ராட், கண்களைச் சிமிட்டி. “உன்னுடைய கற்பனை சிறகடித்துப் பறப்பதைப் பார்க்கிறேன். அந்தப் பொடி பிரஞ்ச்சாக்.”

“பிரஞ்ச்சாக் பொடியா?”

“பெட்டி செய்கிறவர்கள், டிராயர்கள் சுலபமாக நகருவதற்காக அதைப் பயன்படுத்துகிறார்கள்.”

சிரித்தேன். “பொல்லாதவர்! பரபரப்பான செய்தி சொல்லப் போகிறீர்கள் என்று எதிர்பார்த்தேன்!”

“போய் வருகிறேன், நண்பா! உன் கோபத்திலிருந்து என்னைக் காப்பாற்றிக் கொள்கிறேன். பறந்து போகிறேன்!”

அவருக்குப் பின்னால் கதவு மூடிக்கொண்டது. எனைத்தோடும் அன்போடும் புன்னகை செய்தவாறு நான் அவருடைய கோட்டை எடுத்துக் கொண்டு பிரஷ்ஷை எடுக்கக் கையை நீட்டினேன்.

* * *

**ம**றுநாள் காலையில் பாய்ராடிடமிருந்து தகவல் ஒன்றும் வராததால் வெளியே காற்றாடப் போனேன். சில பழைய நண்பர்களைச் சந்தித்து, அவர்களோடு சிற்றுண்டி அருந்திவிட்டு, அவர்களுடைய ஹோட்டலிலேயே தங்கிவிட்டேன். பிற்பகலில், காரில் ஊர் சுற்றப் போனோம். ஒரு டயர் பொத்துக் கொண்டதால் திரும்புவதற்குத் தாமதமாகி நான் கிராண்ட் மெட்ரோபாலிடனுக்கு வரும்போது எட்டு மணிக்கு மேலாகி விட்டது.

நான் கண்ட முதல் காட்சி: மகிழ்ச்சியால் பூரித்த ஓபல்சன் தம்பதி இருவருக்கும் மத்தியில் வழக்கத்தை விடச் சிறுத்து விட்டதாய்த் தோன்றிய பாய்ராட் உட்கார்ந்திருந்தார்.

“என் நண்பா, ஹேஸ்டிங்ஸ்!” என்று உரக்கச் சொல்லியபடி அவர் பாய்ந்து வந்தார். “என்னைக் கட்டிக் கொள், எல்லாம் அற்புதமாக முடிந்து விட்டன!”

பாய்ராட் கட்டிக்கொள்ளச் சொல்வது அணியான பேச்சுதான்; அவர் என்னைச் சாதாரணமாகக் கட்டித் தழுவுவதில்லை.

“அதாவது...” என்று தொடங்கினேன்.

“நான் அதை அற்புதம் என்பேன்!” என்றாள் மிஸஸ் ஓபல்சன். அவளுடைய பருத்த முகம் முழுதும் புன்னகையால் மலர்ச்சியுற்றது: “எட், என் முத்துக்களைப் பாய்ராட்டைத் தவிர வேறு யாராலும் மீட்டுத் தர முடியாது என்று சொன்னேனே, இல்லையா?”

“சொன்னாய், அன்பே, சொன்னாய். நீ சொன்னது ரொம்ப சரி.”

ஒன்றும் விளங்காமல் திகைத்துப் பாய்ராடைப் பார்த்தேன்.

“என் நண்பன் ஹேஸ்டிங்ஸ், நீங்கள் இங்கிலாந்தில் பேச்சுவழக்கில் சொல்வது போல்

இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3




இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்

# நிரோத்



லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான
கருத்தடைச் சாதனம் நிரோத்.

davp 71/440

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது

கடற்கரையில் இருக்கிறான்—அதாவது குழம்பியிருக்கிறான். நண்பா! உட்கார். இவ்வளவு மகிழ்ச்சியாக முடிவுற்ற விவகாரம் பற்றி முழுதும் சொல்லுகிறேன்.''

''முடிந்த விவகாரமா?''

''ஆம். அவர்கள் கைது செய்யப்பட்டு விட்டார்கள்.''

''எவர்கள் கைது செய்யப்பட்டார்கள்?''

''அறை வேலைக்காரியும் வேலைக்காரனும் தான்! உனக்குச் சந்தேகம் உண்டாகவே இல்லையா? பிரஞ்ச்சாக்கைப் பற்றிச் சொல்லி விட்டுப் பிரிந்த பிறகும் உனக்குச் சந்தேகம் உண்டாகவில்லையா?''

''பெட்டி செய்கிறவர்கள் அவற்றைப் பயன்படுத்துவதாய்ச் சொன்னீர்கள்.''

''ஆம், டிராயர்கள் சுளுவாய் முன்னும் பின்னும் நகருவதற்காக அவர்கள் பிரஞ்ச்சாக் பொடியைப் பயன்படுத்துகிறார்கள். அந்த அடுக்கு டிராயர் பெட்டியின் கீழ் டிராயர் சத்தம் இல்லாமல் நகர வேண்டும் என்று யாரோ விரும்பியிருக்கிறார்கள். அது யாராக இருக்கும்? அறை வேலைக்காரியாகத் தான் இருக்க முடியும் என்று தெளிவாய்த் தெரிகிறதே. மிகவும் கெட்டிக்காரத்தமான திட்டம் — ஹெர்க்யூல் பாய்ராட்டின் கண்களுக்குக் கூட அது பார்த்த உடனே புலப்பட்டுவிடவில்லை!

''கவனமாய்க் கேள். அவர்கள் எப்படித் திருடினார்கள் என்று சொல்கிறேன்.

''வேலைக்காரன் காலியான பக்கத்து அறையில் காத்திருக்கிறான். செலஸ்டின் அறையிலிருந்து வெளியே போகிறாள். மின்னல் வேகத்தில் அறை வேலைக்காரி டிராயரைத் திறக்கிறாள், நகைப் பெட்டியை எடுக்கிறாள், டிராயரை மூடிவிட்டு, நகைப் பெட்டியைப் பக்கத்து அறையில் உள்ள வேலைக்காரனிடம் தந்துவிடுகிறாள். வேலைக்காரன் முன்பே திருட்டுச் சாவி தயாரித்து வைத்திருக்கிறான்; அவன் அதைக் கொண்டு நகைப் பெட்டியை மெதுவாய்த் திறக்கிறான்; முத்துமாலையை எடுத்துக்கொண்டு நகைப் பெட்டியை முன்போலப் பூட்டிவிட்டுக் காத்திருக்கிறான். செலஸ்டின் மறுபடியும் அறையிலிருந்து வெளியே போகிறாள். உடனே .....விர்ர்ர்ர்ர்ர்!... நகைப் பெட்டியை அறை வேலைக்காரி வாங்கி மறுபடியும் டிராயரில் வைத்து விடுகிறாள். — எல்லாம் ஒரு நொடியில்!

''மிஸஸ் ஓபல்சன் அறைக்கு வருகிறாள். திருட்டு வெளிப்படுகிறது. அறை வேலைக்காரி சோதனை செய்யப்படுகிறாள். அவள் ஒரு பாவமும் அறியாதவள் என்ற நல்ல பெயரோடு அறையிலிருந்து வெளியே போகிறாள். போலி முத்து மாலையை அவர்கள் முன்பே தயாரித்து வைத்திருக்கிறார்கள். அறை வேலைக்காரி பிரஞ்சுப் பெண்ணின் படுக்கையடியில் காலையிலேயே பதுக்கி வைத்து விட்டாள்.—திட்டத்தில் மேதாவித்தனமான அம்சம் இது தான்! ஆ!''

''ஆனால், நீங்கள் ஏன் லண்டனுக்குப் போனீர்கள்?'' என்று கேட்டேன்.

''கார்டு காட்டிலேயே நினைவிருக்கிறதா?''

''இருக்கிறது. அது அப்போதும் குழப்பியது; இப்போதும் என்னைக் குழப்புகிறது...''

நான் மிஸ்டர் ஓபல்சனைப் பார்த்துத் தயங்கினேன்.

பாய்ராட் மனமாரச் சிரித்தார்.

''ஒரு தந்திரம்! வேலைக்காரனுக்காக... கைரேகை நன்றாகப் பதியும்படி தயாரிக்கப்பட்ட கார்டு அது. அதை எடுத்துக்கொண்டு நான் நேரே ஸ்காட்லாண்ட் யார்டுக்குப் போனேன். நம்முடைய பழைய நண்பர்-இன்ஸ்பெக்டர் ஜாப்பைத் தேடிப் பிடித்து எல்லா விவரங்களும் சொன்னேன். நான் சந்தேகப்பட்டது சரிதான்; இரண்டு கை ரேகைப் பதிவுகளும், இரண்டு பிரபல நகைத் திருடர்களுடையவை. சிறிது காலமாய்ப் போலீஸ் அவர்களைத் தேடிக் கொண்டிருக்கிறது. ஜாப் என்னோடு வந்தார். திருடர்கள் கைது செய்யப்பட்டார்கள். முத்துக்கள் வேலைக்காரனிடம் இருந்தன. புத்திசாலியான ஜோடி! ஆனால் ஒழுங்கு இல்லாததால் தோல்வி அடைந்தார்கள்... ஹேஸ்டிங்ஸ்! குறைந்தபட்சம் நூறு தடவைகளாவது சொல்லியிருப்பேனே, ஒழுங்குமுறை இல்லாமல்...''

நான் குறுக்கிட்டுக் கேட்டேன்: ''ஆனால், அவர்களுடைய ஒ ழு ங் கு மு றை எங்கே தவறியது?''

''என் நண்பா, அறை வேலைக்காரியாகவும் வேலைக்காரனாகவும் ஓரிடத்தில் வேலைக்குச் சேருவது நல்ல பிளான். ஆனால், வேலையில் கவனக் குறைவாக இருக்கக் கூடாது. காலியான ஓர் அறையை அவர்கள் தூசி போகத் துப்புரவு செய்யவில்லை. அதனால், அவன் இரு அறைகளை இணைக்கும் கதவுக்குப் பக்கத்தில் உள்ள சின்ன மேஜையின்மீது நகைப் பெட்டியை வைத்தபோது சதுரமான அடையாளம் பதிந்தது...''

''ஞாபகம் இருக்கிறது!'' என்று கத்தினேன்.

''அதற்கு முன்பு என்னால் ஒரு முடிவுக்கும் வர முடியாமல் இருந்தது. தூசியில் படிந்த பெட்டிக் குறியைப் பார்த்ததும், எனக்கு உண்மை தெரிந்து விட்டது!''

ஒரு விநாடி மௌனம் நிலவியது.

''எனக்கு என் முத்துக்கள் திரும்பக் கிடைத்து விட்டன!'' — என்றாள் மிஸஸ் ஓபல்சன் குதூகலத்துடன்.

''சரி, சாப்பிடப்போகலாமா?'' என்றேன்.

பாய்ராட் என்னோடு வந்தார்.

''உங்களுக்கு இது மற்றொரு புகழாரம்.''

பாய்ராட் அமைதியாகச் சொன்னார்: ''எ ன க் கு ப் புகழாரமா? இன்ஸ்பெக்டர் ஜாப்பும், உள்ளூர் இன்ஸ்பெக்டரும் களவைக் கண்டுபிடித்த புகழைத் தங்களுக்குள் பங்கு போட்டுக் கொள்வார்கள். ஆனால்...'' என்று அவர் தம் பையைத் தட்டிக் காட்டினார்: ''மிஸ்டர் ஓபல்சன் கொடுத்த ஒரு செக் இங்கே இருக்கிறது. நண்பா, இந்த வார இறுதி நாம் திட்டமிட்டபடி கழியவில்லை. அடுத்த வார இறுதியில் இங்கே வருவோமா? செலவு என் பக்கம்... என்ன சொல்கிறாய்?''

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

ஆண்மை—
திடவடிவம்,
தீரம், திறமை,
கம்பீரம்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த
படைப்பு
'எஸ்டர்காட்'



எஸ்டர்காட்®

ஆண்மகன் இதோ ஆளவருகிறான். எங்கும் அவன் செங்கோல். 'எஸ்டர்காட்' அவன் உடுப்பு.
'எஸ்டர்காட்' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் சூட்டிங்குகள். தவிர, 'மெஃப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலைகள், பாலியெஸ்டர் இழைகலந்த உடுப்புத் துணிகள்; 'டெரோஸெல்' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் ஷர்ட்டிங்குகள்.

**மபத்லால் க்ரூப்**

AIYARS-M.300 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)